வீரமாமுனிவர் எழுத்தாளர் கழக வெளியீடு - 5



# தமிழகத்தில் ஒளி

அருள்தாஸ், சேசு சபை





முனிவர் எழுத்தாளர் கழக
பெஸ்கி காலேஜ் தபால் நிலையம்,
திண்டுக்கல்—3.

# முன்னுரை

இந்நூலை எழுதத் தூண்டியது ஒரு சிறு உரையாடல். புகழ்பெற்ற மங்களூரினர் ஒருவருடன் திருச்சியில் உரையாடிக் கொண்டிருக்கும்பொழுது தமிழகக் கிறீஸ்தவரைப்பற்றி அவர் கூறியதொன்று: "மங்களூரிலோ, இந்தியாவின் மற்ற இடங்களிலோ, கிறீஸ்தவர் இந்தியப் பண்பாட்டைப் பின்பற்றுவதை நான் கண்டதில்லை. ஆனால் இங்கேயோவெனில் தமிழ்க் கிறீஸ்துவப் பண்பாட்டிற்கும் தமிழ்ப் பண்பாட்டிற்கும் வேறுபாடு இல்லாமைகண்டு வியப்புறுகிறேன்". இந்த வியப்பூட்டும் விந்தையைப் புரிந்து, நம் தமிழகத்தில் கிறீஸ்துவின் ஒளியைப் பரப்பிய நம் தந்தை தத்துவபோதகரது புகழைப் பரப்புவதே இந்நூலின் நோக்கம்.

இந்நூலின் நோக்கம் வரலாறு எழுதுவது மட்டுமன்று. ஒரு வரலாற்றை வரலாருகவும் எழுதலாம்; ஆராய்ச்சியாகவும் எழுதலாம். நடந்ததைமட்டும் நடந்தவாறே கால முறைப்படிக் கூறின் அது வரலாறு. நடந்தவற்றை நடந்தவாறே கால முறைப்படிகூறி அவ்வரலாற்றிலிருந்து ஓர் உண்மையைக் கவ்வி எடுத்து வெளிக்கொணர்வது ஆராய்ச்சி. தத்துவபோதகர் வாழ்க்கையில் பொதிந்த உண்மை ஒன்று உள்ளது. அது என்றும் நின்று உதவும் உண்மை. அவ்வுண்மை பலதரத்தார்க்கும் உதவும். அதை வெளிக்கொணர்வதே ஆசிரியரது நோக்கமாதலில் சில இடங்களில் வரலாற்றைவிட்டு ஆராய்ச்சியில், தத்துவத்தில் புகவேண்டி நேர்ந்துள்ளது. அவ்வுண்மையைத் தமிழ்மகன் ஒவ்வொருவரும் அறிந்து போற்றித் தத்துவபோதகருக்குத் தன் இதயத்தில் என்றும் குன்ரு இடம் ஒன்று அளித்தால், நூலாசிரியர் என்றென்றும் கடமைப் பட்டிருப்பார்.

இந்நூலை நல்ல முறையில் வெளிவர உதவிய நண்பர் அனைவருக்கும் என் உளமார்ந்த நன்றி. செண்பகனூர் ஆய்வகத்தைப் பயன்படுத்த அனுமதித்துத், தம் வரலாற்று ஆராய்ச்சிகளையும் எனக்களித்து, ஆங்கிலத்தில் தாம் எழுதிய "Life of De Nobili" யையும் எனக்குத் தந்து, ஊக்கி உதவிய சங். சோலியர் சுவாமிகளுக்கு என் மனமார்ந்த நன்றி. அவரது நூல் இல்லையேல் இந்த நூலும் வெளிவந்திருக்காது. இன்னும் அச்சுப்பிரதிகளைப் பன்முறை வாசித்துத் திருத்தி உதவிய என் சேசு சபைச் சகோதரர் அனைவருக்கும், சங். மொருயிஸ் அடிகளுக்கும் என் நன்றி உரித்தாகுக.

இஞ்ஞாசியார் திருநாள்
1962

அ. அருள்தாஸ், சே. ச.

# உள்ளுறை

முதற் பாகம்

# மூடிய கதவு

## 1

## கேள்வி

இருபதாம் நூற்றுண்டில் தத்துவ போதகர் பற்றியும் அவருடைய முறைகளைப்பற்றியும் பலரும் பேசுவது காதில் விழுகிறது. சூழ்நிலையைத் தழுவிச் செல்ல வேண்டும் என்று பேசுபவரெல்லாம் தத்துவ போதகரைத் தம் பேச்சில் கொண்டு வருகின்றனர். இந்தியாவின் வேத போதக முறைகளைப் பற்றிப் பேசும் எந்தப் பாப்பரசரும், சேசு சபைப் பெரிய சுவாமிகளும் இத் தத்துவ போதகரது பெயரை உச்சரிக்காது போவதில்லை. இஃதிவ்வாறெனின் இத்தத்துவ போதகர் யார்? இவர் செய்தது என்ன? என்ற கேள்வி எழத்தான் செய்கிறது.

*18—19*–ஆம் நூற்றுண்டுகளில் வாழ்ந்த கிறீஸ்துவர்களும், குருக்களும் அப்பெயரை அன்புடன் நினைவிலிருத்தி வந்துள்ளனர். புனித அருளானந்தய்யரது வாழ்க்கையில் இது தெளிவாகத் தென்படுகிறது. இது வீரமாமுனிவரின் நூல்களிலும் காணக்கிடக்கிறது. "மாருது தவமும், பொய்யாத நூலும், குறையாத அறங்களும் வடிவாகக்கொண்டு தோன்றித் தத்துவ போதகர் சுவாமி எவருக்கு முன்னே ஆண்டவரால் அனுப்பப்பட்டு, விடியற்காலத்து ஒளிபோல் இங்கே நெடுநாள் விளங்கி........" என எழுதுகிருர் வீரமாமுனிவர். இத்தத்துவ போதகர் சுவாமி யார்? செய்தது என்ன? என்ற கேள்வி எழத்தான் செய்கிறது.

*17*-ம் நூற்றுண்டில் கூட, போர்த்துக்கலில் அந்நாட்டரசனும், அங்கிருந்த தலைமை விசாகரும், அவரைப்பற்றி விவாதித்தனர். கோவையில் ஒரு பெரும் மகாநாடு கூடி

அவருடைய முறைகளைத் தர்க்கித்தது. திருச்சபையின் தலைநகராம் உரோமை நகர் முழுதும் அவ்ரைப்பற்றிய ஒரே பேச்சு. உலகத்தின் கவனத்தையே தம்பால் இழுத்த அந்த மனிதன் யார்? அவர் செய்தது என்ன? என்ற கேள்வி எழத்தான் செய்கிறது.

இவ்விவாதங்களில் மதுரை அந்தணர் அவரை எதிர்க்கின்றனர். சேசு சபைப் பெரிய சுவாமிமார் ஞான ஸ்நானம் கொடுக்கத் தடையுத்தரவு பிறப்பிக்கின்றனர். கோவை அதிமேற்றிராணியாரே அவரை வேத விரோதி என அழைத்தாரென்றால் சொல்லவா வேண்டும். ஐரோப் பாவின் வேத சாஸ்திரிகள் அவர் இந்துவாக மாறி விட்டார் என்று கூறுமளவு எதிர்ப்புப் பெருகியது. இத்தனைபேர், இவ்வளவு பெரிய அதிகாரிகளின் எதிர்ப் பைப் பெறக்கொடுத்துவைத்த அந்தப் பாக்கியவான் யார்? அவர் செய்தது என்ன? என்ற கேள்வி எழத்தான் செய்கிறது.

இவ்விவாதங்களுக்கு முடிவு கூறியவர்: சேசு சபை முழுவதற்குமே பெரிய சுவாமியார் அக்வவீவா அடிகள், விட்டலெஸ்கி அடிகள். அது மட்டுமா? இல்லை. பாப் பரசரே பேசுகிறார். ஐந்தாம் சின்னப்பரது ஒரு கடிதம் போதாதென்று, 15-ம் கிரகோரியார் ஒரு சட்டமே இயற்று கிறார். பாப்பரசரின் கவனத்தையே தம்பாலிழுத்த இந்த மனிதன் யார்? அவர் செய்தது என்ன? என்ற கேள்வி எழத்தான் செய்கிறது.

இந்தியாவின் மீட்பே அந்த மனிதனுடன் கட்டுண்டு கிடந்தது. இதற்கு அத்தாட்சி: நானல்லன், வேறு ஒரு சாதாரண மனிதனல்லன். இராயப்பரின் பிரதிநிதியாகிய பாப்பரசரே. இந்தியாவை மீட்க வந்த மனிதன் யார்? அவர் செய்தது என்ன? என்ற கேள்வி எழாவிட்டால் வேறு கேள்வியே எழ முடியாது.

இக்கேள்விகட்கு விடை காண்பதற்கு முன்னர் கவ னிக்கப்பாலது ஒன்று. ராபர்ட் தெ நோபிலிக்கு முன்

நின்ற கேள்வி என்ன என்பதை உணர்வதே. அந்தக் கேள்விக்கு விடையாக அமைந்தது அவருடைய வாழ்வு முழுவதும். எனவே அந்தக் கேள்வியின் சந்தர்ப்பத்தி லன்றி அவரது வாழ்வைப் புரிந்துகொள்வது கடினம்.

அந்தக் கேள்வி என்ன? அந்தக் கேள்வியை இந் நூலில் முதற்பாகத்தில் தெளிவாக விளக்குவோம். இப் பொழுது சுருக்கிச் சிறிது மட்டுமே கூறுவோம்.

முதல் நூற்றாண்டில் புனித தோமையார் பலரையும் கிறீஸ்துவின் ஒளியிற் சேர்த்தார். அதன் பின்னர் நம் சமயம் மக்களிடையே ஏற்கப்படவில்லை. பின்னர் புனித சவேரியார் வந்தார். அவரும் கடற்கரையோரத்திலுள்ள பரவரையும் உள்நாட்டில் சில கீழ்க்குலத்தாரையும் மட் டுமே மனந்திருப்பியிருந்தார். எண்ணிக்கையில் பலரிருப்பி னும் உள்நாட்டு உயர்குல மக்களை அவர் மதமாற்றவில்லை. அவர் சென்றபின் நோபிலி காலம் வரை உள்நாட்டில் ஒரு வருமே மனமாறவில்லை. மனமாற்றத்திற்குப் பதிலாக வெறுப்பே ஆட்சி செலுத்தியது. அவர்கள் நம் சமயத் தையே அடியோடு வெறுத்தொதுக்கினர்; விரும்பி ஏற்க வில்லை.

இதன் காரணம் என்ன? என்பதே அக்கேள்வி. ஏன் வெறுத்தனர்? கிறீஸ்துவச் சமயத்தை அவர்கள் வெறுத்ததின் காரணம் அச் சமயமன்று. அச்சமயத்தைச் சரிவர அறியும் யாருமே அதனை விரும்புவர். அதனை வெறுப்பது முடியவே முடியாத காரியம்.

எனினும் அதனை வெறுக்கின்றனர். இதன் காரணம் என்ன? சமயமும், அவர்கள் வெறுக்கும் மற்றொன்றும் இணைந்து காணப்படுகின்றன. அந்த மற்றொன்று எது? கிறீஸ்துவிடமினின்று இந்தியாவைப் பிரிக்கும் அந்த மதில் எது? ஏன் இந்திய உள்ளங்களின் கதவு அடைக் கப்பட்டிருக்கின்றது?

இந்தக் கேள்விக்குப் பலரும் பல விடை அளித்தனர். நோபிலி தந்த விடை புதியது. பழையதும்கூட. அவ்விடை

எது? எவ்விதத்தில் புதியது, எவ்விதத்தில் பழையது என்பது இனிவரும் பக்கங்களில் தெளிவுறும்.

அந்த விடையை யாவரும் அறிவது அவசியம். ஏன்? அந்தக் கேள்வி அன்றுமட்டும் நிற்கவில்லை. இன்றும் நிற்கின்றது. எனவே அந்த விடையும் இன்றும் உதவும். அந்தக் கேள்வி ஒவ்வொருவர் முன்னும் நிற்கிறது. கிறீஸ்துவர் முன்னும் இந்து நண்பர் முன்னும் நிற்கின்றது. எந்த விதத்தில் இந்து நண்பர் முன் நிற்கிறது என்பது புத்தகத்தின் இரண்டாம் மூன்றும் பாகங்களில் இடம் பெறும். குருக்கள் முன்னும் இல்லறவாசிகள் முன்னும் நிற்கிறது. எனவே அந்த விடை என்றும் யாவருக்கும் தேவையான விடை.

# 2

## ஆண்டவர் இட்ட வித்து

இத்தாலி நாடு. உரோமாபுரி, செல்வர் ஒருவரின் அரண்மனை. இங்கே 1577-ஆம் ஆண்டில் செப்டம்பர் மாதத்தில் இரண்டாம் நாளில், பீயர் பிரான்ஸிச்கோ என்ற பெருங்குடிச் செல்வருக்கும் சிஞ்ஞோரா க்ளாரின் என்ற மங்கையர் திலகத்திற்கும் முதல் மகனாகப் பிறந்தார் ராபர்ட்.

அக்குழந்தையே வரவிருக்கும் தத்துவ போதகரென ஒருவரும் ஐயுறவில்லை. ஆனால் பையன் வளர வளர, அவன் அரியன சாதிக்கும் பெருந்தியாகியாக மாறுவான் என எதிர்பார்த்தனர். அவன் ஒரு கர்தினாலானால் ஒருவேளை ஆண்டவர் பாப்பரசராக உயர்த்துவார் என்பது அவர்களது நம்பிக்கை.

இந்த நம்பிக்கைக்கு ஒரு பலமான அடி விழுந்தது. சென்ற எட்டாண்டுகளிலும் கல்வியில் தேர்ந்திருந்த இளைஞன் ராபர்ட் சேசு சபையில் சேர விரும்பினான்.

சேசு சபையிலா? அங்கேதான் மேற்றிராணியார், பாப்பரசராக ஆகும் எல்லா வகை விருப்பத்தையும் ஆண்டவருக்கு ஒப்புக்கொடுக்க வேண்டுமே; பாவம்; பெற்றோரின் ஆசைத் தீயை அணைக்க முயல்கிறான் பையன்.

ஆனால் அந்தத் தீ அவனையே சுட்டது. தம் மனக் கோட்டையைத் தகர்க்க விரும்பிய சிறுவனின் விருப்பத்திற்கு அவர்கள் இசையவில்லை. சேசு சபையில் சேர அனுமதி கிட்டவில்லை. பதினேழு வயதிலேயே போர் துவங்கிற்று.

உரோமாபுரியில் தன் எண்ணம் நிறைவேறாது என்பதை உணர்ந்த ராபர்ட் ஒருநாள் அதைவிட்டு ஓட்டம் பிடித்தார். வீட்டில் ஒருவருக்கும் தெரியாது. பிள்ளையைக் காணாத பெற்றோர் நாடெங்கும் ஆளனுப்பினர். இத்தாலியிலேயே வலைபோட்டுத் தேடினர்.

தப்பி ஓடிய ராபர்ட் நேபிள்ஸ் நகர் சேர்ந்தார். அங்கே ஆன் கரேபா என்ற சீமாட்டியிடம் தஞ்சம் புகுந்தார். தான் இன்னாரென்று அவளிடம் கூறாது, தன் விருப்பத்தையும், பெற்றோரின் மறுப்பையும் எடுத்துக் கூறினார். அச்சீமாட்டி இளைஞனின் சிறிய உருவத்தில் ஒரு பெருமகன் குடியிருப்பதைக் கூர்ந்துணர்ந்தாள். தேவையான கேள்விகளை விடுத்து அவருக்கு ஒரு தாயாக மாறினாள். அவளது உதவியால் தொடர்ந்து கல்வி பயின்றார். இவ்வாறு இரண்டு ஆண்டுகள் உருண்டோடின.

மறைந்த வாழ்க்கை அதிக நாள் நீடிக்கவில்லை. பெற்றோர் அனுப்பிய உளவர் ஒருவர் ராபர்ட்டை அடையாளம் கண்டுவிட்டார். சீமாட்டியிடம் சென்று பேசினார். தான் தஞ்சம் அளித்த இந்த ராபர்ட்டின் குடும்பம் தெ நோபிலி குடும்பம் எனக் கேள்வியுற்ற அவளது வியப்பிற்கு எல்லையில்லை. ராபர்ட்டை ஒரு புனிதராகப் போற்றி, தாயின் வாஞ்சையுடன் அடியாளின் வணக்கத்தையும் கூட்டினாள். அது மட்டுமன்று. அவரது விருப்பத்தை மதித்து அதனை நிறைவேற்றும் வீராங்கனையாகவும் மாறினாள். பேனா முனையால் போர் தொடுத்தாள்.

ராபர்ட்டின் பெற்ருேர் ராபர்ட்டிற்குச் சேசு சபையில் சேர அனுமதி அளித்தனர்.

ராபர்ட் நேபிள்ஸ் நகரின்கண் அமைந்த சேசு சபை நவசந்நியாசமடத்தில் சேர்ந்து படித்தார். 1599-ஆம் ஆண்டில் வெளிநாடு சென்று வேதபோதகராக அனுமதி பெற்ருர். குருப்பட்டம் பெற்று இந்தியாவிற்குப் புறப்படு முன் மீண்டும் எதிர்ப்பு. ஆனல் அக்வவீவா அடிகளே (சேசு சபைப் பெரிய சுவாமியார்) தலையிட்டு அமைதிப் படுத்தினர்.

1603-இல் ராபர்ட் இத்தலியைவிட்டுப் போர்த்துக் கல் சென்ருர். அங்கிருந்து 1604-ஆம் ஆண்டு இராஜப் பிரதிநிதியுடன் இந்தியா நோக்கிப் புறப்பட்டார். பற்பல துன்பங்கட்கிடையே 1605-ஆம் ஆண்டு மே மாதம் இருப தாம் நாள் இந்தியத் திருநாட்டில் கால் வைத்தார்.

கோவாவில் வந்தடைந்தவர் உடனே நோய்வாய்ப் பட்டார். உடல் தேர்ந்ததும் முத்துக்குளித்துறையில் வேலை. சில மாதங்கழிந்ததும் அங்கே மாகாணப் பெரிய சுவாமியார் லெயேர்சியோ அடிகள் அவரைக் காண வந்தார்.

இந்த லெயேர்சியோ அடிகள் யார்? இவர் நம் ராபர்ட் அடிகளுக்கு இறுதிவரை ஆறுதலளித்து ஊக்குவித்தவ ராகையின் அவரைப்பற்றிச் சிறிது கூறவேண்டும்.

1557-ஆம் ஆண்டில் ஓர்த்தா என்னுமிடத்தில் பிறந்த ஆல்பர்த் லெயேர்சியோ 1576-இல் சேசு சபையைச் சார்ந்து 1579-இல் இந்தியா வந்தடைந்திருந்தார். நவ சந்நியாசிகளின் குரு, சால்செட் தீவின் பெரிய சுவாமியார், மேற்பார்வையாளர் போன்ற பல பொறுப்பான பதவிகளை வகித்தவர். அவர் ஒரு தியாகி. அத்தியாகத்தின் ஊற்று ஆன்மதாகம், அத்தியாகத்தின் விளைவு துணிவு, துன்பக் கடலையே எதிர்த்து நிற்கும் வல்லமை கொண்டவர்.

தனது மேற்பார்வை முடிந்த பின்னர் 1605 நவம்பரில் நோபிலி சுவாமியைப் பார்க்கச் சென்ருர். "கடற்கரை ஓரத்தில் போதித்த காலம் போதும். போர்த்துக்கீசியப் பலத்தினுல் மட்டும் வாழ்வது போதாது. உள் இந்தியாவில் கிறீஸ்துவை எதிர்க்கும் மதில் எது? அறியாமையா? அறியாமையால் விளைந்த அச்சமா? மத வெறியா? இன வெறியா? கிறிஸ்துவிற்கும் இந்தியருக்குமிடையே நின்றது ஒரு பெரும் மதில். அதை தகர்த்தே ஆகவேண்டும். யார் இதைச் செய்வார்?" என்ற கேள்விகள் லெயேர்சியோவின் உள்ளத்தில் அப்பொழுது சுழன்று கொண்டிருந்தன.

## 3

## மதுரையில்

**சுவாமி ராபர்ட்த்தோ:—** அப்படியானுல் நாம் மதுரைக்குப் போக வேண்டுமா?

**சுவாமி லெயேர்சியோ:—** நிச்சயமாக, மதுரையையும் அதன் நிலையையும் நீங்களே அங்குச் சென்று பார்த்துக்கொள்ளலாம். ஆனுல் நான் உங்களை அங்கே எதற்காக அனுப்புகிறேன் தெரியுமா?

**சுவாமி ராபர்ட்த்தோ:—** அங்குள்ள கத்தோலிக்கரைக் கண்காணித்து மற்றவர்களைக் கிறீஸ்துவின் அடியில் சேர்ப்பதற்குத்தானே!

**சுவாமி லெயேர்சியோ:—** ஆமாம். பின்னது அவ்வளவு சுலபமன்று. இதோ பாருங்கள் பத்துப் பதினேரு ஆண்டுகளாக இந்த இடத்தில் சுவாமி கொன்சாலோ பெர்நாந்தெஸ் வேலை செய்து வந்துள்ளார். எனினும் அங்குச் சென்று குடியிருக்கும் முத்துக் குளித்துறைக் கிறீஸ்துவர்களைத் தவிர மற்ருெருவர் எவரும் மதமாறியதில்லை. மதமாற்றமே கிடையாது. அந்தவிடத்திலும், இன்னும் மற்ற உள்நாட்டு இடங்களிலும் கிறீஸ்துவிற்குக்

கதவு அடைபட்டிருக்கிறது. கிறீஸ்துவிற்கு அந்தக் கதவைத் திறப்பதே உமது கடமை. மற்றவர்க்கும் கிறீஸ்துவிற்கும் இடையே உள்ள மதிலைக் கண்டு அதைத் தகர்ப்பதே உமது கடமை. என்ன?

சுவாமி ராபர்ட்த்தோ:— இதோ என்னாலியன்ற அளவு இந்தச் செயலிற்கான முயற்சி செய்வேன். அப்படியானால் நாம் என்றைக்குப் புறப்படலாம்?

சுவாமி லெயேர்சியோ:— இதோ மதுரையில் பணியாற்றி வந்த கொன்சாலோ சுவாமிகள் இங்கேதான் நம்முடன் இருக்கிறார். நாளையே நாமனைவரும் புறப்படுவோம்.

இந்தக் கோன்சாலோ சுவாமிகள் யார்? இவர்தான் மதுரை மிஷனில் பணியாற்றிய சுவாமி. இவர் 1595-ஆம் ஆண்டில் மதுரையை அடைந்தார். அங்கு ஏற்கனவே வேலை பற்றிக் குடியிருந்த முத்துக்குளித்துறைக் கிறீஸ்துவர்களைக் கண்காணித்து வந்தார். கிறீஸ்துவர்களின் தொகை மிகச் சிறிதே ஆனதால், இவர்க்கு மற்றொரு வேலையும் இருந்தது. போர்த்துக்கீசியருக்கும் நாயக்கருக்கும் இருந்த குதிரை வியாபாரத்தில் இவர்தான் தரகர். தூதுவர் என்ற பெயரால் மன்னனின் மதிப்பு இவர்க்கிருந்ததே தவிர, ஆண்டவன் குரு என்பதனாலன்று. மதுரையில் ஒரு மருத்துவ விடுதியமைத்து அதையும் திறம்பட நடத்தி வந்தார் கொன்சாலோ சுவாமிகள்.

சுவாமிகளின் ஆன்மதாகம் எதற்கும் குறைந்ததன்று. மன்னவன் முன்னரே பன்முறைத் தம் மதம், தம் கடவுள் முதலியவற்றைப் பற்றிக் கூற முனைந்துள்ளார். நாயக்க மன்னர், இவர் இறைவனைப் பற்றிப் பேச முனைந்தாரோ என்னவோ, அந்தப்புரத்திற்குச் சென்றுவிடுவான். ஒரு முறை எவ்வாறோ அரசனே இவரைத் தான் கும்பிடும் தெய்வத்தைப் பற்றியும் கொண்ட கொள்கைகளைப் பற்றியும் பேசுமாறு கேட்டான். இவரில் தூங்கிக் கிடந்த நம்பிக்கை மீண்டும் எழுந்தது. ஆனால் பாவம்;

இவர் துவக்குமுன்னரே அரசனுக்கு அருகேயிருந்த அந்தணர் அவரிடம் இதைப்பற்றிப் பேசாதிருக்குமாறு குறிக்கவே, அரசன் பேச்சை நிறுத்திவிட்டான். இதெல்லாம் ஏனென்று கேட்டால், கொன்சாலோ சுவாமிகள் அறியாமையால் விளைந்த விளைவு என்பார். இது உண்மையா?

பன்முறை அவர் இந்நாட்டில் அழிவுறும் இவ்வுலகை விடுத்து அழியாத இறைவனையும் மறுவாழ்வையும் பற்றிச் சிந்தித்துவந்த சீரிய மனிதர்களைக் கண்டார். அவர்களின் நற்பண்புகளைக் கண்டு அடிகள் அவர்களிடம் "பரங்கிக் குலம் புகுந்தால் என்ன, நீங்கள் நித்திய சீவியம் பெறுவீர்களே" என உரைத்தார். இவரைக் கண்டாலே ஒதுங்கிய அவர்கள் இக்கேள்வியைக் கேட்டவுடனேயே அவரை ஒரு முறை முறைத்துப் பார்த்துவிட்டுத் தாம் வந்த வழியை நோக்கினர். ஏன் மக்கள் அவரை வெறுக்கின்றனர்? எதற்காக ஒதுக்குகின்றனர்? அறியாமை என்றே கருதி வந்தார் கொன்சாலோ சுவாமிகள். அவர் எண்ணியது சரியா?

மற்றுமொரு முறை, மதுரை அரசனின் வேலையாட்களில் ஒருவன் அவரை "நீர் பரங்கிக் குலத்தவராதலால், சமயம், கடவுள், ஒழுக்கம், இவைபற்றிப் பேசலாகாது" என்ருன். அடிகள் தான் வந்த வேலையை மறந்தவரல்லர். "என் மார்க்கத்தைப் பற்றிப் பேசி, மக்களை மதமாற்ற எனக்கு அனுமதி இல்லாவிடில் மதுரையில் நானிருக்க வேண்டிய தேவையே இல்லை" என விடையிறுத்தார். இச்செய்தி நாயக்கனின் காதுக்கெட்டியது. சினமுற்ற வேந்தன், "மதமாற்றமே இப்பரங்கியின் கருத்தானல், கூடியசீக்கிரம் ஊரை விட்டு வெளியேறலாம்" எனத் தன் கருத்தைத் தெரிவித்தான். தவறு யாருடையது?

இக்கேள்விகளைப் புரிந்துகொள்ள அன்றைய மதுரையை ஒரு கண்ணேக்கால் அளந்துவிடுவோம். விஜயநகர் வேந்தர் மரபிலிருந்து வந்த முத்துக்கிருஷ்ணப்ப

நாயக்கன் மதுரையின் அரசபீடத்தை அலங்கரித்தான். மற்ற அரசுகளெல்லாம் மதுரையின் வன்மையையும் பெருமையையும் ஒப்புக்கொண்டிருந்தன. எனவே மதுரை நாயக்கரை “மகா நாயக்கர்” என அழைப்பது வழக்கில் இருந்தது. 100,000 போர் வீரரும், 300 யானைகளும் அவனது பெருமையை நிலைக்கச்செய்தன. நாட்டைப் பல பாளையங்களாகப் பிரித்திருந்தான். பாளையங்களை ஆண்ட பாளையக்காரர் தம் வருவாயில் மூன்றிலொரு பங்கை நாயக்கனுக்கு அனுப்பினர். மற்றொரு பங்கைப் படைகளுக்காகச் செலவழித்தனர். மற்றது பாளையக்காரருக்கே. அவர்கட்குத் தெரிந்த வகையில் அவர்தாமே ஆண்டு கொள்ளலாம். பாண்டிய மன்னர்களைப்போன்றே, நாயக்கரும் கல்விக் கலைகளை ஆதரித்தனர். வடமொழிச்சங்கம் ஒன்று வடமொழியை வளர்த்து வந்தது. நாட்டில் நாலு மூலைகளிலிருந்தும் பல்வேறு இளைஞர் தம்மறிவைப் பெருக்க மதுரையை நாடினர்.

மதுரையை அணுகும்பொழுது அதன் சொக்கநாதரின் ஆலயம் (மீனாட்சியம்மன் கோவில்) தன் முழுப் பெருமையுடன் தோற்றமளித்தது. அதனுடைய கோபுரங்களில் மூன்று அன்று காணப்படாவிடினும் அதன் அழகும் எழிலும் பொலிவும் என்றும்போலவே மதுரையை மதுரையாக்கியது. அதன் தெருக்கள் இன்றுபோல் இல்லாவிடினும் அதன் கட்டிடங்கள் இன்றுபோல் ஐரோப்பிய பாவனையில் இல்லாவிடினும், அன்றும் தொன்று தொட்டு நின்ற பண்டைக் கோயில்களும், அழகிய வீடுகளும் கூட மாளிகைகளும் நகரை அணிசெய்து நின்றன. அரச மாளிகையைச் சுற்றி நகர் அமைந்திருந்தது. தலைநகரைச் சுற்றிலும் பாளையக்காரர்களால் அமைக்கப்பெற்ற எழுபத்திரண்டு கோட்டைகள் நகரத்திற்கே இறுமாப்பு அளித்து நின்றன. நகரத்தின் உட்சென்று சற்றே இந்த வீதியில் நின்று நோக்குவோம். பற்பல யானைகள் வருவதும் போவதுமாயுள்ளன. அவைகளின் கிண்கிணி மணியோசையும், குதிரைகளின் குளம்படிச் சத்தமும், ஓடும் தேர்களின் சக்கரங்களால் விளைந்த ஓசையும் நகரை ஒரு தலைநகரம்

என நமக்குத் தெரிவிக்கின்றன. அதோ வரும் ஊர்வலம் எது? அதுதான் பாளையக்காரர் ஒருவர் அரசனின் அரண்மனைக்குச் செல்லும் ஊர்வலம். அங்கே காணப்படும் இளைஞர் யாவர்? இவர்தான் சங்கத்தில் கற்றுவிட்டு இல்லந் திரும்பும் அந்தண இளைஞர். அதோ யாவராலும் விலக்கப்படும் அந்தப் பெண் யார்? அவள் ஒரு கீழ்க் குலத்தினள். அவள் இந்த இடத்தில் வந்ததே தவறு என்பர் மதுரை மாந்தர்.

1606-ஆம் ஆண்டில் இருந்த மதுரையில், இன்று போல் சமத்துவம் பற்றிப் பேசுவோர் இல்லை. குலவெறி பேயாட்டம் ஆடியது. கீழ்ச்சாதி மேற்சாதி என்ற பேச்சு அதன் உச்சத்தில் நின்றது. ஆள்பவரே இச்சாதி வெறியை அழிக்க முயலும் இந்நாளிலும் அது முற்றிலும் அழிவுறாததைக் காண்கின்றோம் நாம். இஃது இவ்வாறிருக்க மன்னனும் மக்களும் மனமொப்பி இச்சாதி பேதத்தைப் பாராட்டிய அந்நாளில் என்ன நிலைமை நிலவியிருக்கும் என்பதை வாசகர் புரிந்துகொள்ளலாம்.

அக்காலத்தில் மதுரையில் இருந்த வெள்ளையர் நிலை எவ்வாறிருந்தது? அந்தணர் ஆட்சியில் மதுவிற்கும் மாமிசத்திற்கும் தமிழ்நாட்டில் இடமெங்கே? தொன்றுதொட்டு நம்மவர் கொண்ட கொள்கையின்படி, நமது தமிழ்ப் பண்பாட்டின்படி மதுவும் புலாலும், பிறர் மனைவியும் எம்மனிதனாலும் தீண்டற்படாதன. அன்றைய போர்த்துக்கீசிய வணிகரும் துரைகளும் இப்பண்பாட்டைப் புரிந்துகொள்ளவில்லை. மதுவும் புலாலுமின்றி அவர்கட்கு வாழ்வு வாழ்வாகவில்லை. ஆனால் தமிழ் மக்களும் அவர்களின் பண்பாட்டை அறிந்துகொள்ளவில்லை. அவர்களின் பழக்க வழக்கங்கள் நம்மவர்க்கு அருவருப்பை மூட்டின. போர்த்துக்கீசியரைப் பரங்கி என அழைத்து, அவர்களை அரிசனருக்கும் கீழான ஒரு சாதியினராக மதித்தனர்.

எனவே அன்று 'பரங்கி' என்ற சொல் 'தீண்டப்படாதவர்' என்று தமிழ் மக்களிடையே பொருள்பட்டது. இந்நிலையில் பரங்கி மார்க்கத்தையோ பரங்கியர் தெய்வத்

தையோ கும்பிட மக்கள் உடன்படவில்லை என்ருல் அதில் வியப்பென்ன?

இத்துடன், அன்று மதமாறிய வெகு சிலரையும் போர்த்துகீசியர் தங்கள் பழக்கங்களைப் பின்பற்றுமாறு வற்புறுத்தினர். எனவே புலாலையும் மதுவையும் ஏற்க வேண்டியதாயிற்று. கிறீஸ்தவனுயிருக்க புகைபிடித்தல் ஒரு தவிர்க்க முடியாத தேவை. கிறீஸ்துவச் சமயமும் பரங்கியர் குலமும் ஒன்றே என்ற மனப்பான்மை மக்களிடையே புகுந்தது. மேற்கூறிய தீய பழக்கங்கள் கிறீஸ்துவ மறையின் ஒரு முக்கிய பகுதி என எண்ணினர். "இத்தகைய தீயனவற்றை இன்றியமையாதனவாகக் கொண்டுள்ள ஒரு மதம் உண்மையான மதமாயிருக்க முடியுமா?" என்ற கேள்வியும், அது குறிக்கும் "இல்லை" என்ற பதிலும் மிகவும் ஆழமாக ஒவ்வொரு தமிழ்நாட்டு உயர்குல மகனின் உள்ளத்திலும் பதிந்தன. எனவே கொன்சாலோ சுவாமிகளைத் தம் பண்பாட்டைப் பறிக்கத்தேடும் பரங்கியாகவன்றி, உண்மைத் தெய்வத்தை உலகுக்கறிவிக்க வந்த உத்தமராக மக்கள் மதிக்கவில்லை. பரங்கியரின் தூதுவராகவன்றி, இறைவனின் குருவாக அவர் அவர்கள் கண்ணிற் தென்படவில்லை.

ஆனல் பாவம், கொன்சாலோ சுவாமிகள் இதையெல்லாம் அறியவில்லை. சாதிபேதத்தையும் அதனுல் பேய் விரித்தாடிய வெறுப்பையும் புரிந்து கொள்ளவில்லை. தான் பரங்கி என்பதனுலேயேதான், தாழ்ந்த சாதியினரின் குரு என்பதனுலேயே, தமிழ்நாட்டின் பெரும்பாலோர் தம்மைப் புறக்கணிக்கின்றனர் என்பது அவருக்குப் புலப்படவில்லை. அவருக்குப் பரங்கி என்ற பெயரையன்றி வேருெரு அதிகப் புகழ் வாய்ந்த பெயர் கிடையாது. அவரது சிந்தனையில், தமிழ் நாட்டார் வெறுத்தது கிறீஸ்துவச் சமயத்தையன்று, பரங்கியர் பழக்கவழக்கங்களையே என்பது ஒருபோதும் பட்டதில்லை.

ஆனல் ராபர்ட் சுவாமிகள் தான் வந்த சில மாதங்களிலேயே நிலைமையைச் சரியாய்ப் புரிந்துகொண்டார்.

தான் செய்யவந்த வேலை, போர்த்துக்கல் அரசனுக்கன்று, கிறீஸ்து இராசாவிற்கு ஆட்களைப் பிடிப்பதே என்பதை உணர்ந்தார். இவ்வளவாக வேரூன்றியுள்ள சாதிபேதத்தை அசைப்பதால் அவர் ஒன்றும் பெறப்போவதில்லை. ஆனால் கிறீஸ்துவ மறைநயப் பரங்கியரல்லாதாரும் ஏற்றுக்கொள்ளலாம் என்பதைத் தமிழருக்கு அவர் காட்டினால், ஆம், மூடிய கதவு திறக்கப்படும். இடையே நிற்கும் மதில் தகர்க்கப்படும். தூய உள்ளங்கொண்ட தமிழரனைவருக்கும் கிறீஸ்துவின் சமாதானம் உண்டாகும். தமிழரது பண்பாடு கிறீஸ்து மறையில் சிறப்பு பெறும்.

தன்னையும், தன்னைப் பின்பற்றுவோரையும் பரங்கியர், கீழ்க்குலத்தோர் என்ற பெயர்களினின்று விடுவித்துக் கொள்வதே ராபர்ட்டின் வேலை. பெயரளவில் மட்டுமன்று, செயலளவில் தாம் ஒரு பரங்கி அல்லர் என்பதை உலகிற்குணர்த்துவார். எவ்வாறு? தமிழ்ப் பண்பாட்டைக் கிறீஸ்துவக் கொள்கைகள் அநுமதிக்கக்கூடிய அளவில் ஏற்றுக்கொள்வார். புலாலை மறுத்துவிடுவார். மதுவருந்தார். மேசையும் கரண்டியும் முள்ளும் அகற்றி, சம்மணம் போட்டு உட்கார்ந்து, வாழையிலையில் உணவருந்துவார். கறுப்பு அங்கியை விடுத்துக் காவி அணிவார்.

இவைகளெல்லாம் அவருடைய திட்டங்கள். எனினும் தனது கீழ்ப்படிதல் வார்த்தைப்பாட்டின்படி பெரிய சுவாமியாரிடம் கூறி அவரது அநுமதியை எதிர்பார்த்தார். இவைகளையெல்லாம் கண்டு லெயேர்சியோ சுவாமிகள் திடுக்கிட்டார். தாம் முடிவு செய்வதற்கு முன்னர் கிராங்கனூர் அதிமேற்றிராணியாரது அநுமதியைக் கோரும் வண்ணம், அவரிடம் ராபர்ட்டின் திட்டங்களை அனுப்பிவைத்தார்.

"இவை அநுமதிக்கப்படுமா? ஆண்டுகளாய் மூடிக்கிடந்த கதவு கிறீஸ்துநாதருக்குத் திறக்கப்படுமா? தான் கண்ட திறவுகோல் சரிதானா?" இவைபோன்ற கேள்விகள் ஒன்றுமாற்றி ஒன்று ராபர்ட்டின் மனதில் எழ, அவர் ஒரு முடிவை ஆவலோடு எதிர்நோக்கியிருந்தார்.

# வெற்றியின் வழியில்

## 4

### காவி உடையில்

லெஸ்யேர்சியோ சுவாமிகளின் கடிதங்கண்டு உள்ளம் பூரித்தார் கிராங்கனூர் அதிமேற்றிராணியார். அவர் இஸ்பானிய நாட்டுக்காரர். எனவே போர்த்துக்கீசியரின் பிடிவாதக்கொள்கை இவரிடம் இல்லை. "கிராங்கனூர் கிறீஸ்துவர்களோ, மிகப் பழைய கிறீஸ்துவர்கள். தங்கள் பண்பாட்டை விட்டுக்கொடுக்காமல் சேசுவின் மனதிற்குகந்த கிறீஸ்துவர்களாக வாழ்ந்தனர். அவர்களைத் தமிழர் பரங்கி எனவா அழைத்தனர்? இல்லை. நசரேயர் என்றே அழைத்தனர். எனவே, இடம் பெயர் சாதி இவையெல்லாம் திருச்சபையின் வாசல்களை மேற்கொள்ளா. இவ்வாறிருக்க, ஏன் புதுக்கிறீஸ்துவர் தம் உயர்ந்த, தொன்மை பொருந்திய பண்பாட்டை விட்டுக்கொடுக்கவேண்டும்? தம் பண்பாட்டையும் கிறீஸ்துவின் அடிகளில் பணித்து அதனையும் கிறீஸ்து மயமாக்கவேண்டியது அவர்களது கடமையல்லவா? அர்ச். இராயப்பர் உரோமையரிடம் விரும்பியது, அவர்களும் தன்னைப்போல் தாடி மீசையுடன் திரிய வேண்டுமென்று? இல்லையே. உரோமையப் பண்பாட்டைக் கிறீஸ்துவ மதம் பழித்துப் புறக்கணிக்கவில்லையென்றால். சீனப் பண்பாட்டைக் குலைக்காமல் சீனர் கிறீஸ்துவராக வாழ முடியுமென்றால், ஏன் தமிழர் மட்டும், ஏன் இந்தியர் மட்டும், கிறீஸ்துவராக வேண்டின், தம் பண்பாட்டை இழக்கவேண்டும்? போர்த்துக்கீசிய தொப்பியைவிடத் தமிழனின் தலைப்பாகை எந்தவிதத்தில் கிறீஸ்துவைத் தடுக்கிறது?" உணர்ச்சி ததும்பியது அதி

மேற்றிராணியாரது உள்ளத்தில். ராபர்ட்டிற்கு ஊக்கமூட்டி ஒரு கடிதம் வரைந்தார்.

கடிதம் கண்ட லெயேர்சியோவின் உள்ளத்தில் அமைதியும் ஆறுதலும் பிறந்தன. பகலவனின் முகங் கண்ட பனிபோல் அவரை வருத்திய வாதனைகளும் அச்சங்களும் ஓடி மறைந்தன. தன் ராபர்ட்டைப்பற்றி அவர்க்கு மிகவும் பெருமை. பின்னர் தம் ஆலோசகரின் எண்ணங்களை வரவேற்றார்.

“சே! என்ன, ராபர்ட் இந்த மாதிரி காவி உடையில் போவதா?” பாவம் அவர்கள் மனதை அவராலேயே அமைதிப்படுத்த முடியவில்லை. அவர்கள் எல்லோரும் ஐரோப்பியர், அவர்களால் இந்த உடையை அணிவதன் பொருளைக் காணமுடியவில்லை, அதைத்தவிர மற்றவை யாவும் அநுமதிக்கப்பட்டன.

நாமும் கடிதத்துடன் மதுரைக்குப் போவோம். மணி பன்னிரண்டு இருக்கும். சுவாமிமார்கள் உணவருந்தும் நேரம். என்ன! அதோ ஒருவர் தாமே மேசையில் அமர்ந் திருக்கிறார், அவர்தான் கொன்சாலோ. எங்கே நம் ராபர்ட்? அதோ இருக்கிறார்; சம்மணம் போட்டு அமர்ந்திருக்கிறார். “சுவாமி சர்வேசுரனுக்குத் தோத்திரம்” “ஆசீர்வாதம்” “என்ன இந்த மாதிரி கிளம்பி விட்டீர்கள்?.... “ஆண்டவ ருக்காக, எல்லோருக்கும் எல்லாமுமாக மாறவேண்டும்” “முன்பேதும் பழக்கமுண்டோ!” என்ன கேள்வி! பாவம் அவருடைய கால்கள் என்ன வலி வலித்திருக்கும்! எனினும் நமது கடிதம் அவருக்கு மிகவும் மகிழ்ச்சியை அளித்தது.

ஆனால் கொன்சாலோ சுவாமிகட்கு அது மகிழ்ச்சி அளிக்கவில்லை. அவர்க்குச் சினம் பொங்கிற்று. ராபர்ட் சுவாமிகளின் போக்கு அவருக்குப் பிடிக்கவில்லை. அவர் உண்மையைப் புரிந்து கொள்ளவில்லை. எனவே ராபர்ட்டைக் கண்டனம் செய்தார். அவரைப் “புதுமைப் பித்தன்” எனப் பட்டம் சூட்டி நகைத்தார். அவர் பேசிய

செந்தமிழைக் கண்டு எள்ளிப் புன்னகை பூத்தார். இருவருக்குமிடையே மூண்டது பிளவு. இளந்துறவிக்கு இவரால் இடையூறுதான் என்பதைக் கண்ட லெயேர்சியோ முத்துக்குளித்துறைக்கு அவரை மாற்றிவிட்டார்.

ராபர்ட் தன் இல்லத்தை ஒரு தமிழில்லமாக அமைத்தார். ஒரு அந்தணரது அகம்போலவே அவரது இல்லத்திலும் நடைபெற்றது. இதைக் கண்டார் அவருடைய தமிழாசிரியர். கண்டதுடன் மட்டுமன்று, ஊரெங்கும் பறைசாற்றிவிட்டார் அவரின் மாணவர், ராபர்ட் சுவாமிகள் ஒரு பரங்கியரல்லரென்று. இதைக்கேட்ட மக்கள் அவரை அணுகி, அவருடன் உரையாடினர். வந்தவரை அன்புடன் வரவேற்று அவருடன் அழகிய முறையில் நல்ல தமிழில் உரையாடினர். உண்மை, அவர்களில் சிலர் அவரிடம் அவரைப் பற்றியே பேசியிருப்பர். "நீங்கள் கல்யாணம் ஆகி பிரமச்சாரியா, அல்லது ....'' என்றும்கூட கேட்டிருப்பர். ஆனால் அடிகள் எல்லாவற்றிற்கும் மெதுவாக அமைதியாக விடையிறுத்தார். அவருக்கு வேண்டியது தனது புகழன்று; அவர்களுடைய உள்ளங்கள் கிறீஸ்துவை நாட வேண்டும் என்பதே. இத்தகைய உயரிய குறிக்கோளின்முன் குறுகிய நோக்கங்களும் அற்பச் செயல்களும் தகர்ந்து விழுந்தன.

இதுமுதல் மதுரை மாந்தர் இம்மறைக்குருவை தம்மிலொருவராகப் பாவித்தனர். அவரின் உயர்ந்த குடும்பமும், செறிந்த கல்வியும், சீரிய பண்பாடும் கொழுந்து விட்டெரியும் அன்பும் அவர்களை அவர்பால் ஈர்த்தன. காந்தத்தின் ஈர்ப்பிலிருந்து ஊசி பிழைக்கலாம். ஆனால் ராபர்ட்டின் ஈர்ப்பின்முன் மதுரை மாந்தர் தப்பவில்லை. முதலில் மாணுக்கனானது அவருடைய ஆசிரியரே.

தமிழாசிரியரிடம் கொன்சாலோ சுவாமிகள் நம் விசுவாசத்தைப்பற்றிய ஒரு புத்தகத்தைத் தமிழில் எழுதுமாறு கூறித்தந்திருந்தார். ஆனால் இவர்க்கோ அதனுள் இருந்த ஒவ்வொன்றும் ஒரு விளங்காப் புதிராய் இருந்தது. "நான் சர்வேசுரனை விசுவசிக்கிறேன்'' என்பது

சொல்வதற்கு எளிது, செய்வதற்கரிது. விசுவசிப்பதற்கு முன், சர்வேசுரன் யார்? "பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்தவர்" எப்படிப் படைத்தார்? ஏன் படைத்தார்? எப்பொழுது படைத்தார்? "நித்திய சீவியம்" என்ருல் என்ன? அது எவ்வாறு இருக்கக்கூடும்? என்ற கேள்விகள் எழுந்தன. வெறுப்பே மூண்டது, விருப்பம் எழவில்லை.

பன்முறை ராபர்ட் சுவாமிகளுடன் இவைகளைப் பற்றி விவாதித்தார். பகுத்தறிவின்படி கூட இக்கொள்கைகள் உண்மை என்பதையும், அதற்கு மாறுபட்ட தன் கொள்கை பொய் என்பதையும் உணர்ந்தார். எனினும் ஒரு முடிவுக்கு வரவில்லை. ஒரு முறை இருவரும் இருபது நாட்களாகத் தம்தம் சமயங்களைப் பற்றி முழுதும் அறிந்து கொள்ளுமாறு நாளொன்றிற்கு ஐந்து மணி அளவு விவாதித்தனர். விவாதத்தின் விளைவு?

"இருபது நாட்கள் நான் அவருக்கு நன்கு நம் சமயத்தைக் கற்பித்த பின்பு, அவர் நமது சமயத்தில் உள்ள எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு, ஞானஸ்நானம் பெற விழைவதாகக் கூறினர். மதுரையிலே முதன்முதலில் உண்மையைக் கேட்டு அறிந்து அதனை ஏற்றவர் இவரே. எனவே என் மகிழ்ச்சி எல்லை மீறுகிறது" என ராபர்ட் எழுதுகிருர். புதுக் கிறீஸ்துவரின் பெயர் ஆல்பர்ட்.

ஆல்பர்ட்டுக்கு உறவினர் ஒருவர். அவர் ஒரு பண்டார சுவாமி. ஒரு காலத்தில் சமயம் கற்பித்த "குரு." 'ஆல்பர்ட் பரங்கியான செய்தி' இவருடைய காதுகளில் நாராசம்போல் பாய்ந்தது. ராபர்ட்டின் உடை அவருக்குப் பரங்கியென்னும் பட்டம் வாங்கித்தந்தது. அவரை நன்கு அறிந்தோரோ அவரை மதித்தனர். இடியுண்ட நாகம் போல் சீறினர் பண்டாரச் சுவாமி. சென்றவிடமெல்லாம் ஆல்பர்ட்டின் "குற்றத்தை"ப் பெருக்கி விரித்துப் பறை சாற்றினர். அடிகள் கவலையுறலானர்.–"புதிய நாயக்கனின் காதுகளில் இச் செய்தி விழுந்தால்....!" பண்டாரச் சுவாமிகள் நம் அடிகளை நோக்கி விரைந்தார்.

"ஏன் என் உறவினனை உன் வலையில் இழுத்தாய்?" என்று கேட்டார். "வாருங்கள்" என்று புன்முறுவலுடன் வரவேற்ருர் குமுறிக்கொண்டு வந்த பண்டாரத்தை. "அமருங்கள்" என்ற சொல், போர்புரிய வந்தவருக்கு ஓர் அடியாக விழுந்தது. தண்ணீரின்முன் தீ அமைவதுபோல, ராபர்ட்டின் அமைதியின்முன் பண்டாரத்தின் சினம் தணிந்தது. "ஆல்பர்ட்டின் குருவைப் பரங்கி என்ருல் பெரிய பாவம்" என்று எண்ணி அவருடன் அமைதியாக விவாதம் செய்தார். விளைவு என்ன? வீட்டை விட்டு வெளியே வரும்போது, ஆல்பர்ட்டை நையாண்டி செய்து கொண்டிருந்த தம் சீடரைப் பார்த்தார். "போதும் நிறுத்துங்கள். நாமே என்ன விஷயமென்று விசாரணை செய்தோம். ஆல்பர்ட் ஓர் அருமையான சமயத்தைக் கைப் பற்றியுள்ளான் என்பது நமது முடிவு" என்ருர். ஆல்பர்ட்டை நோக்கி, "அஞ்சாதே அப்பா, உனக்கு நாமிருக்கிருேம். உன் குருவினுடைய கொள்கைகளைப் பரப்புவதற்கு ஒரு வலது கையாக உதவுவோம்."

பண்டாரச் சுவாமிகள் இத்துடன் நிற்கவில்லை. பன்முறையும் அடிகளைக் கண்டு பேசினுர். அவர் பேசியவற்றில் ஒன்று குறிப்பிடத்தக்கது. அவரது சிந்தனையும், சிந்தனையிலிருந்த உண்மையும், அவ்வுண்மையைக் கொண்டுவந்த சொற்களும் ராபர்ட் சுவாமிகளை மட்டுமன்று இன்னும் மற்றவரையும் அவ்வெண்ணத்தின்பால் ஈர்த்தன. அது தான் ராபர்ட் அடிகள் தன் பரங்கி உடையையும் செருப்புகளையும் விட்டுவிடவேண்டுமென்பது. அதற்குப் பதில் 'குரு'மார்களின் உடையை அணியவேண்டுமென்ருர்.
ராபர்ட்: இல்லை, இது மிகவும் பகட்டானது, சிலுவையில் மேலாடையின்றித் தொங்கிய எம் நாதனின் வறுமை எங்கே, இந்த ஆடையின் செல்வமெங்கே, பகட்டெங்கே?
பண்டாரம்: "தங்களை மட்டும் காப்பாற்றிக்கொண்டு மோட்சம் சேருவது உமது எண்ணமானுல் நீங்கள் எந்தக் கந்தையையும் சுற்றிக்கொண்டு போகலாம். ஆனுல், இந்த நாட்டு மக்களின் மதிப்பைப் பெற்று. தங்களது கொள்கை

களை அவர்கள் பின்பற்றவேண்டுமானால், எண்ணற்ற மக்கள் தங்கள் போதகத்தை ஏற்கவேண்டுமானால், இந்த நாட்டுப் பண்பாட்டையும், பழக்க வழக்கங்களையும் நீங்கள் ஏற்றுப் பின்பற்றுவது அவசியம்."

ஆம் "எனக்கு மற்றவர் என்ன செய்ய வேண்டுமென விரும்புகிறாயோ, அவ்வாறே மற்றவர்க்கும் செய்," நம்மிடமிருந்து மற்றவர் ஒன்றை ஏற்க வேண்டுமானால், அவரிடமிருந்தும் நாமும் நல்லதை ஏற்க வேண்டும். நம் அடிகள் சந்நியாசியின் காவியாடையை உடுப்பது மிகவும் அவசியம் என்பதை உணர்ந்தார். இப்பொழுது அது அவருடைய வேலையில் ஒரு கோடாரிக்காம்பு. அவரை அறியாத யாவர்க்கும் அவர் ஒரு பரங்கியே. புலால் உண்ணாவிடினும், மதுவருந்தாவிடினும், தமிழர் பண்பாட்டை முழுதும் ஏற்றுக்கொண்டாலும், இன்னும் அவரது உடையை மாற்றவில்லை என்ற ஒரே காரணத்தினால் அவர் வேலை தடுக்கப்பட்டது. எத்தனை எத்தனைபேர் அவரது உடையைக் கண்டு இன்னும் ஐயமென்ற பேயின் அடிமையாக இருந்தனர். அவரை அறிந்த ஒருசிலரே அவரை அன்புடன் அணுகி தம்மவருள் ஒருவராகக் கருதினர். மறுமுறையும் எல்லாவற்றையும் விளக்கிப் பெரிய சுவாமியாருக்குக் கடிதம் எழுதினார். பண்டாரச் சுவாமிகளின் வார்த்தைகளைக் குறிக்க மறந்துபோகவில்லை.

கடிதங்கண்ட லெயேர்சியோ சுவாமிகளின் முகத்தில் கவலையின் குறிகள் காணப்பட்டன. எனினும் அஞ்சா உறுதிகொண்ட லெயேர்சியோ மறுமுறையும் ராபர்ட்டின் முறையான விண்ணப்பத்தை உடனே மறுக்க மனமின்றி மறுமுறையும் தம் ஆலோசகர்களை அழைத்தார். வெற்றிப் பாதையில் நடந்துசெல்லும் ராபர்ட்டிற்கு அவரது கறுப்பு அங்கி ஒரு தடையாகில் அவர் காவியை உடுத்துவதில் தங்களுக்கு ஒருவித ஆட்சேபமும் இல்லையெனக் கூறினர். இதற்கு மற்றொரு காரணமும் உதவியது.

அன்றைய சீனாவிலும் நம் நாட்டிற்போன்றே கிறீஸ்துவிற்குக் கதவு அடைக்கப்பட்டிருந்தது. கிறீஸ்துவைச்

சீனக் கிறிஸ்துவாக உடையுடுத்தி மக்களுக்கு அளிக்குமாறு வெற்றியுடன் முயன்ற மத்தேயோ ரிச்சி சுவாமிகள் தம் உடையை சீன உயர்குடிமக்களைப் போன்றே மாற்றிக் கொண்டிருந்தார். அவருடைய சீனமொழிப் புலமையும், கணித அறிவியற்திறமையும் அரசருடன் மக்களனைவரையும் அவர்பால் ஈர்த்தது. தன்னிடம் நட்புப் பூண்ட தன் நண்பரைக் கிறிஸ்துவிடம் நட்புப் பூணச்செய்வது மிகவும் கடினமன்று.

நீளக் காவி உடையினராய் ராபர்ட் அடிகளைக் கண்ட அவருடைய புதிய சீடர்களின் மகிழ்ச்சிதான் என்னே! ஒரு நீள காவி அங்கி, அதன்மேல் ஓர் அரை அங்கி, அவர் தோள்களையும் ஒரு காவித் துணியால் போர்த்துகிறார். அவரது தலையில் ஒரு நல்ல வெள்ளைத் துணியாலான ஒரு தலைப்பாகை. கழுத்திலிருந்து ஐந்து நூல்களால் தரிக்கப்பட்ட ஒரு திண்ணிய நூற்கயிறு தொங்குகிறது. இவ்வைந்து நூல்களில் மூன்று தங்கக் கயிறுகள். இவை தமதிரித்துவத்தின் மூன்றாட்களையும் உணர்த்தும். மற்ற இரு வெள்ளை நூல்களும் நம் ஆண்டவரின் மனிதத்துவத்தையும் தேவத்துவத்தையும் குறிப்பன. இக்கயிற்றிலிருந்து தொங்கும் சிலுவை சேசுநாதரின் பாடுகளைக் குறிப்பது. இந்த மூடக்கொள்கையெல்லாம் ஏன் என்று கேட்பீர்கள். போட்டுவிட்டார் வேடம். இந்தியரது வேடம். ஒரு தமிழ் மடாதிபதியாகத் திகழ வேண்டுமானால் தேவையானதெல்லாம் செய்யவேண்டுமன்றோ? அந்தணர்கள் தம் சாதியைக் குறித்து மட்டுமன்றி தாம் கற்றுக்கொடுக்கும் கொள்கைகளையும் குறித்து இத்தகைய நூல் ஒன்றை அணிவது வழக்கம். எனவே நம் சமயத்தின் சாரத்தை உணர்த்தும் பொன்னூலாகவே அதை அணிந்தார் ராபர்ட்.

அவரது விருப்பத்தை ஈடேற்றும் வழி திறந்திருந்தது. எனினும் துன்ப மேகங்கள் கவ்விக்கொண்டு வருவதை அவர் அறிந்திருந்தாரா? ஆம், அவர் அறிந்திருக்கலாம். பரலோகத்திலிருந்து வந்த பரமனையே சிலுவை

விடவில்லையென்றால், அவரது அடி பின்பற்றும் மற்றவரை மட்டும் விட்டுவிடுமா? "வீட்டின் எசமானனையே பீல்சபப் என்ற பேயின் அடிமை என்று விளித்தனரால், அவருடைய ஊழியரை எவ்வண்ணம் நடத்த மாட்டார்கள்?" குருவிற்குச் சீடன் மேற்பட்டவனல்லன்.

## 5

## இராஜ சந்நியாசி

*1607*-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் கொன்சாலோ சுவாமிகள் மதுரை திரும்பினர். கண்டார் ராபர்ட்டை, சினந்தெழுந்தார். காவியுடையில் அவர் செல்வதைக் காண அவர்க்குப் பொறுக்கவில்லை. ஆனால் ராபர்ட்டோ கொன்சாலோ சுவாமிகளையே தன்னுடைய போக்கைப் பின்பற்றுமாறு அழைத்தார். ஆனால்....பரங்கி என்ற பெயரில் பெருமை பாராட்டிய கொன்சாலோவா அந்தணர் முறையைப் பின்பற்றுவார்! "எனக்கு இந்தப் பூச்சாண்டி வேடம் தேவையில்லை. இங்கே சமையல் செய்யும் இந்தப் பிராமணனும் அவன் வேஷ்டியுமே, இந்த வீட்டின் நாகரிகத்திற்கே ஓர் இழுக்கு. அவன் தலையில் ஆடிக்கொண்டிருக்கும் அந்தக் குடுமிக்கும் சுத்தத்திற்கும் ஒத்துவராது. பரங்கிகளை வெறுத்து குடுமியுடன் திரியும் அந்தப் புதுக் கிறீஸ்துவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்ததே பெருந் தவறு."

இத்தகைய நிலையில் எவ்வளவு நாள் காலந்தள்ளுவார் ராபர்ட்! பரங்கிக் குருவென இழிக்கப்பட்ட கொன்சாலோ சுவாமியுடன் தாம் வைத்திருக்கும் தொடர்பே எத்தனை பேரை தன்னிடம் வரவொண்ணாது தடுக்கிறது. அதுமட்டுமன்று, மாமிசமருந்தாது இருப்பது, வாழ்நாள் முழுதும் அதிலேயே திளைத்த ஒரு ஐரோப்பியருக்கு எத்துணைத் துன்பம் விளைத்திருக்கும்! இத்துடன்

நாள் முழுதும் சம்மணக்காலிலேயே இருக்க வேண்டும். நம் நாட்டிலேயே உள்ள நாம் மூன்று மணியளவு தொடர்து அந்நிலையில் இருந்தால் எவ்வளவு வலியுறுகிறோம்? முன்னர் இவ்வாறே செய்தறியாத இந்த அடிகள் என்ன பாடுபட்டிருப்பார்? எப்பொழுதும் சுத்தத் தமிழிலேயே பேசவேண்டும். சில கல்லூரிகளில் ஒருகாலத்தில் எப்பொழுதும் ஆங்கிலமே பேசவேண்டும் என்ற ஒரு நியதி இருந்தது. அதை முழுதும் அனுசரித்தது யார்? ஏன், நம்மவரையே தூய தமிழிலேயே ஆங்கிலத்தைக் கலவாது எழுதும் முறையிலேயே ஒருநாள் முழுதும் பேசச் சொல்லுங்கள் பார்ப்போம்! இஃது இவ்வாறிருக்க இந்திய மண்ணில் புதிதாய் வந்த ஒரு ஐரோப்பியர் இவைகளைத் தம் பழக்கமாக மாற்றுவதற்கு முன்னர் எத்தகைய தியாகம் செய்திருப்பார்?

இத்துன்பங்களைச் சகிப்பதனின்றும் தன்னை விடுவிக்க முயலும் கொன்சாலோ சுவாமிகளுடன் வாழ்வது ஓர் இடையூறன்றி வேறன்று என்று எண்ணிய ராபர்ட் அந்தணரது அக்கிரகாரத்தில் ஒரு வீடு பிடிக்க எண்ணியதில் வியப்பென்ன?

நாகய்யா மதுரை பாளையக்காரருள் ஒருவன். பொருளும், வலியும் அவனுக்கு மதுரை நாயக்கனின் மதிப்பைப் பெற்றுத் தந்தன. அவனுடைய தம்பி இராம செட்டி ராபர்ட் சுவாமிகளின் ஒரு நண்பன். இன்னும் அவரது கொள்கையை ஏற்றுக்கொள்ளவில்லையெனினும் அவரைப் பற்றிச் சிறந்ததொரு எண்ணங்கொண்டிருந்தானாகையால் இருவரிடையே நட்புத் தோன்றியது. சந்நியாசி நண்பரின் தேவையை உணர்ந்த இராம செட்டி தன் தமையனுடன் பேசி மதுரையில் ஓர் அருமையான இடத்தில் அவர்க்கு நிலம் தந்து அதன் நடுவில் முன்பு இடிந்திருந்த ஒரு சிறு மண்வீட்டைத் திருத்தி அமைத்து அதில் குடியேறச் செய்தான்.

வீடு மிகவும் சிறியது. நான்கு மட்சுவர்கள். கூரை போல் வேயப்பட்டிருந்தது. இத்தாலியில் புல்சியானு

மலையில் ஓங்கி உயர்ந்து, விரிந்து பரந்திருந்த நோபிலி மாளிகை எங்கே? மதுரையில் உடல்கூனி உள்நுழைய வேண்டியிருந்த இக்குடிசை எங்கே? கற்களால் கட்டப் பட்டுப் பலகையால் மூடப்பட்டுக் கண்ணாடிச் சன்னல் களுடன் கட்டப்பட்ட மாளிகைக்குப் பதில் மட்சுவரும் கூரைமேடும், வெறும் துளைகளுமே கிடைத்தன. எவ்வாறு? இரந்து பெற வேண்டியிருந்தது. இதெல்லாம் ஏன்? ஆம், விண்ணுலக அரசையும், சம்மனசுக்களின் ஆராதனையை யும் விடுத்து இம்மண்ணுலகு போந்து, அடிமையாய் வாழ்ந்து, தலைசாய்க்க இடமின்றி குற்றவாளியாய் யாவருக் கும் குருவாக வந்த கிறீஸ்துவை அளிப்பதற்காக, இக் குருவின் இதயத்தில் இந்தியாவைச் சேர்ப்பதற்காக. "நான் தற்பொழுது மட்சுவர்கட்கிடையே அமைந்த ஒரு சிறு குச்சில் வாழ்கிறேன். இது, ஒரு பெரும் அரண்மனை யைவிட எனக்குப் பயனும் மகிழ்ச்சியும் அளிக்கிறது." என உரோமையில் இருந்த தம் நண்பர் கர்தினல் பெல் லார்மினுக்கு வரைந்தார் ராபர்ட். அவ் "வரண்மனையால்" நோபிலி அரண்மனையை அன்றி வேறெதைக் குறித்திருப் பார்? திசம்பர்த் திங்கள் 1607-இல் ராபர்ட் எழுதிய கடிதத்திலேயே மேற்குறித்த பகுதி காணப்படுகிறது. அக் கடிதம் மேலும் என்ன கூறுகிறது தெரியுமா?

"........நீங்கள் விரும்பினல் எனக்கு நம் ஆண்டவர் அளிக்கும் ஆறுதலைப் போல இவ்வுலகில் வேறு யார்க்கும் அளிக்கவில்லை என யாரிடமும் கூறுங்கள். ஆம், எனக்கு இந்தப் பரிசுத்த, தானக ஏற்றுக்கொண்ட இன்பமிகு வெளிநாட்டில், அவரது அன்பிற்காக உழைத்தும் இளைத் தும் வரும்பொழுது அளிக்கப்படும் ஆறுதலைவிட அதிக மாய் வேறு யாரும் பெருர். இவண் எனக்குறும் இடை யூறுகளும் இன்னல்களும் பலவெனினும், சமயா சமயங் களில் துயர் மிகுந்த இத்தகைய வாழ்வில் இறுதிவரை இடைவிடாது நிலைகொள்ளுவேனே என்று நானே ஐயுறி னும், நீலவானை நோக்கித் தாங்கள் 'உன்னுடைய எல்லை களில் சமாதானம் நிலவச் செய்வார்' (சங். 147-14)

என்பதை விளக்குங்காலை கூறியவற்றைச் சிந்தித்து இன்பமும் மகிழ்ச்சியும் உறுகிறேன். ஏனெனில், துயரிலி ருந்து விடுதலையை மோட்சத்தில் சுவைப்போம். ஆகவே இவ்வுலகில் அதனைத் துய்த்தல் தகுதியல்லவே.

"நான் எவ்வண்ணம் வாழ்கிறேன் என்பதை அறிய அடிகள் விழைகிறீர்கள். தேவைக்குட்பட்டு நான் நடாத் தும் வாழ்வு இதுதான். என்றும் எப்பொழுதும் சிறு குடிசையில் கட்டுண்டு கிடக்கிறேன். காலையில் பூசை, செபம் முதலிய முடித்தபின் என்னுடன் பேச விரும்பும் எவருடனும் பேசுகிறேன். எஞ்சிய சிறிதளவு நேரத்தில், இம்மக்களுடைய கொள்கைகளைத் தவறென்று எண்பிக்கு மாறு அழகு நிறைவு பெருமை என்ன பிற பொருந்திய அவர்களது மொழியாம் தமிழிலேயே கட்டுரைகள் வரை கிறேன். எப்பொழுதும் இச்சிறு குச்சியிலேயே அடை பட்டுக் கிடப்பதுடன் புலாலையும் அல்லது முட்டைகளை யும் நீக்குவதன் பொருட்டுத் தக்க உணவு இல்லாமை யால், உடல் மெலிந்து நோயால் வருந்துகிறேன். தலை வலியோ வயிற்றுவலியோ இல்லாத நாட்களோ வெகு அரிது. இந்நாட்டில் பெரிதும் பயன்படுத்தப்படும் சோறும், சில கீரைகளும், பழங்களுமே என் உணவு. நான் இவற்றை யெல்லாம் செய்யாவிட்டால் இம்மக்கள் நாள் தவறாது நோன்பு பிடிப்பதைத், தபம் செய்வதைக் கண்கூடாய்க் காணவிட்டால், என்னை வானுலகுக்கு வழிகாட்டுவோனாக ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். இவ்வாறுதான் அவர்களு டைய மத ஆசிரியர்கள் வாழ்வு நடத்துகின்றனர். அவர் களில் சிலர் சோறுகூட உண்பதில்லை. அப்பமோ மதுவோ இல்லாத நாட்டில் அரிசிச்சோற்றையும் நீக்கிவிட்டால் எஞ்சுவது எவ்வளவு என்பதை அடிகளே கணித்துக் கொள்ளுங்கள்.

"ஊனுணவை நீக்குவதிலிருந்தே மக்கள் என்னை அவர் களுடைய மதக் குருவாய் ஏற்றுக்கொள்ளுகிறார்களாத லின் நான் சோறுமின்றிப் பட்டினி கிடக்கும் அளவிற்குச் செல்லவில்லை. இரக்கமுள்ள ஆண்டவர் என் பாவங்களை

கருதாது, என்னை அவரது புகழைப் பரப்புவதில் பயன் படுத்துவாரென்று நம்புகிறேன். எளிமையை இறைவன் நேசிக்கிருர் அன்றோ?"

மற்ருெரு அஞ்சலில்: "நான் என் நேரத்தை வீணுக்க விரும்பாமையால், ஆன்மாபற்றி மட்டுமே என்னுடன் பேச வரலாம், மற்றவைக் குறித்துப் பேசுதலாகாது என்று வெளிப்படையாய்க் கூறிவிட்டேன். இம்மக்கள் மிகவும் ஆவலுள்ளவர்களாய் இருப்பதால் இப்பொழுது என்னிடம் சமயம்பற்றி மட்டுமே வாதாடுகின்றனர்"[1]

அதே முடங்கலில், முதலில் ஆல்பர்ட்டின் மதமாற்றத்தைப்பற்றிப் பேசிய பின்னர் எழுதுகிருர்.

"இரண்டாவதாக மதமாறியவன் பதினேழு வயதுள்ள அலெக்ஸிஸ் என்ற இளைஞன். இவனுடைய நற்குணங்களும், பயபக்தியும் என்னை நாணச்செய்கின்றன. புதிய கிறீஸ்துவனுயினும், இளவயதிலிருந்து பழக்கமுடையவன்போல, நாளும் ஆய்ந்து செபம் செய்வதில் (தியானிப்பதில்) ஒரு மணி நேரத்தைச் செலவழிக்கிருன். வாரந்தோறும் பாவசங்கீர்த்தனம் செய்கிருன். தன் ஆன்மாவைக் காத்து, நரகத்தைத் தவிர்ப்பதைப்பற்றியே என்னுடன் இவன் பேச்சு. அது முடிந்ததும் தன் தாயிடம் சென்று அவளை நரகஞ் சேராது நம் மறையை நாடுமாறு வேண்டுவதே இவன் பழக்கம். இவன் சொற்கள் அவளிடம் விழலுக்கிறைத்த நீரேயென வீண்பட்டாலும், அவனது வாழ்வுமுறையில் நிகழ்ந்துள்ள மாறுபாட்டைக் கண்டு, அவருடைய சொற்களும் செயல்களும் ஒன்றுபடுவதைக் கண்டு மிகவும் திகைப்புற்றுள்ளாள்."

"நான் கூறியுள்ள இவ்விருவருடன்கூட, இன்னும் எட்டுப்பேரை மதமாற்றியுள்ளேன். இவர்கள்தான் இந்நாட்டின் முதற்கனிகள். நம் ஆண்டவர் மூடிய கதவைத் திறந்து அஞ்ஞான இருளில் அமர்ந்தோர்க்கு ஒளி காட்டு

---

[1] 1 திசம்பர் 1607 அக்வவீவா சுவாமிகட்கு.

வார் என்பது என் உறுதியான நம்பிக்கை. பலரும் இன்னும் மதமாறவில்லையெனினும் நம் ஆண்டவரின் கட்டளைகளே உண்மையான வழி, பேரின்பம் பெற ஒரே வழி என்பதை உணர்ந்து உரைக்கிறார்கள். இந்நாட்டின் அரசரான நாயக்கனின் அனுமதியைப் பெற்றால் அவர்கள் யாவரும் கிறீஸ்துவராவார். எனினும் தற்பொழுது நாயக்க மன்னனின் இணக்கத்தைப் பெறுதல் இயலாது. எனினும், புலவர், குரு என்ற பட்டங்களைச் சூடி வாழ விரும்புவதாலும் அல்லது, எண்ணிறந்த பெண்டினரை நாடுவதாலும், கிறீஸ்துவை, உண்மையைப் புறக்கணிக்கின்றனர்''.

அரசனின் இணக்கத்தைப் பெறுவது எளிதே. முன்பு அவன் கொன்சாலோ சுவாமிகளிடம் நடந்துகொண்ட வகைக்கும், ராபர்ட் சுவாமிகளிடம்நடந்துகொண்டவகைக்கும் வேறுபாடு உண்டு. அவனது நட்பைக் கொன்சாலோ சுவாமிகள் நாடினர் – போர்த்துக்கீசியருக்காக மன்னன் நட்புப் பூண்டான், ஆனல் ராபர்ட்டின் நட்பை மன்னன் நாடினன். (மூன்று முறை தன் அரண்மனைக்கு எழுந்தருளுமாறு அவருக்கு விண்ணப்பம் செய்தான்) – ஏன்? அவர் போதித்த கொள்கையை, எனவே கிறீஸ்துவை விரும்பியதால். கொன்சாலோவின் விண்ணப்பங்களை மறுத்தான் மன்னன். ஆனல் மன்னவனுடைய வேண்டுதல்களை மறுத்தார் ராபர்ட். அவன் கண்களில் கொன்சாலோ சுவாமிகள் போர்த்துக்கீசியரின் தூதுவர், இழிகுலத்தாரது குரு. ராபர்ட் வானுலகிற்கு வழிகாட்டும் மறை ஆசிரியர், அந்தணரும் அடிபணியும் இராஜ சந்நியாசி.

இராஜ சந்நியாசி: ஆம், மக்கள் அவரது முன்னேரின் வரலாறு அறிந்து அவர்க்கிட்ட பெயர் இதுவே. அவரது குலம் இராஜ குலம். அவர் ஒரு 'சந்நியாசி'; உண்மை இதுவெனப் போதித்தமையால் அவர் அவர்கட்குத் "தத்துவ போதகர்"; தத்துவம் உண்மை என்று பொருள்படும். நாமும் இனி அவரை இப்பெயராலேயே குறிப்போம்.

இத்தகைய வாய்ப்புக் கிட்டியும் ராபர்ட் ஏன் இன்னும் மன்னவனைக் காணாது வாளாதிருந்தார்?

கிறீஸ்துச் சமயமும் பரங்கி மார்க்கமும் ஒன்றே எனப் பறையடித்து வந்தவர் கொன்சாலோ சுவாமிகள். அவரிடம் அவை அவ்வாறு அல்ல என்பதை மெய்ப்பிக்க ராபர்ட்டால் இயலவில்லை. இங்ஙனமிருக்க, எவ்வாறு நாயக்க வேந்தனிடம் மெய்ப்பிக்க முடியும்? அவன் யாரை நம்புவான்? பலநாள் தானறிந்த கொன்சாலோவையா? அல்லது புதிதாய்க் காவியுடுத்திக் கிளம்பிய ராபர்ட்டையா? எது எளிது? பரங்கி மார்க்கமும் கிறீஸ்துவமும் ஒன்றே என்பதை நம்பி ராபர்ட்டைக் குற்றஞ் சாட்டுவதா? அல்லது அவை அவ்வாறு அல்ல என்பதை உணர்ந்து தம் மக்கள் அயல் மதத்தைத் தழுவுவதற்கு இணங்குவதா? "ஞாலங்கருதினும் கைகூடும் காலமறிந்துச் செயின்." இன்னும் காலம் ஏற்றதாகவில்லை.

சில மாதங் கழிந்து அக்குச்சை விடுத்து ஒரு நல்ல வீடொன்று கட்டலானார் ராபர்ட். அதில் பல அறைகளிருந்தன. ஒரு நல்ல சிறிய கோயில். இதுவும் களி மண்ணால் ஆனதாயினும், அதன் கூரை பனை ஓலையால் வேயப்பட்டிருப்பினும், இது முந்திய குச்சை விட உடல் நலத்திற்கு ஏதுவாயிற்று.

இத்தருணந்தான், ஒரு போர்த்துக்கீசியக் கப்பல் முத்துக்குளித்துறைக்கு அருகில் உடைபட்டது. விலை பெரும் பொருள்களில் பலவற்றையும் கடல் விழுங்கியது. எனினும் அதன் அடிவரை மூழ்கும் முத்துக்குளித் துறைப் பரவர்கள் அவற்றை விடுவதாய் இல்லை. முக்கி எடுத்தனர். இதையறிந்த மதுரை மன்னன் தன் பகுதிகளில் இவை நடந்தமையால் தனக்கும் ஒரு பெரும் பங்கு வேண்டுமென விரும்பினான். போர்த்துக்கீசிய அதிகாரிகள் தம் பங்கை விடுவதாயில்லை. எனவே கொன்சாலோ சுவாமிகள் முத்துக்குளித்துறைக்கு அடிக்கடி வந்தார்.

வந்தவர், கப்பற் கவிழ்வைப்பற்றி மட்டுமா பேசினார்? இல்லை. தத்துவ போதகரைப் பற்றியும் பேசினார். அங்

கிருந்த வேதபோதகக் குருக்கள் வெள்ளையுள்ளத்தில் அவரைக் குறித்து ஐயங்களை எழுப்பினர். கொன்சாலோ செய்தது குற்றமா? அது நம்மால் கூறமுடியாது. தவறி யிருக்கலாம்; அவரது மனசாட்சிக்கு எதிராக ஒன்றும் செய் யாதிருக்கலாம். நம்மில் எவராவது முதன்முதலில் ஆண்டு கள்கண்ட பழக்கத்தை விடுத்துப் புதியனவற்றைச் சாரும் ஒருவனை எளிதில் பின்பற்றுகிறோமா? "கிறுக்கன்" என்று நாம் பட்டஞ்சூட்ட முன்வருவோமேயன்றி அவனுடைய புதிய வழிகளை ஏற்பது நமக்கு மிகவும் கடினம்.

எனினும் அவரை நம்பிய முத்துக்குளித்துறைக் குருக் கள் தத்துவ போதகருடைய முயற்சிகள் தவறான வழியிற் செல்லுகின்றன என நம்பிப் பெரிய சுவாமியாருக்கு அஞ்சல்கள் விடுத்தனர். பின்னர் வரவிருக்கும் கண்டன மாரியின் முதல் மேகம் இவண்தான் காணப்படுகிறது. சூறாவளிக்காற்றின் முதற்குறிகள் இவை. யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே. இதோ மணி யோசை வந்துவிட்டது.

லெயேர்சியோ அடிகள் இவற்றைக் கண்டதும் திடுக் கிட்டார். முன்னர் இத்தகைய முடங்கல்களைக் கண்டு நகைத்திருக்கிறார். ஆம், நம் கொன்சாலோ சுவாமிகள் அவர்க்கு எழுதிய கடிதங்களைக் கண்டே, ஏற்றிக்கூறுவது அவர்க்கு இயற்கை என்ற காரணத்தால். எனினும் இது வரை இத்தகையனவற்றை எழுதக் கனவிலும் நினையாத இத்தனை சுவாமியார்களது செய்தி கண்டு திகைத்தார். "ராபர்ட் எல்லை மீறி விட்டார்" என்பதே அவரது முடிவு. எனினும் கண்ணுற்கண்டாலன்றி அவரைக் கண்டனம் செய்யலாகாது எனத் துணிந்து, இனிமேல் ஒரு வருக்கும் ஞானஸ்நானம் அளிக்கலாகாது என்று ஆணை யிட்டார்.

சற்றே எண்ணிப்பாருங்கள்! பதினேரு ஆண்டுகளாய் வரண்டுகிடந்த நிலத்திலிருந்து, வந்த சில மாதங்களில் பதின்மர அறுவடை செய்திருக்கும் வேளையில் .......இன் னும் இம்முறைப்படி பன்மரையும் கிறீஸ்துவின் திருப்பதம்

சேர்க்கலாம் என விரும்பிக் கொண்டிருக்கும் வேளையில்.... தன்னை ஊக்குவிக்கக் கடமையுடையவரான பெரிய சுவாமியாரே இத்தகைய கட்டளையை விடுத்துள்ளார்! இதை வாசித்த தத்துவ போதகரின் தலை சுற்றியது. "ராபர்ட், உன் கீழ்ப்படிதல் வார்த்தைப்பாடு எங்கே?" இதோ பணிகிறார். விருவிருப்புடன் சென்று கொண்டிருந்த வேலை திடீரென நின்றது.

ஆனால் நம்பிக்கைச்சுடர் இன்னும் அணையவில்லை. "நான் தங்களில்லம் வந்து, உம் முறைகளைப்பற்றித் தெளிவு பெறும்வரை" என்று காலத்தை வரையறுத்தார் லெயேர்சியோ. "ஆண்டவரே! உமது சித்தத்தின்படியே ஆகக்கடவது. நீர் நான் இவ்வழியில் முன்னேற விரும்பினால் நீரே என்னை நடத்துகிறீர்" என்பதே தத்துவ போதகரின் விடை.

இதற்கிடையில், மனிதரின் எண்ணங்கள் வேறு; இறைவனின் எண்ணங்கள் வேறு. மதுரை அந்தணரின் மனங்களைப்பற்றி இழுக்கவோ, மதுரை மாந்தரின் மதிப்பை நிலைபெறச் செய்யவோ, வடமொழியில் தேர்ச்சி ஓர் இன்றியமையாத தேவை என்பதைக் கண்டார் தத்துவபோதகர். கீழ்ப்படிதல் என்ற புண்ணியத்தை அனுசரித்துவந்த நாட்களில் சிவதர்மா வந்து சேர்ந்தார்.

"அடிகளின் புகழைக் கேள்வியுற்று, ஆந்திராவிலிருந்து இவண்போந்த அந்தணன் யான்" எனக்கூறிப் பணிந்தார். அவர் அடிகளுடன் உரையாடிய பின்னர், அவரைத் தம்பாலிழுத்துக்கொண்டால் அவரைவிடச் சிறந்த உதவி கிட்டாதென எண்ணி (பின்னர் இதனை அவரே ஒப்புக்கொண்டார்) அவருக்கு வடமொழி பயிற்ற முன்வந்தார், அடிகளுக்கோ மிகவும் மகிழ்ச்சி. அடிகளின் திறமை ஆசிரியரின் மனதை ஈர்த்தது, ஆசிரியரின் அயரா உழைப்பு அடிகளை அவர்பால் இழுத்தது. 'பெரியோர் கேண்மை இருநிலம் பிளக்க வேர் வீழ்க்குமே'.

இவ்வாறிருக்க, 1608-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் லெயேர்சியோ அடிகள் மதுரை வந்து சேர்ந்தார்.

சேர்ந்தவர் நேராக ராபர்ட்டின் ஆசிரமம் அடைந்தார். அவரது உடை? காவியுடை போதகரைப்போலவே. உணவு? உணவு முதல் எல்லாவற்றிலும் அவரைப் பின் பற்றினர். ஒருமாதம் தங்கினர். பின்னர் உரோமையிலி ருந்த பெரிய சுவாமியாருக்கு எழுதிய அஞ்சலில் "அவர் பிறசமயஞ் சார்ந்தோரிடம் தொடர்பு கொள்ளும் முறை தனைக் கண்டு நான் மிகவும் மனநிறைவு பெற்றமையால், அவருக்கு ஊக்கமளிப்பது என் கடமை எனவெண்ணி, முன்னரிட்ட தடையுத்தரவை நீக்கி, யாதொரு அச்ச மின்றித் தன் முயற்சிகளைத் தொடருமாறு ஆணையிட்டேன். ஆண்டவர் அவரை இவ்வேலைக்கு அழைக்கிறர் என்பதே என் துணிபு'' என எழுதினர். பகலவனைக் கண்ட இருள் போலத் துன்பங்கள் கலைந்தன. வடமொழியிலும் தெலுங் கிலும் பயிற்சி உடையவராய் வெளிவந்தார் தத்துவ போதகர்! ஓ இறைவனின் திருவிளையாடல்கள்தாம் என்னே!

லெயேர்சியோ அடிகள் தாம் அங்குத் தங்கியிருக்கும் பொழுது நடந்ததாகக்கூறும் ஒரு நிகழ்ச்சி தத்துவபோத ரின் திறமையை விளக்குகிறது. இராம செட்டியின் தமை யன் நாகையா செட்டி இறந்துவிட்டான். தமையனை இழந்து தவித்த இ ரா ம செ ட் டி துயரம் பொருது, அடிகளிடம் ஆறுதல் தேடிவந்தான். அடிகள் அவனிடம் "தம்பி பார், உன் தமையன் அன்றொரு நாள் பலமும் புகழும் சிறப்பும் பொருந்தி வாழ்ந்திருந்தான்; இன்று அவன் எங்கே? பெருஞ்செல்வம், உயர்வு, புகழ் இவை யாவும் நின்றன; நிலைபெற்று நின்றன என்றிருந்தான். எனினும் அவை நிற்கவில்லை. பொன்றின நம் வாழ்வு நாள். இறைவன் இட்ட எல்லையைக் கடந்து ஏகா; சுற்றத்தை நீத்து உய்ந்தார் ஈங்கில்லை. அறஞ்செய்வதற்கும், நம் கண்முன் உண்மையெனப்பட்டதைச் செயலிற் காட்டுவதற்கும் இதுவே வாய்ப்பு. இறந்தபின் செய்யவல்லது ஒன்று மில்லை'' என்று இதுபோன்று இறப்பின் திண்ணத்தைப் பற்றியும், எனவே நமக்குள்ள கடமையைப்பற்றியும் பேச

லானர். இவ்வெண்ணங்கள் செட்டியின் மனதைத் துளைத் தன. பருவமழையெனக் கண்ணீருகுத்தான். அவனது கண்ணீர் மழையைக் கண்ட அனைவரும் ஆச்சரியத்தால் ஆழ்ந்தனர். அடிகளிடம் அவன் வைத்த நம்பிக்கையும் நல்லெண்ணமும் எத்தகையன!

லெயேர்சியோ அடிகள் 1608-ஆம் ஆண்டில் தத்துவ போதகரை ஊக்குவித்த பின் மதுரையைவிட்டுப் புறப் பட்டார். வேலையைத் தடுத்து நிறுத்திய தடையுத்தரவு நீக்கப்பட்டதோ அல்லவோ, கடல்மடை திறந்ததுபோல, பலரும் கிறீஸ்துவின் ஒளியில் பங்கு பெறலாயினர். அலெக்ஸிஸின் தமையன், விசுவாசம், தம்பியின் அடி பின்பற்றினர். 'விசுவாசம்' என்ற பெயரின் கதை மிகவும் சுவைமிக்கது. விசுவநாதம் அலெக்ஸிஸின் அண்ணன்— ஒரு விலைமாதுடன் தொடர்பு கொண்டிருந்தான். அவனு டைய தாய் தேவதாயை நோக்கி வேண்டினள். "ரோசா மலர்களால் தேவதாயின் கோயிலை அலங்கரிப்பேன்" என்ற வாக்குறுதியும் அளித்தாள். மனமாற்றம் உடனே நிகழ்ந்தது. அவனுக்குக் கிறீஸ்துவப் பெயரளிக்கும் பொழுது, அதில் மிகவும் மாற்றம் இருக்கலாகாது என்றே அதை விசுவாசம் என அழைத்தார். (ஃவிதேலிஸ் (விசுவாசம்) என்ற பெயருடைய ஒரு வேதசாட்சியின் திருநாளைத் திருச்சபை ஆண்டுதோறும் ஏப்ரல் திங்கள் 24-ம் நாளில் கொண்டாடுகிறது).

அந்தோனியார் பொங்கல், சூசையப்பர் பொங்கல் இன்னபிற பொங்கல் விழாவைத் தமிழ்க் கிறீஸ்துவர்கள் கொண்டாட வந்தது எவ்வண்ணம் தெரியுமா? 1609-ஆம் ஆண்டு தை மாதத்தில் மதுரை நகரெங்கும் பொங்கற் கோலம். "பால் பொங்கிற்று"? என்று நண்பரை வினவிய வண்ணம் மாந்தரனைவரும் காணப்பட்டனர். மின்னும் நகையணிந்த நங்கையரும், கோடிச் சட்டை யிலே, கரும்பின் சாறுவிழ, கரும்பைக் கடித்துக்கொண்டு சென்ற சிறுவர் சிறுமிகளும் காணப்பட்டனர். பாலும்

தேனும் பசு நெய்யும் கலந்து பக்குவமாய் ஆக்கப்பட்ட பொங்கற் சோறு சொக்கநாதர் ஆலயம் சென்று திரும்பியது. இன்பமும் மகிழ்ச்சியும் ஒன்றோடு ஒன்று போட்டியிட்டன. ஆண்டு முழுதும் வயலில் நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுழைத்த வேளாளருடன் மாந்தர் அனைவரும் ஒன்றிக் கொண்டாடும் திருவிழா அது !

கிறீஸ்துவர் மட்டும் அதனை ஏன் கொண்டாடலாகாது? நாம் மட்டும் நாட்டின் திருவிழாவில் பங்கு பெறாது, மற்றவர் மகிழ ஏன் சோர்வுற்றிருக்கவேண்டும்? பாஸ்குத் திருவிழாவின் மகிழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டது நம் சமயம். கிறீஸ்து உயிர்த்த நரதேவன் என்பதே நம் சமயத்தின் அச்சாணி. எனவே மகிழ்ச்சியன்றி மற்றதொன்று நம்மவர்க்கும் புறம்பானது. ராபர்ட் அடிகளின் எண்ணத்தின்படி சொக்கநாதனுக்கு அதனை அர்ப்பணிப்பதைத் தவிர்த்து இவ்விழாவைக் கொண்டாடுவதிற் தவறில்லை "ஒரு சிலுவையை நட்டு அதனடியில் பொங்கல் சமையுங்கள், சமைத்தபின் அதனை என்னிடம் கொண்டு வாருங்கள், நான் அதனை ஆசீர்வதிப்பேன்" என்றார். நம்மவரும் "பால் பொங்கிற்றா?" என்ற கேள்விக்குப் "பொங்கிற்று" என விடையளித்தனர். கிறீஸ்துவச் சமயம் நம் நாட்டின் பண்பாட்டிற்கு முரணானதன்று வென்பது மக்கள் மனதில் ஆழமாய்ப் பதியலாயிற்று.

நம் அடிகள் தம் கிறீஸ்துவரை ஊக்குவிக்கும் பொழுது, சாத்தான் வாளாயிருக்கவில்லை. மதுரைக் கோவிலின் காணியாட்சி, அந்தணரின் சங்கமொன்றில், அவ்வாண்டு மழை பெய்யாததன் காரணமாக தத்துவ போதகரின்மேல் குற்றமாரி பொழிந்துகொண்டிருந்தான். சிவதர்மாவைக் குலத்தைவிட்டு நீக்கவேண்டுமென்பது அவர்களது முடிவான எண்ணம். நொண்டி வாத்தியாரின் எண்ணங்கள் இத்துடன் நிற்கவில்லை. எனினும் இருளின் வாசல்கள் கிறீஸ்துவின் அரசை மேற்கொள்ளா.

# 6

# அந்தணர் எதிர்ப்பு

மதுரை
31-திசம்பர்-1608

மிகவும் வணக்கத்துக்குரிய பெரிய சுவாமிகளுக்கு,

கிறீஸ்துவின் சமாதானமுண்டாகக்கடவது. சுவாமி, எனக்கு ஆண்டவருக்காகப் பாடுபடுவதற்கு அரியதொரு வாய்ப்புக்கிட்டியது. எனினும் கைக்கெட்டியது வாய்க் கெட்டவில்லை. என் கணக்கற்ற பாவங்கள் குறுக்கே நிற்கின்றன. ஆண்டவரின் இரக்கத்தினுல், ஒருநாள் இத் தகைய விருதைப் பெறுவேனென எண்ணுகிறேன். என் விருப்பமெல்லாம் ஆண்டவரது சித்தம் பரலோகத்தில் செய்யப்படுவதுபோலப் பூலோகத்திலும் செய்யப்படட்டும் என்பதே.

இக்கடிதத்தில் எமக்கு எதிராய் எழுப்பப்பெற்ற துன்பப் புயலைப் பற்றிச் சிறிது கூறுவேன் :

இங்குச் சில மாதங்களாக மழையில்லை. மதுரைக் கோயிலின் காணியாட்சியும் அவருடன்கூடிய அந்தணர் களும் இதன் காரணத்தை அறிய முயன்றனர். ஆழ்ந்த ஆராய்ச்சியின் விளைவாக என்னைக் குற்றஞ்சாட்டியுள் ளனர். நான் இங்குப் "புதிய வேதத்தைப்" போதிப்பதே மழை பெய்யாததன் முதற்காரணமாம்.

இதிற் சிறிதளவு சிக்கல் உண்டு. இவர்களுடைய வைதீக நூல்களினின்று நான் கண்டது ஒன்று. முன்னர் இறைவன் நான்கு வைதீக ஒழுங்குப் புத்தகங்களை அளித் தாரென்றும், அவற்றில் ஒன்றுமட்டும் காணமற் போய் விட்டதென்றும் கண்டேன். அவ்வாறு அவர்கள் இழந்த புத்தகத்திலேயே இரட்சணியத்தின் வழி உண்டென்றும் இவர்கள் கூறுவதாகவும் அறிந்தேன். அர்ச். சின்னப்பர்

ஆதென்ஸ் நகரில் மறைந்த கடவுளைப்பற்றிப் பேசினது போலவே, நானும் மறைந்த நூலைப் போதிக்கிறேன் எனக் கூறி வருகிறேன். நான் இவ்வாறு வைதீக நூல்களைப் பற்றிப் பேசுவது கண்டு என்னை முனிவரென்றும் அழைக்கின்றனர்.[1]

இந்த மறைந்த நூலை நான் வெளியாக்குவதைக் கண்ட இந்த வேதியர் என்னை இந்நகர்விட்டு வெளியேற்றினாலன்றி மழை பெய்யாது என முடிவுக்கு வந்துள்ளனர். இத்துடன் நில்லாது அரச சபையில் பெயர் பெற்று விளங்கும் பெருங்குடி மக்களையும் தூண்டிவிட்டுள்ளதாக அறிய வருகிறேன்.

பற்றியெரியும் நெருப்பில் எண்ணெய் விட்டாற் போல, நொண்டி வாத்தியாரும்[2] இவருடன் சேர்ந்து சதிவேலையில் ஈடுபட்டுள்ளார். இந்த நொண்டி வாத்தியார் "அங்கே மற்றொரு சாமி இருக்கிறான். அவனும் பரங்கிதான். முன்னர் அவன் கறுப்பு அங்கி அணிந்து கொண்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். இப்பொழுது இராஜ குலத்தவன்போலவும் சந்நியாசி போலவும் நன்றாய் நடிக்கிறான். காவியை உடுத்துகிறான். சொக்கநாதனுக்கு ஆராதனை செய்வதைத் தடுக்கிறான். நம் சமயம் கூறுவது அனைத்தும் பொய்யெனக் கூறி, விபூதி பூசுதல் போன்றவைகளை வெறும் மூடத்தனம் என அழைக்கிறான். ஐயர்வாள், இவனைச் சும்மா விட்டுவைத்ததால்தான் பெய்த மழையும் போய்விட்டது" எனக் கூறி வைத்தான்.

இதையெல்லாம் கேட்ட வேதியன் வெகுண்டெழுந்தான். நாயக்க மன்னனைக் கண்டு ஒரு முடிவு தேடுவதாகக்

---

[1] இந்தப் பத்தி தெளிவிற்காகச் சேர்க்கப்பட்டுள்ளது. இது 24 திசம்பர் 1608-இல் எழுதிய கடிதத்தில் காணப்படுகிறது.

[2] நொண்டி வாத்தியார் முன்னர் கொன் சாலோ சுவாமிகளால் வேலையிலிருந்து நீக்கப்பட்டவர். அதுமுதல் சுவாமிகட்கு எதிராக உழைப்பதில் மிகுந்த ஊக்கமுடையவர்.

கூறிச்சென்ருன். வழியில் அவனைச் சந்தித்தார் என்னுடைய அந்தண ஆசிரியரான சிவதர்மாவின் மாமா. அவர்கள் இருவரும் நாயக்க அரசனைக் காண்பதற்குமுன்னர் பேசிக்கொண்டிருக்கையில் காணியாட்சி எனக்கெதிராக எண்ணிக்காட்டிய குற்றங்கள் ஏழு:

1. நான் கடவுளில்லை எனச் சாதித்தேன்.

2. அவர்கள் மும்மூர்த்தியென அழைக்கும், பிரம்மா, விஷ்ணு, ருத்திரா என்போர் பற்றிய உண்மையை மறுத்தேன்.

3. பதினன்குலங்கட்கும் மன்னவனுகிய சொக்கநாதன் ஒன்றுமில்லை என உறுதியிட்டு மொழிந்தேன்.

4. மழை வேண்டுமெனின் சொக்கநாதனின் சிலையை உடைக்கவேண்டுமெனக் கூறினேன்.

5. மதுரைக்கு அழிவைக் கொண்டுவரவிருக்கும் பல சீடர்களைச் சேர்த்துள்ளேன். அவர்களிற் சிலர் இந்த நாட்டின் பாப்பானவராகக் கருதப்படும் அலெக்ஸிஸ் பண்டாரத்தின் சீடர்.

6. நான் ஒரு துருக்கனுகவும், கீழ்ச்சாதியினனுகவும் இருந்தபோதிலும், பிராமணர்களை வேலைக்கு அமர்த்தினேன்.

7. நான் அந்தணருடைய வைதீக ஒழுங்குகளைக் கற்று வந்தேன்.

இந்தக் குற்றங்கட்குத் தண்டனையாக என்னுடைய அந்தணர்களுடைய கண்களைப் பிடுங்கவேண்டும், என் ஆசிரியரின் குடுமியையும் பூணூலையும் பறிமுதல் செய்ய வேண்டும், அதாவது குலத்தினின்று நீக்கவேண்டுமென்று பன்வகையாய் மிரட்டினன்.

இதனைக்கேட்ட என் சமையற்காரர்கள் திருமலையும், ஆனேனும் உணவு சமைக்க மறுத்துவிட்டு ஓட்டம் பிடித்தனர். என்னுடைய ஆசிரியரும் தம் அகத்தினின்று உணவு சமைத்துக்கொண்டு வந்தார். திருமலையின் தமையன் கோவிலில் வேலை செய்வதால் அவன் திரும்பி வருவதை நான் விரும்பவில்லை. எனினும் திரும்பி வந்தான். வந்தவனை வேண்டாமென்று கூறி அனுப்பிவிட்டேன். முக்கிய காரணம், அவனுக்கும் சிவதர்மாவுக்கும் எப்பொழுதும் தகராறு.

இந்நிலையில் இராமசெட்டியிடம் ஆள் அனுப்பினேன். போனவன் கண்ணீரும் கம்பலையுமாய்த் திரும்பி, செட்டி தன்னை திட்டியதாகக் கூறினன். பரங்கி ஒருவனுக்குப் பணிவிடை செய்ததே அவனது குற்றம். அவனது அச்சம் தவிர்க்க அவனை மற்றொரு இடத்திற்கு அனுப்பி வைத்தேன். அவன் என்னையும் மதுரையையும் விட்டு வெளியேறுமாறு வற்புறுத்தினன். ஆனால் இதை நான் ஏற்கவில்லை.

நான் அவனை அனுப்பியதற்கு மற்றொரு காரணம்: அவன் கூறிய கதையை நான் நம்பவில்லை. இராமசெட்டி இவ்வண்ணம் கூறியிருப்பான் என என்னால் நம்பவே முடியவில்லை. அவன் போனபின்னர் கொன்சாலோ சுவாமிகள் வந்தார். என்னைக் காவி உடையை நீக்கி கறுப்புடை அணிந்து, பூணூலைக் கலைந்துவிட்டு அந்தணர்களையும் வேலையைவிட்டு அனுப்பி வைக்குமாறு அறிவுரை புகட்டினர். எனினும் என்னால் இவ்வண்ணம் செய்ய இயலவில்லை. ஏனெனில்

1. நான் இழிவுற்று ஊரைவிட்டு ஓடுவதைக் கண்டால் என் புதுக்கிறிஸ்துவர்கள் முன் அவதூறு பெறுவேன்.

2. என்னைக் குற்றஞ்சாட்ட விரும்பினவர்கள் நான் வெளியே இருக்கும் வேளையில் வீட்டைக் கொளுத்திவிடுவார்கள்,

3. என் புதுக்கிறீஸ்துவர்கள் என்னைத் தேடி வந்து என்னைக் காணவிட்டால், பொய்க்குற்றங்களை உண்மையேயென ஒப்புக்கொள்வர்.

4. நான் இங்கே தனியாகவேனும் இருந்தால் அவர்களை எனக்குச் செவி சாய்க்கச் செய்வேன். ஒருவேளை நாயக்க மன்னனைக் காண ஒரு வாய்ப்புக்கிட்டினும் கிட்டலாம்.

5. நான் அந்தணர்களை வேலைக்கமர்த்துகிறேன் என்பதன்பொருட்டு இந்தத் துன்பம் எழுந்தது என்பது தவறு. முற்றிலும் பொய். நான் மும்மூர்த்திகளை ஒப்புக்கொள்ளவில்லை என்பதே உண்மையான காரணம். இன்னும் நொண்டி வாத்தியாரும், பிராமணனும் கூறிய மற்றொன்று: நான் மக்களைக் கிறீஸ்துவர்களாக மாற்றுகிறேன் என்பது. எனவே என் மனச்சான்றுக்கு எதிராய் ஊரைவிட்டு ஓடவோ, ஒளிந்து வாழவோ முடியாது.

இறுதியில் ஆண்டவரை மன்றாடிய பின்னர் இராமசெட்டியிடம் அலெக்ஸீஸை அனுப்பினேன். அவனைக் காண நான் விரும்புவதாய்க் கூறி அனுப்பினேன். கடவுளை நம்பினோர் கைவிடப்படார். ஆண்டவர் நம் பக்கம் நிற்பதால், இராமசெட்டி அந்த இரவிலேயே திரும்பி வந்தான். வந்தவன் நான் மிகவும் முகவாடி, இளைத்திருப்பதன் காரணத்தை வினவினான். நான் அந்தணரால் விளைந்த தொந்தரவை எடுத்துக் கூறினேன். சமையற்காரரும் கூட விட்டுவிட்டு ஓடியதைக் கூறினேன்.

விடையிறுக்கையில் இராமசெட்டி "ஐயரவர்களே, நீங்களனுப்பிய ஆள் என்னிடம் வரவில்லை. பொய்ச்சொல்லிப்பயல் உங்களை ஏமாற்றப்பார்த்தான். அவனுக்கு இந்த அந்தணருடைய சொற்களைத் தாங்கப் போதிய ஆற்றலில்லை, அந்தண வேலையாட்கள், இவர்கள்

போனால் வேறே ஆளில்லையா ? ஆபத்திற்குதவாத இவர்களை அடிகள் விட்டுவிட்டு வேறு நல்லவராய் வேலைக்கமர்த்திக்கொள்ளுங்கள். இந்தக் கோள்சொல்லிகள் பற்றிப் பயப்படாதேயுங்கள். நானே அவர்களை ஒரு கை பார்க்கிறேன். சுவாமிகள் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்கவைக்கிறேன் என்று கூறினன்.

நாயக்க மன்னனைக் கண்டால் அவனிடம் நான் பேச அனுமதி பெறுமாறு கேட்கச் சொன்னேன். என்னைக் குற்றவாளியாகக் கண்டால் கண்டதுண்டமாய் வெட்டட்டும்; நான் குற்றவாளி இல்லையானல், நான் கேட்பது ஒன்றே, என் எதிரிகளையும் சும்மா விட்டுவிடட்டும்"…. இவ்வண்ணம் பல மணியளவு உரையாடியபின்னர் வீடு திரும்பினன். வந்த இடையூறு அவன் மூலம் நீங்கிற்று. நாயக்க மன்னனின் தாராளத் தன்மைதான் எவ்வளவு! நாயக்க மன்னனின் அன்பிற்கு எவ்வாறு கைம்மாறு செய்வேன் என அறியாது விழிக்கிறேன். அவன் உண்மைக் கடவுளை அறிந்து வழிபட இறைவன் அருள்புரியுமாறு அவரை நோக்கி வேண்டுவதே நானறிந்த ஒரே வழி

உங்கள் கீழ்ப்படிதலுள்ள,
**ராபர்ட் தெ நோபிலி.**

புயலுக்குப்பின் நிலவிய அமைதி நீடிக்கவில்லை. அந்தணர் குழுவால் விளைந்த இடையூறு நீங்கிற்று. ஆனல்......

"ஜனவரி மாதம் 14-ஆம் நாள் இரு அந்தணர் என் இல்லம் வந்தனர். விசுவாசம் சில உயர்குல மாந்தரை என்னிடம் கூட்டிவரும்பொழுது, நான் ஆன்ம இரட்சணியத்திற்குதவும் ஒழுங்கைக் கற்பிக்கிறேனெனக் கூறிக் கொண்டு வந்தான். இது இந்த இருவரின் காதிலும் விழவே, என்னிடம் குற்றங்கண்டு என்மீது பழிசுமத்தவே வந்தனர்".

அந்தணர்: என்றும் பொன்ரு மகிமை என்ருல் என்னவென்று கூறுவீர்களா ? அதை அடையும் வழியைக் காட்டினல் மிகவும் நல்லது.

**அடிகள் :** உங்கள் நூல்களிலிருந்து இத்தகைய மகிமையைப்பற்றி அறிதல் எளிதன்று. ஏனெனில் அவை களில் இம்மகிமைபற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. (என அவர்களின் நூல்களிலிருந்தே நிறுவினர்).

**அந்தணர் :** சிலர் மட்டும் ஏன் உயர்குலத்திலும், மற்றவர் ஏன் கீழ் குலத்திலும் பிறக்கின்றனர்?

**அடிகள் :** நம் உடலில் பலவகைப்பட்ட உறுப்புக் கள் உள. ஏன்? நாமறியோம். எனினும் இத்தகைய வேறுபாடு உடல் நலத்திற்கு உதவுகிறது. உடல் முழு வதும் தலைகளாகவோ வயிறுகளாகவோ இருப்பின் எவ் வாறு இருக்கும் என்பதை நீங்களே சிந்தித்துப் பாருங் கள். உடலைப் போலவே உள்ளது இவ்வுலகம். அதிலும் எல்லோரும் தலைவர்களாகவே இருக்கமுடியாது. எல் லோரும் உழவர்களாகவே இருக்கமுடியாது. எனவே இத்தகைய வேறுபாடு ஓர் இன்றியமையாத தேவை.

**அந்தணர் :** கடவுள் நம் ஆன்மாக்களில் வதிகிறார் என்கிறீர். இது உண்மையானால் எல்லோரும் ஒரே சம யத்தைத்தானே பின்பற்ற வேண்டும், அவ்வாறின்றி ஏன் நாமனைவரும் வெவ்வேறு சமயங்களைச் சார்கிறோம்? ஏன் நாம் அறிவுக் கண்களால் அவரைப் பார்ப்பதில்லை? இன்னும் கடவுள் நம் ஆன்மாவில் வதிந்தால் அவர் நம் முடன் துன்பத்துக்காளாக வேண்டுமே. இது எப்படி முடியும்?

**அடிகள் :** சூரியன் தன் ஒளியுடன் உலகைச் சுற்றி வருகிறான். நான் என் வீட்டின் சன்னல்களையும் கதவை யும் அடைத்துக்கொண்டு உள்ளே இருப்பின், சூரியனின் வெளிச்சத்தை நான் பெறுவதில்லை. இவ்வண்ணமே, இறைவனும் எங்கும் இருக்கிறார். அவரது தூய தெய் வீக ஒளி எங்கணும் பரவியுள்ளது. இவ்வொளியே அவரது மிகத் தூய்மை நிறைந்த சமயம். எனினும் இவ் வொளியை ஏற்க நாம் விரும்பாது, நம்முடைய பாவங் கள் மூலம் கதவுகளைத் தாழிட்டுக்கொண்டால், இவ்

வொளியை நாம் அனுபவிக்க முடியாது. கடவுள் நம்முள் இருந்தால் அவரை நாம் ஏன் பார்ப்பதில்லை எனக் கேட்டீர்கள். ஆனால், கடவுள் பல வகைகளில் நம்முள் குடியிருக்கிறார். அவர் தம் ஆற்றல், ஒன்றிப்பு மூலம் குடியிருக்கிறார். அவரது சமயத்தைச் சார்ந்தவர்களில் அவரது அருளின் மூலம் வாழ்கிறார். அவர்களும் தம் ஆன்ம இல்லத்தில் ஆண்டவர் வதிகிறார் என்பதை அறிவார்களே தவிர, ஊனூறு கண்களால் அவரைக் காண அவர்களால் முடியாது. என் முன் நிற்கும் உங்களைக் காண எனக்கு வெளிச்சம் தேவை; இருளில் பார்க்க வொண்ணாது. இவ்வண்ணமே இறைவனின் தூய்மை மிக்கச் சமயத்தில் ஒளியிலன்றி இறைவன் நம்முள் உறைகிறார் என்பதையும் அறிய நம்மால் இயலாது.

கடவுள் நம்முள் இருந்தாலும் துன்பத்திற்குள்ளாவதில்லை. ஏன்? அவர் நம் ஆன்மாவுடன் இணைந்து ஒரு பகுநிலைப்பொருளாக மாறுவதில்லை. உடலும் ஆன்மாவும் இணைந்து மனிதனாக மாறுவதால் ஆன்மா உடலின் துன்பத்திற் பங்கு கொள்ளுகிறது. ஆனால் ஆன்மாவும் கடவுளும் இவ்வாறு ஒரு பொருளாக மாறுவதில்லை. எனவே கடவுள் துன்பத்திற்குள்ளாவதில்லை.

**அந்தணர்** :—நற்பணிகள் என்றால் என்ன? பாவமென்றால் என்ன?

**அடிகள்** :—நற்பணிகள் நன்னெறி முறைப்படி நல்லவைகள். ஆனால் அவை உண்மை இறைவனை அறியாதவர்கட்கு என்றும் பொன்றா இன்பத்தைப் பெற்றுத்தர வொண்ணா. ஆனால் உண்மைக் கடவுளை அறிந்தவர்களுடைய நற்பணிகள் அவ்வின்பத்தை அதிகரிக்கும்.

**அந்தணர்** :—ஆனால் அது எப்படி? நெருப்பு இன்னதென்று அறியாத குழந்தையும் நெருப்பில் கைவைத்தால் நெருப்பு சுடத்தான் செய்யும்; மருந்தின் தன்மை உணராதவனுக்கும் மருந்து நன்மையே செய்யும்; அவைப் போலவே நற்பணியும்.

**அடிகள் :**—இல்லை, இல்லை. மருந்தும் ஒரு வேலையும் ஒன்றல்ல. இதோ பாருங்கள், ஒரு வேலையை ஒரு நல்ல கருத்திற்காகச் செய்தால், அது நல்லது, அதே வேலையை ஒரு தீய எண்ணம் நிறைவேறுவதற்காகச் செய்தோமானால், அது தீயது. இவ்வண்ணம் ஏதேனும் ஒன்று இறைவனுக்காகச் செய்யப்படின், அது ஒரு மனிதனுக்காகச் செய்யப்படும் அதே போன்ற மற்றொன்றை விட எண்ணற்ற மடங்குகள் சிறந்தது.

இறைவனை நீக்கி ஒரு தீய பொருளின்மேல் பற்றுக் கொள்வதே பாவம்.

**அந்தணர் :**—அடிகள் கூறிய அனைத்தும் உண்மை. நேரமாகிறது, நாளை வருகிறோம்.

பன்முறையும் இவ்வண்ணமே நம் அடிகளைக் காண வந்தனர் இவ்வந்தணரிருவரும். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசிக் குற்றங் காண்பதிலேயே கருத்தாய் இருந்தனர். இறுதியில் இவர்களால் விளைந்தது மற்றொரு புயல்.

ஒருநாள் அவர்கள் அவருடைய ஆசிரியர் சிவதர்மாவின் இல்லத்திற்கு வந்தனர். ஏறக்குறைய இருபது அந்தணருடன் வந்து, தத்துவபோதகரின் மீது பழிசுமத்தலாயினர். "இவனைவிடச் செருக்குடைய மற்றவனைக் காணுதலரிது. இவனுக்கு மட்டுந்தான் உண்மைக் கடவுள் தெரியுமோ? நாமெல்லாம் யாராம்? இவன் உண்மையிலேயே ஒரு பெரிய பாசாங்குக்காரன். இவன் நிறமே அவனை ஒரு பரங்கியெனக் காட்டுகிறது. பரங்கியாய் இருந்தபோதிலும் சந்நியாசியாகத் தன்னையே அழைத்துக்கொண்டு அந்தணரையும் மதிக்காத இவனைவிட, பரங்கியாகத் தன்னையே ஒப்புக்கொண்ட அந்தக் கொன்சாலோ நல்லவன். ஏய் சிவதர்மா! நீ இவன் வீட்டிற்குப் போவதைக் காட்டிலும் நான்று கொண்டு சாவது மேல், நாளைக்கு அக்கிரகாரத்தில் இருக்கும் எண்ணூறு அந்தணரும் கூடி இதைப்பற்றி ஒரு முடிவு செய்வோம்" எனக்கூறிக் கலைந்தனர்.

அவர்களது கூட்டத்தில் அந்தணர்கள் வெற்றிபெற்ருல், தத்துவபோதகரினுடையவும் சிவதர்மாவினுடையவும் கண்கள் பிடுங்கப்படும்.

மறுநாள் மெதுவாக விடிந்தது. அந்தணர் யாவரும் ஒருவர் ஒருவராக வந்தனர். சிவதர்மா அடிகளின் பாதம் பணிந்து ஆசீர் வேண்டினர். தன் அடிகளுக்காகப் பரிந்து பேசவே சிவதர்மா விரைந்தார். எனினும் கால்கள் நடுங்கின. ஒருவாருகக் கூட்டத்தை அடைந்தார்.

அடிகளைத் தொலைக்கத்தேடிய அந்தணர் அமுந்தார்.

"நாட்டின் கண்களெனத் திகழும் வேதியர் பெருமக்களே, உங்கள் கண்களில் மண்ணைத் தூவிவிட்டுத் தன்னை ஒரு சந்நியாசி என அழைத்துத் திரிகிருன் இந்த ஊரில் ஒரு பரங்கி; ஆம் அவன் ஒரு பரங்கி. வேறு ஒரு சான்றும் தேவையில்லை. அவனது நிறமொன்றே போதும்.

இதைவிட்டு அவன் மொழிந்துள்ள தேவ தூஷணங்களுக்கு வருவோம்.

"ஏதோ கனக்கண்டுவிட்டு உளறுகிறேன் என எண்ணுதீர்கள். நாம் கூறும் ஒவ்வொன்றையும் அவன் மற்ற வேதியர் முன்னும், ஏன், குலத்தைக் கெடுக்க வந்தக் கோடாரிக் காம்பாகிய இந்தச் சிவதர்மா முன்னிலையிலுமே கூறினன்.

அந்தணரின் புனித நூல்களெல்லாம் பொய்யும் தவறும் நிறைந்த கட்டுக்கதைகளாம். நம்மவர்க்குத் தானமளிப்பதும் இராமநாகூரில் அல்லது வங்காளக் கங்கையில் நீராடுவதும் மகிமையைப் பெற்றுத்தராது என்ருன் எனில், இராஜ குலத்தினர் அந்தணர் வகுப்பினரைவிட உயர்ந்தோர் என்று சாற்றினன் எனில், நம்மில் ஒருவரும் உண்மைக் கடவுளை அறியவில்லை என்று சொன்னன் எனில், நம்மில் ஒருவரும் தீக்ஷைபெற மாட்டோம் என்று உரைத்தான் எனில், அவன் எத்தகைய முட்டாள் என்பதை நீங்களே உய்த்துணரலாம்.

இவனுக்கு மட்டும்தான் உண்மைக் கடவுள் தெரியுமாம். இறைவனால் புகழ் பெற்றுத் திகழ்ந்த எண்ணிறந்த நம் அறிஞர்கள் எங்கே? சந்நியாசிகளையே தம் சீடர்களாக மாற்றித் தெருவில் கூட்டத்தோடு சென்ற நம் உயர் குருக்கள் எங்கே? அவர்கட்குத் தெரியாத ஞானத்தையா இவன் பெற்றுவிட்டான்? ஆன்மாவின் இரட்சணியத்திற்கு இவனுக்கு மட்டுந்தானா வழி தெரியும்? ஏன், கேட்டாலே திடுக்கிடுவீர்கள். என் நண்பர்கள் சிலரையும் தன் கையில் போட்டுக்கொள்ளும் அளவிற்குச் சென்றுவிட்டான் இந்தப் போலிச் சந்நியாசி. நான் தடுத்து நிறுத்திராவிடில் நிச்சயம் நரகம் சேர்ந்திருப்பார்கள்.

உண்மையை எல்லோரும் அறியட்டும் என ஏதோ பேசினேன். நான் கூறியவற்றில் ஏதேனும் பொய்யாயிருப்பின் என் நாக்கைத் துண்டுதுண்டாய் வெட்டுங்கள், நான் உண்மை கூறியிருப்பின் அவனுக்குரிய தண்டனையைப் பெறட்டும். அவனுடைய ஆசிரியரான சிவதர்மாவே துணிந்தால் நான் கூறியது பொய்யென நிரூபிக்கட்டும்.''

இதுதான் அவனது பேச்சின் சாரம். இதற்கிடையே தத்துவ போதகரின்மீது ஏற்றிய பழி அவதூறுகளை வாசகர்களே புரிந்துகொள்ளட்டும்.

கூட்டத்தின் தலைவர் சிவதர்மாவை முன்வருமாறு பணித்தார். "சிவதர்மா நீங்களும் உம் தந்தையைப் போன்றே பெரிதும் கல்வி கேள்விகளிற் சிறந்திருப்பினும் இவ்வண்ணம் பழிக்குள்ளாகியது மிகவும் விந்தையே. தங்கள் நடத்தை பிறழவில்லை எனத் தாங்கள் மெய்ப்பித்தால் எம்மனைவர் மனமும் மகிழ்ச்சி பெறும்; தங்கள் தந்தையும் இந்தத் தள்ளாடிய வயதில் உம்மைப்பற்றிய துயரத்திலிருந்து விடுபடுவார்.'' அவருடைய தந்தையின் மனமோ அச்சத்தால் நடுங்கிக்கொண்டிருந்தது.

சிவதர்மா எழுந்து கூட்டத்திற்கு ஒரு வணக்கம் செலுத்தினர்.

“ஆன்றவிந்தடங்கிய சான்ருேர்களே, நானே வயதிலும் அறிவிலும் சிறியன். ‘சிறியோர் செய் சிறுபிழையெல்லாம் பெரியோராயின் பொறுப்பது கடனே, எனவே என் கூற்றுக்களில் நான் பிழைக்க நேரிடின் மன்னிக்குமாறு வேண்டுகிறேன்.

எனக்கு முன் பேசிய அந்தணர் நான் வெள்ளை நிறத்தவருக்குப் பணி புரிகிறேன் என்ருர். உண்மை. அவர் வெள்ளை நிறத்தவராதலால் பரங்கி என்ருர். அதை நான் ஏற்கவில்லை. இந்த அந்தணரின் நிறம் சிறிது கருப்பு என்பதை நீங்களே அறிவீர்கள். அரிசனன் நிறமும் கறுப்பேயாதலால் இவரை நான் அரிசனனென அழைத்தல் தகுதியா? இந்நாட்டிலனைவரும் ஒரே நிறமே. வேறுபாட்டிற்குத் தாய் நிறமூன்று; பண்பாடே, பழக்கவழக்கங்களே. என் குருவின் நாட்டிலுள்ள அனைவரும் வெள்ளை நிறத்தவர். அவர்களுள் உயர்ந்தோர் தாழ்ந்தோர் இருக்கக்கூடாதா?”

அடிகள் ஒரு பரங்கி என்ற கூற்று தோல்வியுற்றது. அனைவரும் சிவதர்மா கூறியதை ஏற்றுக்கொண்டனர். மற்றவை?

“இவரும் இன்னெருவரும் என் ஐயரிடம் வந்து ‘மகிமை’ பெற எவ்வாறு வாழவேண்டும் எனக் கேட்டனர். அதற்கு ஐயர் வாழும் வழிகள் இரண்டுளவென விடையிறுத்தார். முதல் வழி குளிப்பதிலும், எண்ணெய் தடவுவதிலும், விபூதி பூசுவதிலும், காவடி எடுப்பதிலும் அடங்கியிருக்கிறது. இத்தகைய வாழ்வு நித்திய மகிமை பெற உதவாது என்ருர். அம்மகிமை பெற உதவும் ஒரே வழி கடவுளை அறிந்து, சிநேகித்து, அவருக்குப் பணிபுரிவதிலேயே அடங்கியிருக்கிறது என்ருர். மறுமொழியாக இந்த அந்தணர், கடவுளை அறியாமல் கங்கையிலோ இராமநாகூரிலேயோ குளித்தால் என்ன விளையும் என்று கேட்டார். அதற்கு ஐயர், ‘ஒருவேளை உடல் சுத்தமாகலாம், ஆனல் நித்திய இன்பத்திற்கு அதனல் ஒன்றும்

ஆகாது' என்றார். 'அப்படியென்றால் எங்கள் சமயம் பொய் என்கிறீர்களா?' என்றார் அந்தணர். 'கடவுளை அறியாமல் மனிதன் தீக்ஷைபெறலாம் எனக்கூறும் எந்த வேதமும் தவறே' என்றார் ஐயர். இது உண்மை. அந்த ணரது கூற்று, அவருடைய கூற்றன்றி நம் சமயத்தின் கூற்றன்று. ஐயர் கூறியதெல்லாம் இந்த அந்தணரது சமயம் தவறென்றே. இக்கொள்கையின்படியே, கடவுளை அறியாது அந்தணருக்குத் தானம் தந்து என்ன பயன் என என் ஐயர் உரைத்ததில் தவறு யாது?

இதைக் கேட்ட தலைவர், குற்றஞ்சாட்டியோனை நோக்கி, 'ஏண்டா, கடவுளை அறியாது சுவர்க்கம் சேர லாம் என்பதை எங்கேடாப்பா படித்தாய்? அட மூளை கெட்டவனே, அந்தச் சந்நியாசியின் வார்த்தைகளைப் புரிந்துகொள்ள உன்னால் முடியவில்லையே, அந்தச் சந்நி யாசியோ அறிவிற் சிறந்தவராயன்றோ தோன்றுகிறார்!'

சிவதர்மா தொடர்ந்தார்: "இராஜ குலத்தினர் நம்மவரைவிட உயர்ந்த குலத்தினர் என்று அவர் கூறவே இல்லை. அவர் கூறியதெல்லாம் மனிதர் யாவரும் ஓர் உடம் பைப் போல் அமைந்துள்ளனர் என்றும், அதில் இராஜ குலத்தவரே அதனை ஆண்டமையால், அவ்வுடம் பின் தலைபோல் விளங்கினர் என்றும் கூறினார். இதில் தவறு யாது? நாமும் மன்னனின் அடியில்தானே இருக் கிறோம். இறுதியாக, ஐயர் நம்மில் ஒருவரும் உண்மைத் தெய்வத்தை அறியவில்லை எனக் கூறவில்லை. ஆனால் வெகு சிலரே அறிந்துள்ளார் என்றுதான் கூறினார்".

சிவதர்மாவின் பேச்சைக் கேட்டு அனைவரும் அடி களின் மேலிருந்த சினத்தை விடுத்து, அவரை வீணில் குற்றஞ்சாட்டிய அந்தணனைக் கோபித்தனர். துன்பப் புயல் ஒருவாறு ஓய்ந்தது.

சிவதர்மா இனியும் காலந்தாழ்த்த விரும்பவில்லை. இந்த ஆண்டு இஸ்பிரீத்துசாந்து திருநாளின்பொழுது அவர் ஞானஸ்நானம் பெற்றார். அவருக்குத்தான் என்னே மகிழ்ச்சி!

தத்துவபோதகரின் நற்பெயர் மதுரையில் சரியாயிற்று. எனினும் இவர் கொச்சிக் கிறீஸ்துவர்களோடு உறவாட விரும்புவதில்லை; உயர்குலத்தையே நாடித்திரிகிருர் என்ற வதந்திகள் பரவலாயின. தம் கிறீஸ்துவர்களையும் முன்னவர் கிறீஸ்துவர்களாகி மாறிய கீழ்க்குல கிறீஸ்துவர்களையும் சாதி என்ற மதில் பிரிக்குமா? இதனையும் தகர்ப்பாரா ராபர்ட்? என்ற கேள்விகள் கொச்சியிலிருந்த லெயேர்சியோ சுவாமிகளைச் சிறிது தொந்தரவு செய்தன.

# 7

## புயலுக்குப்பின் அமைதி

"ராபர்ட்டின் திருச்சபை வேறு, கொன்சாலோவின் திருச்சபை வேறு. ஏழைப் பாமர மக்களுக்கு வாய்ந்தவர் கொன்சாலோ, உயர்குல மேதைகட்காய் வந்தவர் ராபர்ட்" என்ற பலவகைப் பேச்சுக்கள் எழலாயின. இவ்வாறு பேசியவர் இரு வகுப்பினர். முதல்வர் கிறீஸ்துவத்தைப்பற்றி ஒன்றும் அறியாதவர்கள்; பின்னவர் பொருமையால் உந்தப்பட்ட கீழ்க்குல கிறீஸ்துவர்களிற் சிலர்.

பொருமை என்பது திருச்சபையின் உள்ளிருந்தே அதைக் குலைக்க முயன்று வந்துள்ளது. திருச்சபையின் முன்னேற்றத்தைத் தடுத்துக் குறைத்துள்ளவைகளில் பொருமை ஒரு முதற்காரணம். சின்னப்பரால் மனந்திரும்பப்பட்ட கிறீஸ்துவர்களைக் கண்டு அப்பால்லோவின் கிறீஸ்துவர்கள் சிறிது பொருமைப்பட்டார்கள். விருத்த சேதனமின்றி ஞானஸ்நானம் பெற்ற மற்றவர்களைக் கண்டு யூதக் கிறீஸ்துவர்கள் அழுக்காறுற்ருர்கள். இங்கேயும் குலமாற்றமின்றி மதமாறிய ராபர்ட்டின் கிறீஸ்துவர்களைக் கண்டு மற்றவர் அழுக்காறு கொண்டதில் விந்தை என்ன?

எனினும் இவ்வழுக்காற்றால் விளையவிருக்கும் எண்ணற்ற இன்னல்களை அகற்ற முனைந்தார் நம் அடிகள். தீமையை முளையிலேயே கிள்ளிவிடலாம் என நினைத்தார். தம் புதுக் கிறீஸ்துவர் இருவரை கொச்சிக்கு அனுப்ப முடிவு செய்தார்.

இவ்வாறு அனுப்ப மற்றொரு காரணமுண்டு. 1609-ஆம் ஆண்டு ஜூன் மாதத்திற்குள் எழுபத்தோரு பேர் கிறீஸ்துவராய் மாறியிருந்தனர். மற்றும் இருபதின் மருக்கு ஞானக் கல்வி அளித்துக்கொண்டிருந்தார். வேலையின் பாரத்தைத் தாங்க முடியாது, ஒரு துணைவரை அனுப்புமாறு பெரிய சுவாமியாரை வேண்டினர்.

“என்ன! எழுபத்தோரு பேரை வைத்துக்கொண்டு வேலை அதிகம் என்றாரா?” என்ற கேள்வி எழுகிறது. இன்று ஆயிரக்கணக்கான கிறீஸ்துவர்களுக்கு ஒரு குருவானர்தான் உள்ளார். அன்று எழுபத்தோரு பேருக்கு இரண்டு பேரா? அன்று இன்றுபோலன்று. அடிகள் காலையில் எழுந்து செபதபம் முடித்து, தன்னிடம் பேச விரும்புவாரோடு வாதித்தார். இத்தகைய உரையாடல்கள் ஏறக்குறைய இரண்டு மூன்று மணிநேரமாவது பிடிக்கும். இவ்வாறு பலரும் அவருடன் சமயம்பற்றி வாதிக்க விழைந்தனர். இதுவே போதுமான வேலை. ஆனால் அடிகளது வேலை இதுமட்டுமன்று. சுமார் நான்கு மணிகளாவது நாளும் தமது சமயத்தில் சேர விரும்பியவர்கட்குச் சமயம் பற்றிய அறிவு புகட்டி வந்தார். அந்தணருடைய வேத புத்தகங்களைக் கற்க வேண்டியும் இருந்தது.

தம் கிறீஸ்துவரைக் கொச்சிக்கு அனுப்பினால் அவர்கள் மற்றவரைப் “பரங்கியர்” என்று வேறுபடுத்தித் துன்பத்திற்குள்ளாக்க மாட்டார்களா? இல்லை. தத்துவபோதகர் அவர்களது மனதைத் தம்மால் ஈர்த்தார். தான் கூறுவது உண்மை என்பதை அவர்கட்குத் தெளிவாக்கினர். கிறீஸ்து கடவுள் மனிதன் என்ற உண்மையை அவர்கள் மனதில் ஆழச் செலுத்தினர். பின்னர் கிறீஸ்துவின் மூலம்

மனித குலத்தில் பிறந்த அனைவரும் சமமே என்பதைக் கூறி, கொன்சாலோவின் கிறீஸ்துவர்களும் தம் சகோதரர் களே என்பதை அவர்கள் அறியச் செய்தார். இங்கிலேயி லும் "பரங்கி" மதமும் கிறீஸ்தவ மதமும் ஒன்றுதான என எண்ணிக் குழப்பமெழுப்பினர் சிலர். மறுமுறை "கிறீஸ் துவம் என்பது நாடு, குலம், பண்பாடு யாவற்றிற்கும் மேம் பட்டது. எந்நாடும், எக்குலமும், எப்பண்பாடும் கிறீஸ்து வத்தை ஏற்கலாம். ஏனெனில் கிறீஸ்துவம் ஒரு குறிப் பிட்ட நாட்டிற்கோ, ஒரு பண்பாட்டிற்கோ உரியதன்று. அந்தப் 'பரங்கி'க் கிறீஸ்துவர்களது பண்பாட்டிற்கும், அவர்களது சமயத்திற்கும் வேறுபாடு உண்டு. பண்பாடு சமயத்தை எதிரொலிக்காதா? உண்மை, பண்பாட்டைச் சமயம் எதிரொலிக்கும். ஆனல் பண்பாட்டைச் சமயம் பாதிப்பதில்லே. எனவே வெப்ப நாடாகிய நம் நாட்டின் பண்பாடு, தட்ப நாடுகளாகிய ஐரோப்பாவின் பண்பாட் டிலிருந்து வேறுபட்டால், அது சமயத்தின் தவறன்று .... தமிழ்ப் பண்பாட்டை முற்றிலும் ஏற்கிறது கிறீஸ்துவ சமயம்" என்று எடுத்துக்கூற வேண்டியிருந்தது. "எனவே ஒரு பண்பாட்டை நாம் வெறுக்கலாம்; ஆனல் அப்பண் பாட்டைக் கைப்பற்றிய மக்களை வெறுத்தொதுக்குவது தவறு" எனக்கூறி அவர்கள் மனதில் 'தாமும் கொன்சா லோ சுவாமியும் பின்பற்றும் மறை ஒன்றே; ஆனல் அவர் ஐரோப்பியராகவே வாழ்கிருர்; தான் தமிழராக மாறி விட்டார்' என்பதை தெளிவாகப் பதிய வைத்தார்.

எனவே இரண்டு கிறீஸ்துவர்கள் மதுரையைவிட்டுப் புறப்பட்டனர். அவர்கள் மூலம் அனுப்பிய கடிதத்தில் "நம் கொச்சின் கல்லூரியும், நகரும் அவைகளில் நிலவும் பழக்க வழக்கங்களும் அவர்கட்குத் துன்மாதிரிகையாயி ருக்கும் என எண்ணவேண்டாம். பழக்க வழக்கங்கள் வேறுபடினும் ஒரே ஆண்டவரைக் கும்பிட்டு, ஒரே சமயத் தைக் கடைப்பிடிக்கிருேம் என்பதைத் தெளிவாய் உணர்ந் துள்ளனர்" என்று எழுதியுள்ளார்.

முன்னரே நாம் இவைகளை இந்நூலில் எடுத்துரைத் திருப்பினும் அவைகளை நம் அடிகளின் கடிதத்திலிருந்தே வாசிப்பதைப் போன்று பயனளிப்பது ஒன்றுமில்லை.

"ஒரே சமயம் வேறுபட்ட பழக்க வழக்கங்களை, மொழிகளைக் கையாளும் வெவ்வேறுபட்ட இனத்தவரால் பயன்படுத்தப் பெறலாம் என்பதை இவர்கள் தெளிவுற அறிவது அவசியம். கிறீஸ்துவர்களாக மாறுவதால் தம் சாதியை மாற்றிப் "பரங்கியராக மாறுவதில்லை" என்பதை இவர்கள் தாமும் தெளிந்து மற்றவருக்கும் கற்றுக்கொடுக்க வேண்டும். இம்மக்களைக் கிறீஸ்துவின் அணைப்பில் வருவதில் நின்று தடுத்து நிறுத்தும் மதில் தம் உயர்ந்த சாதியை விடுத்துப் பரங்கி என்ற இழிபெயருக்கு உள்ளாவோம் என்ற எண்ணமே. போர்த்துக்கீசிய முறையில் பதினைந்து ஆண்டுகள் வாழ்ந்தமையாலேயே, தமது வாழ்வு வெகு புனிதமாயிருந்தபோதிலும், ஒருவரையும் மனமாற்ற இயலாதிருந்தார் சுவாமி கொன்சாலோ, நான் அவர்களுடைய பழக்கங்கட்கேற்ப என்னையே மாற்றியமைத்துக்கொண்டமையால் சில ஆண்டுகளிலேயே பலரையும் கிறீஸ்துவர்களாக ஆக்க முடிந்தது. புதிய கிறீஸ்துவர்கள் மதமாறினும், சாதி மாற்ருது, பழைய முறைப்படியே வாழ்வதைக் கண்டு மற்றவர்களும் தங்கள் அச்சம் தவிர்த்து, நம் சமயத்தை ஏற்பார்கள் என்று நம்புகிறேன்."

இக்கடிதத்தைக் கொச்சிக்குக் கொண்டு வந்தனர் இருவர். விசுவாசமும், மலையப்பன் (இராயப்பன்) என்ற இருவருமே இவ்வேலைக்குத் தூதுவராகப் பொறுக்கி எடுக்கப்பட்டனர். மலையப்பன் பத்திமிக்கவன். மற்ற யாவராலும் மிகவும் மதிக்கப்பெற்றவன். இருவரும் கொச்சியில் பன்னிரண்டு நாட்கள் தங்கினர்.

அன்று, இந்தியாவில் போர்த்துக்கீசியரின் இரண்டாவது பெரிய நகர் கொச்சி. நகரின் மேற்றிராசனக் கோவில் பெருமிதத்துடன் எழும்பி நின்றது. மேற்றிராணி ஆண்டவரின் அரண்மனை நகரை அழகு செய்தது.

பற்பல கோயில்களும், போர்த்துக்கீசிய வணிகரின் செல்வ மாளிகைகளும், பண்டக சாலைகளும் நகருக்குத் தோற்ற மும் ஏற்றமும் அளித்தன. உண்மை, ஊன்நாற்றமும், மீன் வீச்சமும் வரவேற்பு அளித்திருக்கும். எனினும் மலையப்ப னும் அவன் நண்பனும் அவ்வீச்சத்தை விடுத்து, இலவங் கைப்பட்டை, சந்தனம் போன்றவைகளின் நறுமணத்தை முகர்ந்து கடற்கரையை நாடினர்.

ஆ! முதன் முதலில் கடலைக் கண்ணுேக்கினர். தரை யின் எல்லை முடிந்து நீரின் அரசு ஆரம்பிப்பதைக் கண் ணுேக்கினர். அந்த நீலப்பரப்பின் எல்லையை அளக்க வொண்ணுத தம் கண்களின் எளிமையையும் எள்ளினர். அக்கடலுக்கு அப்பாலும் மனிதர் வாழ்கின்றனர் என்பதை எண்ணினர். ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பால் இருக்கும் இத்தாலிய நாட்டைப்பற்றியோ, பாலஸ்தீனைப் பற்றியோ நினைத்தனரா?

மதுரை திரும்பவேண்டிய நாள் வந்தது. லெயோர் சியோ அவர்கட்குப் புதுத் துணிமணிகளும் மற்றப் பரிசு களும் அளித்து அனுப்பலாமென விரும்பினுர். அவர்கள் அளித்த விடை குறிப்பிடத்தக்கது. "நாங்கள் இங்கே இவற்றிற்காக வரவில்லை. இவைகளுடன் எங்களை எம் மதுரைக் கிறிஸ்துவர் கண்டால்...நிச்சயம் அவர்கள் முன் போகத்துணியோம். ஆனல் தாங்கள் எங்களுக்கு அளிக் கக்கூடிய ஒன்று உண்டு. செபமாலைகள், படங்கள், சுருபங்கள் இவை போன்றவை மதுரையில் மிகவும் அரியன. எனவே, அவைகளை நீங்கள் தந்தால் மெத்த நன்றியுடன் ஏற்போம்."

இரண்டு சுவாமிமார்களுடன் கிராங்கனூர் மேற்றி ராணியாண்டவர் தங்கியிருந்த ஊருக்குச் சென்றனர். மேற்றிராணியார் அவர்களைத் தந்தையின் வாஞ்சை யோடும் அன்போடும் வரவேற்ருர். அந்த ஊர் கிறீஸ்துவர் அப்போஸ்தலர் தோமையாரால் மனந்திருப்பப்பட்டவர் கள். அவர்களோ தங்கள் பழக்க வழக்கங்களை எள்ளள

வேனும் மாற்ருது வாழ்ந்துவந்தனர். மதுரைச் சகோதரர்களைக் கண்டதும் அன்பு பீறிட்டது. இவ்வன்பை அதிகரிக்கவோ என்னவோ, ஆண்டவர் அவர்களைச் சில கேள்விகள் கேட்டார். சிறிது சிக்கலான கேள்விகள்தாம். எனினும் 'சட்'டென்று மிகத் தெளிவாய்ப் பதிலிறுத்தனர். அதைக் கண்டதும் கிறீஸ்துவர்களும் மேற்றிராணியாரும் ஆனந்தக் கண்ணீர் சொரியலாயினர். ஏன் இந்த ஆனந்தம்? ஆம், ஆண்டுகள் பலவாக கிறீஸ்துவிற்கு அடைபட்டிருந்த கதவு மெதுவாகத் திறந்திருக்கிறது.

பின்னர் உறுதிபூசுதல் பெற்றனர். மற்ற எல்லாச் சடங்குகளும் முடிந்துவிட்டன. மேற்றிராணியாண்டவர் தன் ஆடம்பர உடுப்புகளுடன் அந்தக் கிறீஸ்துவர்கள்முன் நிற்கிருர். கன்னத்தில் தட்டி மோதிரத்தை முத்திசெய்ய அனுமதிப்பதுதான் எஞ்சியது. "உங்களது சமயத்திற்காக இன்னல், இடையூறுகள், பழி, அவதூறு அனைத்தையும் ஏற்கத் தயாராய் இருக்கவேண்டும்" என்ருர் ஆண்டவர். "எங்களது சமயத்திற்காக உயிரையும் கொடுக்கத் தயார்" என விடையிறுத்தனர். உண்மை, பின்னர் சேசு சபையில் சிலர் போதகரைக் குற்றம் சாட்டி வேதத்துக்குப் புறம்பே தள்ள முயற்சிசெய்யும் நேரத்தில் இன்னும் பலரும் அவரைக் கைவிட்டு, அவருக்கு எதிரே கலகம் செய்து, அவர் மீது வீணே பழி சுமத்திய காலத்தில், தன் சமயத்தின்பாற்சார்ந்த, அதனைத் தமக்களித்த ஐயருடன் ஒன்றி நின்றனர் இவ்விருவரும். என்னே இஸ்பிரீத்துசாந்துவின் வரங்கள்!

இவர்கள் இருவரும் மதுரை திரும்பினர். ஆனல் சுவாமிகள் விரும்பிய துணைவரெங்கே? ஆம்! நம் மதுரைக் கிறீஸ்துவர்கள் கொச்சியில் இருக்கும்பொழுது அங்கே மதுரையின்பால் மக்களின் மனதைப் பற்றி இழுத்தனர். சுவாமி லெயிடாவோ மிகவும் புனித குரு. அவர் துறவறத்தில் புதிதாய்ச் சேருவோருக்கு ஈராண்டுகளாகத் துறவறக் கல்வி புகட்டும் ஆசிரியர். இப்பொழுது தமிழ் மக்களும் இத்தகைய ஆசிரியரை 'மாஸ்டர்' சுவாமி என அழைக்

கின்றனர். அது ஆங்கிலச் சொல்லான 'நோவீஸ் மாஸ்டர்' என்பதன் ஒரு பகுதியே.

'மாஸ்டர்' சுவாமியாயிருந்த லெயிடாவோ அடிகள் மதுரைக்குச் சென்று அங்குப் பணியாற்ற துடியாய்த் துடித்தார். அவருக்குத் தேவையான மனத்திடனும் மேம்பட்ட புனிதத்தன்மையும் இருந்தன. பெரிய சுவாமியாரது இணக்கத்தைப் பெற்ற பிறகு, கொச்சியிலேயே தத்துவ போதகரின் சந்நியாச உடையை அணிந்து கொள்ளலானார். பின்னர் அவர் இரண்டு கிறீஸ்தவர்களுடன் மேற்குத் தொடர்ச்சி மலையைக் கடக்கலானார்.

வானத்தின் முகட்டைத் தொட்டு நின்றன எண்ணற்ற குன்றுகள். குன்றின்மேல் குன்று நின்றது. உயர்ந்த மலைகளும் இடையிடையே காணப்பட்டன. அடர்ந்த காடுகள் குறுக்கிட்டன. காட்டின் ஊடே செல்ல வேண்டியிருந்தது. பகலில் அடியோசை கேட்டு அச்சம் கொண்டு இங்கும் அங்கும் மான்கள் ஓட, குரங்கினங்கள் மரத்திலிருந்து வேடிக்கை பார்க்க, புள்ளினங்கள் திடீரென மனிதர் வருவதைக் கண்டு பறந்து ஓட, மெதுவாகத் தூரத்திலிருந்து மதுரை நோக்கிச் சென்றனர். இரவில் புலிகளின் குரலும், யானைகளின் கனைப்பும் அவரை அடிக்கடி எழுப்பின. நரிகளின் அச்சுறுத்தும் ஊளைகள் இரவின் கோரத்தை அதிகரித்தன. வயதான லெயிடாவோ அடிகள் மெதுவாக அடிமேல் அடிவைத்துப் போவதிலிருந்து, அவருடைய உடற் களைப்பும் உள்ள இளமையும் தெற்றெனத் தெரிகின்றன.

இறுதியில் மதுரையிலிருந்து அறுபது மைல் தொலைவுள்ள உத்தமபாளையம் வந்துசேர்ந்தார். இனிமேல் நடக்க முடியாது, உடல் சோர்ந்துவிட்டது. அறுபது மைல்களையும் கால்நடையாகவே முடிப்பது என்பது அவரால் முடியாது. ஒரு காளைமாட்டின்மேல் ஏறிக்கொண்டார். "ஜில் ஜில்" எனச் சென்றது காளை. அவரை வழியிற் கண்ட மக்கள் காளையை வாகனமாகக் கொண்ட எமனை நினைவுற்

றனர். சாத்தானின் பிடிகளிலிருந்து ஆன்மாக்களை விடுவிக்கத்தானே போகிறார்!

ஆகஸ்டு மாதம் 26-ஆம் தேதி மதுரை வந்தடைந்தார். 'சின்ன ஐயர்' என்ற பட்டத்துடன் வேலை துவக்கினார். அந்தோ பாவம்! தமிழ் அவருக்கு எளிதில் வருவதாயில்லை. அதுமட்டுமன்று. தத்துவபோதகர் செய்துவந்த தபசைச் செய்ய அவரால் முடியவில்லை. நாளைக்கு ஒருமுறை உண்பது மட்டும் அவரது உடல்நிலைக்குப் போதவில்லை. பொழுது சாய்ந்தபின் மற்றுமொரு முறை உணவு தேவையாயிற்று. ஐந்து ஆறு மாதங்கள் தங்கினார். அவரால் தபசு செய்ய முடிந்தது. ஆனால் தமிழ் வரவில்லை. 1610-ஆம் ஆண்டு ஜூன் மாதத்திற்கு முன்னர் கொச்சிக்குத் திரும்ப வேண்டியதாயிற்று.

தங்கிய சில மாதங்களாக அவர்தான் போதகருக்குப் பதிலாய்க் கடிதங்கள் எழுதினார். அவருடைய கடிதங்கள் ராபர்ட்டைப் பற்றிய சிறந்த அத்தாட்சி. தமிழைக் கற்க இயலாமையினால் தத்துவபோதகரைத் தனியராய் விட்டு விட்டு ஏதிலர்போல் போகவேண்டியிருந்தது: என்ன பரிதாப நிலை!

ஆனால் தத்துவபோதகரின் சிந்தனைகள்தாம் என்ன! 'தம் எண்ணத்திற்கேற்ப கிடைத்தார் ஒரு துணைவர். புனித வாழ்வும், உறுதியான உள்ளமும் பற்றி எரியும் தேவ சிநேகமும் வாய்ந்த லெயிடாவோ அடிகளாலேயே இந்தத் தமிழைக் கற்க இயலாது போயிற்று. அறிவும், பண்பும், உடற்றிடனும் உள்ளத்திடமும் வாய்ந்த மற்றொருவர் கிடைப்பாரா? அவ்வாறு கிடைக்காவிட்டால்........ கிடைக்காவிட்டால்.......கிடைக்காவிட்டால்' தனக்குப் பின் மதுரைக் கிறீஸ்துவர்கள் மேய்ப்பனில்லா ஆடுகளாலல்லோ மாறுவர்! தான் நேற்றி வியர்வை நிலத்தில் விழக் கற்ற இந்துக்களின் வேத நூல்களைக் கற்றுப் புலமை பெறுவது யார்? 'ஐயர்' என்ற நிலையைத் தொடர்ந்து காப்பாற்றுவது யார்? நம் வேத நூல்களோ

இதுவரை எழுதப்பெறவில்லை. சிவதர்மாவின் மூலம் முழுவதையும் அறிந்தார் ராபர்ட். முதன்முதல் ஒரு கிறீஸ்துவர் இவற்றை அறிந்தார். தான் பெற்ற செல்வத்தை வாரிசின்றி இழக்க நேரிடுமோ?

தூரத்தில் சேசுவின் வெள்ளை உருவம் தெரிந்தது. 'என்னைப் பின்பற்று'. யாருக்கு இந்தக் கட்டளை? ஏழைச் செம்படவருக்கு. மறுபடியும் இருள். கல்வாரிச் சிலுவை தென்படுகிறது. "ஆண்டவரே இங்கிலையிலா உயிரைவிடப்போகிறீர்? உம்முடைய இராச்சியத்தின் நிலையாது?" பதில் இல்லை. ஆனால்........அதோ சேசு பிலாத்தின் முன் நிற்கிறார். "என் இராச்சியம் இவ்வுலகத்தைச் சார்ந்ததல்ல". எங்கிருந்தோ மற்றொரு குரல்: "நரகத்தின் வாசல்கள்.அதை மேற்கொள்ளா".

மனத்தை இவ்வெண்ணங்களால் தேற்றிக்கொண்டார். "கோயிற் சொத்தைத் திருடிக்கொண்ட இந்தப் பரங்கியைச் சும்மாவிடலாமா" என்று பயங்கர சப்தம் வெளியே கேட்டது. மூவர் சினத்துடன் வரும் ஓசை செவியிற் பட்டது. ஐயரின் முகம் ஒளி வீசிற்று. கிறீஸ்து தம் சிலுவையைச் சுமக்க சீரேன் ஊரான சீமோனின் உதவியையும் நாடினார்.

# 8

## கிறீஸ்துவர் மறுப்பு

அடிகளைச் சோதிக்க வந்த சிவதர்மா இப்பொழுது அவரின் மாணக்கனாக மாறி நந்திருமறையின் புனித ஒளியில் மிளிரலானார். அவரது உடம்பிற் திகழ்ந்த சமயக் குறிகள் மறைந்தன; ஆனால் சாதிக் குறிகள் தொங்கின. உள்ளம் மாறியதால் அவரது வெளி உருவத்தில் மாறுதல்கள் தென்பட்டன. வெளி உருவத்தில் மட்டுமன்று, நடத்தையிலும்

கூட. உயிரில்லாச் சிலைகளின் முன் மணிக்கணக்காய் ஈரத்துணியுடன் அமர்ந்திருந்தது மாறி உண்மை இறைவனின் முன் தியானத்தில் அமர்ந்திருந்தார். வெறுஞ் சிலைக்கு எண்ணெய் வார்த்து அந்தணர்கள் ஆற்றிய பலிகளைவிடுத்து, சிலுவை மரத்திற்கும் அதன் வழியே மக்களனைவரின் மேலும் தன் குருதியைப் பொழிந்து, அதன் மூலம் எண்ணில்லா வரங்களைப் பொழிந்த மனித தெய்வத்திற்குத் தன்னையே பலியாக அளிக்கும் ஒரே உண்மைப் பலியில் ஒன்றி கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோட அமர்ந்திருந்தார். தன்னை ஆட்கொண்ட தெய்வத்தின் உண்மையை, புனிதத் தன்மையைக் கன்னிமரி போன்று மனத்திலிருத்தித் தன் கொள்கையைச் செயல் முறைகளிலும் துலங்குமாறு செய்தார்.

மாறிய அவரது நடத்தையை எல்லோரும் ஒரே கண்ணோடு நோக்கவில்லை. தெய்வம் விருப்புடன் நோக்கினர்; உன்னதங்களில் வாழும் தூயோரும் மகிழ்வுடன் நோக்கினர்; போதகரும் மகிழ்ச்சியுடனும் ஆச்சரியத்துடனும் நோக்கினர். ஆனல் அவருடைய துணை அந்தணர்கள் அவ்வாறு நோக்கவில்லை. ஆராதனைகட்கு அவர் வராதது உண்மைச் சமயத்தைச் சார்ந்ததால் அன்று; கடவுளை மறுக்கும் ஒரு போலிச் சந்நியாசியைச் சேர்ந்ததால்தான் என எண்ணினர். உண்மை அறியாத அவர்களது போக்கிலும் நியாயம் உண்டன்றோ. கீழ்குலத்தினரை அவர் வெறுத்தொதுக்காதது, கிறீஸ்துவின் பிறர்சிநேகத்தைக் கடைப்பிடித்ததினலன்று; ஒரு கீழ்த்தர மனிதனுடன் நட்புக் கொண்டதனலே என்று கருதினர். அவர்கள் கருத்திலும் ஓரளவு நீதி உண்டு. உண்மை, முன்பு பன்முறை அந்தணர் சங்கங்களில் தத்துவபோதகர் குற்றமற்றவர் என்பதை ஒத்துக்கொண்டனர். எனினும், கல்வி கேள்விகளிற் சிறந்தவனய் விளங்கிய சிவதர்மா ஆராதனைக்கு வருவதைக் கைவிட்டான்; 'சூத்திரருடன்' பழகுவதற்குக் கூசுகிறனல்லன். அவனைக் கெடுத்தவன் நம் அடிகளே என்றனர்.

தன் மனமாற்றத்தால் தன் குருவும், ஆசிரியரும், நண்பரும், மாணுக்கருமான அடிகளின் பெயர் தூற்றப்படுவதைக் கண்ட சிவதர்மாவின் மனம் அனலிற்பட்ட புழு போல் துடித்தது. உண்மை. நாம் பின்பற்றும் கிறீஸ்துவின் பெயரும் இவ்வாறுதானே அடிபட்டது. எனினும், ஆசிரியரின் நற்பெயருக்குப் பழுதுற்ருல் நாளை கிறீஸ்துவின் கத்தோலிக்கச் சமயம் தமிழ்நாட்டில் வேரூன்ருது. கிறீஸ்து இந்நாட்டில் அரசோச்ச வேண்டுமானுல், அவருடைய குருக்களின் உள்வாழ்வும் வெளி வாழ்வும் மட்டுமல்ல, நற்பெயரும் நற்புகழும் ஒருவித அழுக்குமின்றி நின்று நிலவ வேண்டும். அன்றேல் இல்லை. எனவே தன் ஆசிரியரின் நற்பெயரைக் காப்பாற்றல் தன் தலைக்கடன் என முடிவுக்கு வந்தெழுந்தார். எழுந்தவர் திகைத்தார். ஊர் முழுதும் 'தத்துவ போதகர் மதுரையாரைப் பரங்கியராக மாற்றுகிருர்' என்ற ஒரே பேச்சு.

என்ன நடந்தது? நடந்ததா? கிறீஸ்துவர்களே அவரது வீட்டினுள் அடி வைக்க மறுக்கின்றனர். இது என்ன சமய மறுப்பு இயக்கமா? அல்லது சத்தியாக்கிரக இயக்கமா?

நடந்தது இதுதான். புதுக்கிறீஸ்துவர்களின் தொகை அதிகமாகிக்கொண்டு வருவதைக் கண்ட ராபர்ட் அடிகள் ஒரு புதிய கோயில் கட்ட ஆரம்பித்தார். அந்த ஆண்டு 1610-இல் ஏறக்குறைய 120 பேர் அவருடைய சீடர்களாயிருந்தனர். சிறிய குச்சில் போதாது? ஏன்? பிறர் தம் கடவுளுக்கு அழகாக மிகப் பெரிய உயர்ந்த கோயில் எழுப்புவதைக் கண்ட மதுரைக் கிறீஸ்துவர்கள் தம் உண்மை தெய்வத்திற்கு, விண்ணையும் அதன் அரசையும் உதறி, அடிமையின் வேடந்தாங்கி தம்மிடையே திருச்சபையில், தேவநற்கருணையில், தம் ஒவ்வொருவர் உள்ளங்களில் உறையும் தெய்வத்திற்கு, ஓர் அழகிய கோயில் ஏன் எழுப்பக்கூடாது என எண்ணினுர்கள். ஆம், அதே கருத்துடனே கோயில் கட்ட ஆரம்பித்தார் தத்துவ போதகர்: மேனுட்டு முறையிலா? இல்லை. இந்தியாவில்

இந்தியர் கும்பிடுவதற்காகக் கட்டப்படும் கோயில் மேனாட்டு முறையில் கட்டப்பட்டு பரங்கியர் கோயில் என்ற பெயர் பெற அவர் விரும்பவில்லை. எனவே இந்தியக் கலையில் பொருளழகுடன் உருவழகையும் இணைத்து, இந்தியாவில் இந்தியக் கிறீஸ்துவக் கலையை உருவாக்கி, அதைத் தன் கோயிலில் பயன்படுத்தலானார்.

கோயில் வேலை நடந்து கொண்டிருந்தது. புதுக் கோயிலைக் காணப் பலரும் கூடினர். கொன்சாலோ சுவாமி களின் கிறீஸ்துவர்களும் கூடினர். இந்துக்களும் இருந்த னர். பற்பல கேள்விகள் கேட்டனர். தத்துவபோதகரின் கிறீஸ்துவர்கள் பதில் அளித்தனர். தாம் பரங்கியராகாது எவ்வாறு தத்துவபோதகரின் முறைப்படி உண்மைத் தெய்வத்தின் அடிபணிய வந்தனர் என்று பலவும் கூறினர். பரங்கியர் என்று பட்டம் சாட்டப்பெற்ற கொன்சாலோ சுவாமிகளின் கிறீஸ்துவன் ஒருவனால் இதைப் பொறுக்க முடியவில்லை. பொறாமை வேலை செய்தது.

இன்று திருச்சபை உலகை முழுவதும் வெல்லவில்லை என்றால் அதற்கு ஒரு காரணம் நம் கிறீஸ்துவர்களுள் பிறர் சிநேகம் இல்லாமையே. முதல் நூற்றாண்டில் கிறீஸ்துவின் சீடர்கட்கு இடையே நிலவிய பிறர்சிநேகம் எண்ணற்ற பலரையும் கிறீஸ்துவின் அடிகளிற் கொண்டுவந்தது. ஏனெனில் நம் ஆண்டவர் கூறியது என்ன? "நீங்கள் ஒருவரை ஒருவர் நேசிக்கிறீர் என்பதனாலேயே உலகம் நீங்கள் என்னுடைய சீடர்கள் என்பதை அறியட்டும்". இருபதாம் நூற்றாண்டில் நம்மிந்தியப் பெரியோர்களுள் ஒருவர் கூறியது என்ன தெரியுமா? "கிறீஸ்துவரின் கொள்கைகளையும் அவருடைய போதனைகளனைத்தையும் நான் நம்பத் தயார். நான் சிலவற்றை அநுசரிக்கிறேன். ஆனால் கிறீஸ்துவர் இன்று நடப்பதைப் பார்த்தால் எவ் வாறு அவர்கள் மதம் உண்மையென்பதைப் பற்றி எனக்கு ஐயம் எழுகிறது." அவர் கிறீஸ்துவ மதத்தைத் தழுவா மலே இறந்தார். இது இன்றுமட்டுமன்று; 17-ஆம் நூற் றாண்டிலேகூட நிலவியது.

அந்தக் கிறீஸ்துவன் ஒரு வாய்த்துடுக்கு. பொய்யையும் மெய்போல அடுக்குமொழியில் தோற்றுவிப்பவன். “கிறீஸ்துவரனைவரும் பரங்கிகளே; ஏனெனில் ஞானஸ்நானத்தின்பொழுது குழந்தையின் நாவில் உப்பை வைக்கிறார் குரு. அன்றே அனைவரும் பரங்கிகளாகுகிறோம்” என்று அறை கூவினான். எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண வேண்டாமா? உப்பை வாயில் வைப்பதாலா பரங்கிகளாய் மாறுகிறோம்? பரங்கியரல்லாதவர் உப்பில்லாமலா சாப்பிடுகிறார்கள்? சற்றேனும் சிந்திக்கவில்லை அந்தக் கிறீஸ்துவர்கள். தத்துவபோதகரின் புதுக்கிறீஸ்துவர்கள் உடம்பில் புல்லரித்தது. பரங்கி! நயவஞ்சகன்!! உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசிக் குடியைக் கெடுக்கவந்த புல்லுருவி!!!

நடந்தனர் அனைவரும் ஐயரின் ஆசிரமத்திற்கு. அங்கு அவரது வாசலில் நுழைய மறுத்தனர். “உன் சமயம் உண்மை சமயம் என்பதை ஏற்றுக்கொள்ளுகிறோம். ஆனால் பரங்கியராக மாற்றுவதனால் உடன்படோம்” என்றனர்....அடுத்ததாக “பரங்கியே வெளியேறு” என்று முழங்கினர். நடந்ததை அறிந்தார் அடிகள். மூன்றாண்டுகளாக இராமாயணம் ஓதியும் சீதைக்கும் இராமனுக்கும் என்ன தொடர்பு எனக் கேட்ட கதையாயல்லவோ போயிற்று. இன்னும் அவர்களுடைய ஆசிரியர் கூறுவதை நம்பாது யாரோ தெருவில் ஒருவன் கூறியதை நம்பி ஆசிரியருக்கெதிரே எழுகின்றனர். இந்த அவிசுவாசிகள். “அவிசுவாசிகள்” “இன்னுமா அவிசுவாசிகளாயிருக்கிறீர்கள்?” எத்தனை முறை நம் ஆண்டவர் இவ்வாறு அப்போஸ்தலர்கட்குக் கூறியுள்ளார். ஆழத்திரைக்கடலில் அலறி அடித்துக் கொண்டுவந்த இராயப்பருக்கு எவ்வாறு பதிலளித்தார்? அலையையும் புயலையும் கட்டளையிட்டுத் தான் தெய்வமென வெளிப்படுத்தினார்.

அவ்வாறே தானும் ஒரு பரங்கியல்லன் என வெளிப்படுத்துவார் தத்துவபோதகர். இதற்குப் புதுமைகள்

தேவையில்லை; ஒரு நல்ல அறிவிப்பே போதும். "நான் ஒரு பரங்கியல்லன், ரோமை நகரிலே ஒரு பெருங்குடி உதித்த மன்னன் மகன் யான்; எனது மறை விண்ணையும் மண்ணையும் இவற்றிலடங்கிய அனைத்தையும் படைத்த பரமனின் மறை; அதை ஐரோப்பா அல்லது ஆசியாவின் வாசல்கள் மேற்கொள்ளா, அது அனைவருக்கும் உரிய மதம், அதை எவரும் எப்பண்பாட்டவரும் அனுசரிக்கலாம்" என எழுதி வீட்டிற்கு முன்னிருந்த ஒரு மரத்தில் கட்டித் தொங்கவிட்டார். பலரும் அச்சம் நீங்கி அடிகளிடம் மன்னிப்புப் பெற்றனர்.

தனக்கும் கொன்சாலோ சுவாமிகட்குமிடையே பிளவு உண்டாவதைப் பார்த்து, கொன்சாலோ சுவாமிகட்கு ஒரு கடிதத்தில் இருவருடைய மறையும் ஒன்றே; வாழும் முறை தான் வேறு என்று அவர்கட்கு விளக்குமாறு தத்துவ போதகர் வேண்டினர். மற்ற உறுதியான கிறீஸ்துவர்களும் அவர்கட்குப் புத்திமதி கூறி மதுரையில் அமைதியைப் புகுத்தினர்.

அமைதி நிலவுவதைக் கண்ட சிவதர்மா அவ்வமைதியை நிலைநிறுத்த வேண்டித் தாம் முன்னர் எடுத்த முடிவைச் செயல்முறையில் காட்ட விரைந்தார். மதுரையில் அறிவிற் சிறந்த ஓர் அந்தணரிடம் சென்றார். நடப்பதைக் கூறினர். "கற்றோரும் கல்லாதாரைப் போன்றே உளறிக் கொட்டுவது தகுமோ?" என்று கேட்டார். வந்து உண்மை என்ன என்பதைத் தெரிந்துகொண்டு பின்னர் அவர் நல்ல உயர்குல பெரியோராயின் இத்தகைய பேச்சுக்களைத் தடுக்கவேண்டும். அன்றேல் அவரைத் தண்டிக்க வேண்டும்" என்றார். அந்த அந்தணரும் ஒத்துக் கொண்டார். அவருடன் கூட நான்கு அந்தணரைக் கூட்டிக்கொண்டு 'ஐயரின்' வீட்டிற்குச் சென்றார். அங்கே பெரிய வாக்குவாதம்.

இத்தகைய வாதங்கள் பொதுவாய் இந்துக்களுடைய கொள்கைகளான மறுபிறப்பு ஒரே தெய்வம், தெய்வத்தின்

மூன்று முக்கிய செயல்கள், இவைபற்றியே நிகழ்ந்தன. ஆனால் ஒரு கேள்வியைச் சில கத்தோலிக்கரும் கேட்கிறார்கள். "தெய்வம் நம் உள்ளங்களில் உறைகிறதென்றால் ஏன் கோயில் குளம் இதெல்லாம்" என்பதே. இதே கேள்வியைத்தான் இந்த அந்தணரும் நம் அடிகளைக் கேட்டனர். எவ்வாறு இறைவன் தேவ இஷ்டப்பிரசாதத்தின் மூலம் நம் உள்ளங்களில் உறைகிறார் என்றும், எவ்வாறு நரகடவுளான சேசுநாதர் நம் கோயில்களில் அப்பத்தின் குணங்களுக்குள்ளே மறைந்து வாழ்கிறார் என்றும் விளக்கிக் கூறினார். இவையெல்லாம் கேட்ட அந்தணர்கள் அவர் ஒரு பெரிய ஞானி என்றும், ஒரு கீழ்க் குலத்தான் ஞானியாக வாழ இயலாதென்றும் கூறிச் சென்றனர்.

அந்த முக்கிய அந்தணர் தனது வீட்டு வாசலிலே மற்றொரு அறிவிப்பைத் தொங்கவிட்டார். இந்த அறிவிப்பு தனியாகத் தொங்கவில்லை. அத்துடன் ஒரு கசையும் இரண்டு செருப்புகளும் தொங்கின. ஏன்? "நான் தத்துவ போதகரைச் சோதித்ததில் அவர் ஒரு பெரிய ஞானியென்று தெரிகிறது. எனவே அவரை நாத்திகர் என்றெல்லாம் யாரேனும் ஏசினால் அவர்கட்குப் பரிசு கசையடியும் செருப்படியுமே!"

இதனால் அத்தகைய அவதூறுகள் நின்றன. ஆனால் ஐயம் நின்றபாடில்லை. அடிக்கடி அந்தணர்கள் வந்து பரிசோதித்துப் போவது வழக்கம். எனினும் இறுதியாக மதுரை மாந்தருக்கும் தத்துவபோதகருக்கும் இடையே அமைதி நிலவலாயிற்று. கிறீஸ்துவ சமயம் அந்நகர் மாந்தருக்கு ஒரு பரங்கியர் மதமன்று; அது உண்மையான மதம். மதுரை நாயக்க மன்னன் கொன்சாலோ சுவாமிகளைப் போன்றல்லாது உண்மை மதக் குருவாக அடிகளை நடத்தலானான். மதுரை மக்களும் அவரை அறிவிலும் சிறந்து விளங்கும் ஒரு புனித சந்நியாசியாக ஏற்றுக் கொண்டுவிட்டனர். உண்மை, நான்கைந்து முறைகள் அவரது வாழ்விற்கே உலைவைக்கத் தேடினர். ஆனால்

குற்றமுணர்ந்து குணந்திருந்திவிட்டனர். ஆண்டாண்டு களாக 1607 வரை கிறீஸ்துவை அறியாது, அறிந்தும் ஏற் காது வாழ்ந்த மக்கள் 1610-ஆம் ஆண்டு அக்டோபருக் குள் 120 பேர் கிறீஸ்துவர்களாக மாறினர்; இன்னும் அநேகர் மாற விரும்பினர். திருச்சபை மதுரையில் வேரூன்றிவிட்டது என்பதை உணர்த்துவதுபோல் எழுந்து நிற்கிறது ஓர் அழகிய கோயில். அது முற்றுப் பேருவிடினும், "அது பார்வைக்கு அழகும் உள்ளத்திற்குப் பத்தியையும் தருகிறது" என்ருர் அதனைப் பார்வையிட்ட லெயேர்சியோ அடிகள்.

எனவே ஓங்கியடித்த புயலுக்குப்பின் அமைதியைக் கண்ட போதகரின் உள்ளத்தில் உவகை பொங்கிற்று. தன் முயற்சிகள் வீணுகவில்லை என்பதைக் கண்டார். தமிழும் தெலுங்கும், வடமொழியும் வீண் போகவில்லை. புலால் விடுத்து காவியுடுத்து வாழ்ந்தது கிறீஸ்துவிற்கு இந்திய உடை உடுத்திற்று. மக்கள் மனமறிந்து சென்றது அவர்தம் மனதைக் கவர உதவிற்று. கதவு திறக்க ஆரம் பித்துவிட்டது. கோட்டை தகர ஆரம்பித்துவிட்டது.

ஆனுல்....அவர் மனம் நிம்மதி அடையவில்லை. புய லற்ற அமைதி ஓர் அமைதியா? துன்பமற்ற வாழ்வு ஒரு வாழ்வா? வழக்கம்போல் கிறீஸ்துவின் வாழ்வு அவர் மனத்திரையில் சுழன்றது. நம் ஆண்டவர் மறுரூபமான காட்சி: "ஆண்டவரே இங்கேயே உமக்கும் மற்ற இரு வருக்கும் கூடாரங்கள் அடித்துவிடலாம்." ஆனுல் நம் ஆண்டவரோ மோயீசனுடனும் எலியாசுடனும் தம் பாடுகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்.

மூன்றும் பாகம்

# போர்

## 9

## மேற்பார்வையாளரது கண்டனம்

"கதவு திறந்துவிட்டது சரிதான்"; ஆனால் அதைத் திறந்தது சரியா? என்றொரு குரல் குமுறியது. அது இந்து மதத்தினரிடமிருந்தோ மற்றவர்களிடமிருந்தோ வரவில்லை. பின்னாலிருந்து அவரின் தோள்களை ஒரு வலிய கரமொன்று பற்றிக்குலுக்கியது. பின் திரும்பி நோக்கினர். அது திருச் சபையிலிருந்த சில நண்பர்களே. "அவர்களது பண்பாடு என்றெல்லாம் பிதற்றுகிறாயே, எது பண்பாடு, எது சமயம் என்று உனக்கென்ன தெரியும்? பூணூலை அணிகிறாய்; சந்தனம் பூசுகிறாய்; 'குளிக்கிறாய்'! இதெல்லாம் என்ன பைத்தியகாரத்தனம்! இந்த மாதிரி 'கதவு திறக்கிறது' என்று உள்ளே போகிறாயே, அவர்களது மதத்தில் மாட்டிக்கொண்டால் எப்படித் திரும்பி வருவாய்? இப் பொழுதே நீ உளறிக் கொட்டுவதைப் பார்த்தால் அவர்கள் மதத்தைச் சேர்ந்துவிட்டாய் போன்றல்லவோ தோன்றுகிறது" என்று மிரட்டியது. திறந்த கதவினுள் புக ஆவல் மிகக்கொண்ட தத்துவ போதகர் தம்மவரே தன்னைத் தடுப்பதைக் கண்டார். அறியாமையைப் பயன்படுத்தித் தன் பொய்களின் மூலம் ஏவையைக் கெடுத்த பசாசு, இப்பொழுது தம்மவரது அறியாமை யைப் பயன்படுத்தி அடிகளுக்குத் தொந்தரவளிக்கலா யிற்று. தத்துவபோதகர் போரிடத்தான் வேண்டியிருக் கும். 'போர்' ஏன்? அறியாமையை அகற்ற உண்மையை எடுத்துக்கூறினால் போதாதா? அவர் செய்தது போரா அல்லது வேறா என்பதை நீங்களே முடிவுசெய்யுங்கள்.

மேலே கூறிய அந்தக் கடினக்குரல் ஒருவருடையது மட்டுமன்று; அது பலருடையது. முதன்முதலில் கொன் சாலோ சுவாமிகளிடமிருந்து அந்தக் குரல் வந்தது என்பது நாம் யாவரும் அறிந்ததே. இப்பொழுது அது பிமென்டோ சுவாமிகளிடமிருந்து வந்தது.

1609-ஆம் ஆண்டில் சேசு சபைப் பெரிய சுவாமியா ரால் கோவை, மலபார் என்ற இரண்டு பகுதிகளையும் மேற்பார்வையிடும்படி அனுப்பப்பட்டார் நிக்கோலோ பிமென்டோ சுவாமிகள். மேற்பார்வையாளர் என்றால் அவர் சேசு சபையில் ஒரு பெரிய அதிகாரி; மாகாணப் பெரிய சுவாமிகளைவிட அதிக அதிகாரம் வாய்ந்தவர். பிமென்டோ சுவாமிகள் அறிவிலும் பண்பிலும் சிறந்தவர், ஆளும் ஆற்றலிலே சிறப்புடையவர். இவரது வாழ்வு ஒரு புனித வாழ்வு, புண்ணியங்கள் பலவும் ஒருங்கே அமைந்த வாழ்வு. எனவே முன்பு சில ஆண்டுகட்கு முன்னரே, அவர் இந்தியாவுக்கு மேற்பார்வையாளராக வந்துபோயிருந்தார். அப்பொழுது டில்லி முகலாய மன்னனையும், விஜய நகரப் பேரரசையும், சந்திரகிரி மன்னரையும் கண்டுபேசியவர். செஞ்சி நாயக்கரும் தஞ்சை நாயக்கரும் அவருக்கு வரவேற்பு அளித்துள்ளனர். மதுரை நாயக்கன் தனது தலையில் அணிந்திருந்த பட்டுத் தலைப்பாகையை இவரது தலைமேல் அணிவித்தான். எனவே மண்வேந்தர் முன்னும் விண்வேந்தர் முன்னும் பெயர்பெற்ற தீரர்.

இவரது ஆட்சி ஓரளவு செருக்குடனேயே இருந்தது. போர்த்துக்கீசிய இராஜப்பிரதிநிதி இவரது ஆளும் முறை பற்றி என்ன கூறினான் தெரியுமா? "இவர் ஆட்சி ஒரு துறவி ஆளுவதைப் போன்றன்று; ஓர் அரசன் ஆளுவதைப் போன்றே உள்ளது". இதுவே அவரிடமிருந்த ஒரே குறை.

அவர் மதுரையைப் பற்றிப் பலவாறு கேட்டிருந்தார். ஆயிரக்கணக்கான கல்தொலைவிலிருந்து இவர்கூட அதன் உண்மையை அறிய முயலவில்லை. மதுரையிலிருந்த சுவாமி

களின் கொள்கைகளும் முறைகளும் வடிகட்டின முட்டாள் தனம் என்றே மன உறுதிபூண்டார். ஐயோ பாவம்! ஏதாவதேனும் உண்மையின் அறிகுறி மதுரை அடிகளின் முறைகளில் உண்டா என அறியவேண்டும் என்று நினைக்கவில்லை. மதுரையின் புதிய முறைகளை அடியோடு ஒழிக்க எண்ணம்பூண்டார்.

எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்த்தாற்போல் வந்து சேர்ந்தன இரு கடிதங்கள். ஒன்று பிமென்டோ அடிகளின் எண்ணங்களை அறியாத தத்துவபோதகருடையது; மற்றொன்று கொன்சாலோ சுவாமிகளது. தன் முறைகளை விளக்கி வரைந்திருந்தார் தத்துவபோதகர். உண்மையை அறியாதவர் பாவம்! தான் செய்யக் கருதியிருக்கும் செயல்களையும் விரித்து எழுதினர். இதையெல்லாம் கண்ட பிமென்டோ சுவாமிகட்குச்சினம் எழுந்தது; சிந்தனை எழவில்லை அஞ்சலைக் கிழித்து நெருப்பில் போட்டார். அதற்குப் பதில் போடவில்லை.[1]

மற்றொரு கடிதம்: கொன்சாலோ சுவாமியிடமிருந்து. 1606-ஆம் ஆண்டில் தத்துவ போதகர் மதுரையில் கால் வைத்ததிலிருந்து அவருடைய முறைகளை எதிர்த்தே வந்தார் கொன்சாலோ. பன்முறை லெயேர்சியோ அடிகளிடம் முறையிட்டார். ஆனல் லெயேர்சியோ அடிகள் அவருடைய கடிதங்களைச் சற்றேனும் மதிக்கவில்லை. கொன்சாலோ சுவாமிகள் உள்ளம் புழுங்கினர். அவரால் தத்துவபோதகரின் முறைகளைச் சரியென ஏற்க இயலவில்லை. அவர் என்ன எழுதுகிருர் தெரியுமா? அவர் ஒரு பெரிய புத்தகம் எழுதுகிருர் என்பதெல்லாம் பொய். நான்கு பக்கங்களே எழுதுகிருர். எழுதியவற்றில் குறிப்பிடத்தக்கன :

"ராபர்ட் சுவாமி பரங்கி என்ற பெயரை விடுத்து, இந்துக் குருவைப்போல உடையணிந்து பிராமணர்களின் பூணூலையும் அணிகிருர்.

---

[1] நோபிலி சுவாமிகள் இதனைக் குறித்து அக்வவீவா அடிகட்கு 21—10—1610-இல் எழுதுகிருர்.

"என்னுடன் கூட உண்பதுமில்லை; எனக்குச் சமைத்த உணவையும் அருந்துவதில்லை. அந்தணர்களே சமையல் சமைக்க வேண்டும்; அந்தணர்களைத் தவிர அவர்முன் யாரும் உணவருந்தும் நேரத்தில் நிற்கக் கூடாது.

"அவருக்கெனத் தனியாக ஒரு கோயிலும் வீடும் வைத்துள்ளார். அவற்றில் நுழைய எனக்கோ போர்த் துக்கீசியருக்கோ பறையருக்கோ மற்றக் கிறீஸ்துவர் கட்கோ, என்னுடைய வேலையாட்கட்கோ அனுமதி கிடையாது.

"கிறீஸ்துவ அந்தணர்கள் பூணூலை இழந்தாலும், மற்ருெரு பூணூலை ஆசீர்வதித்து அதில் ஒரு சுருபம் அல்லது சிலுவையைத் தொங்கவிட்டு அவர்களுக்குத் தருகிருர். அவைகளில் சில இலத்தீன் எழுத்துக்கள் காணப் படுகின்றன. ஒருவேளை 'சேசு' என்ற வார்த்தையாக இருக்கலாம்.

"குளிக்காமல் பூசை செய்வதில்லை. ஞயிற்றுக் கிழமை பூசைக்குமுன் சந்தனம் மந்திரிக்கிருர்.

"அவரை 'ஐயர்' என்று அழைக்கிருர்கள். அவருடைய சீடர்கள், அவருக்கு உதவிசெய்ய வரும் சுவாமி மார்கள்[1] உட்பட எல்லோரும் ஐயரின் சீடர்கள் என அழைக்கப்படுகின்றனர்.

"அவருடைய பெரிய சுவாமிமார்கள் ஓர் அஞ்ஞானியைப்போல நடக்கவேண்டாம் எனக் கூறியிருப்பினும், அவர் திருந்துவதாகத் தெரியவில்லை.

"திருச்சபையின் கிறீஸ்துவர்களால் பயன்படுத்தப் படும் பூசைச் செபங்களில் வார்த்தைகளை மாற்றிவிட்டார்.

---

[1] லெயிடாவோ அடிகளைத் தவிர்த்து, அந்தோனி டையஸ், பிரான்ஸிச் சுவாரெஸ் ஆகியோர் அனுப்பப்பட்டனர் - அப்போல், பக். 70.

"தன் கிறீஸ்துவர்களை என்னுடைய பூசையைப் பார்ப்பதிலிருந்து தடுத்து விட்டார். அவர் ஊரிலில்லாத பொழுது அவருடைய கிறீஸ்துவர்கள் என்னுடைய பூசைக்கோ என்னுடைய பிரசங்கத்திற்கோ வருவதில்லை.

"தான் போர்த்துக்கீசியரல்லரென்றும், ஓர் அரச குடும்பத்தினரென்றும் உலகம் அறியுமாறே இதையெல்லாம் செய்கிறார். அவரது கொள்கையின்படி சுவிசேஷத்தின் போதகர் யாவரும் அரச குடும்பத்தினராகவும் பரங்கிகளுடன் தொடர்பு அற்றவராகவும் இருத்தல் வேண்டும். தன் சமயம் என் சமயத்திலிருந்து வேறுபட்டதென்று மக்கள் மனத்தில் பதிக்க முயல்கிறார்....."

இதைப்போன்று பலவற்றை நான்கு பக்கங்களிலும் நிரப்பியிருந்தார். இவற்றில் கூறப்பட்டன முற்றிலும் பொய் என்பது உண்மை. ஆனால் கொன்சாலோ சுவாமிகள் எழுதியது தவறு சரியா? இதைப்பற்றி நாம் இங்கே விவாதிக்கவேண்டியதில்லை. ஆனால் இதனை நன்கு அறிய சில உண்மைகள் உதவும்.

பிராமணர் என்ற சொல் போர்த்துக்கீசியருக்கு மலபாரைச் சார்ந்த நம்பூதிரி பிராமணரையே மனத்தின் முன் கொணர்ந்தது. இத்தகையவர் இந்து மதத்தின் தனிப்பட்ட குருக்களாகத் தம்மை அழைத்துக்கொண்டனர். உண்மையில் தமிழ்நாட்டில் வேதியர் என்பார் பொதுவாக வேதம் ஓதுபவராயினும் எல்லோரும் கோயிற் குருக்களல்லர், சிலரே குருக்கள். இந்த நம்பூதிரி அந்தணர்கள் தம்மைத் தனித்துக் கொண்டனர். மற்றவருக்குக் கற்றுக்கொடுக்கக்கூட முன்வரவில்லை. தமிழ்நாட்டு அந்தணர் பிறப்பால் மேம்பட்டவர். ஆனால் தாங்கள் அனைவரும் தனிப்பட்ட முறையில் இந்துமதக் குருக்கள் என்பதால் தம்மை உயர்ந்தவராகக் கருதினர். எனவே கொன்சாலோ சுவாமிகள் "அந்தணர்" என்பதையும் "இந்து மதக்குரு" என்பதையும் ஒன்றாகவே கருதுகிறார். எனவே "அஞ்ஞானி" என்பதையும் இணைக்கிறார். லெயோர்

சியோ சுவாமிகள் முன்பு ஒரு முறை தத்துவ போதகர் பூணூல் அணிவதைத் தடை செய்து பின்னர் அனுமதித் தார். மஞ்சட் காமாலைக் கண்ணுடன் நோக்கிய கொன் சாலோ அதில் "அவருடைய பெரிய சுவாமிமார்கள் ஒரு அஞ்ஞானியைப்போல் நடக்கவேண்டாம்" எனக் கூறினர் கள் என்பதைக் கண்டிருக்கலாம்.

கடிதங்கண்ட பிமென்டோ சுவாமிகளின் புருவங்கள் நெளிந்தன. "பரங்கி என்ற பெயரை விடுத்து"....இதன் பொருளென்ன? "பரங்கி" போர்த்துக்கீசியர், கிறீஸ்துவர், தான் போர்த்துக்கீசியரல்லரென்றும் இத்தாலியரென் றும் பெருமையடிப்பதா இது? "இந்துக் குருவைப் போல உடையணிந்த".... கிறீஸ்துவ மதத்தையே புறக்கணித்து விட்டாரா?" இத்தகைய சிந்தனைகள் எழுந்தன அக்கடி தத்தை வாசிக்கும்பொழுது. அதைப் படிக்கப் படிக்க அவரது நாட்டுப் பெருமையும் கொழுந்துவிடலாயிற்று. தான் ஒரு போர்த்துக்கீசியர். ஆம், அன்று இந்தியாவிலும் பசிபிக் தீவுகளிலும் போர்த்துக்கீசியப் பேரரசு பரவி இருந்தது. ஆங்கிலேயரின் கிழக்கிந்தியக் கம்பனி வங்கா ளத்தில் அப்பொழுதுதான் ஒரு பத்து வருடக் குழந்தை யாயிருந்தது. டச்சுக்காரரும் அவ்வளவு பலம் பெறவில்லை. எனவே இந்தியச் சிற்றரசர் போர்த்துக்கீசியரின் படை உதவி பெறுவதற்கு சிறிது ஆவலுற்றே இருந்தனர். படைப்பலம் மிக்க போர்த்துக்கீசிய நாட்டவரை அவ மதிப்பாகவா நடத்துகிறார் இந்த இத்தாலிய பாத்ரே? என்றும் சீற்றம் கொண்டார் பிமென்டா சுவாமிகள். மற்றுமொன்று, நம் ராபர்ட் அடிகள் இத்தாலிய அரசகுடி யில் பிறந்தவர். அவர் தன்னை இராஜ சந்நியாசி என்று அழைத்தது அந்த உயர் பிறப்பை உலகிற்குணர்த்தி டம்பம் அடிப்பதற்காகவே என்ற எண்ணம் பிமென்டோ சுவாமிகளின் மனதில் எழுந்தது. இன்னுமொன்று, பூணூல் அணிவது, சந்தனம் பூசுவது, பூசைக்குமுன் குளிப்பது இவையெல்லாம் இந்து மதத்தின் கொள்கைகள் என்று அவர் எண்ணினர். இவ்வாறு அவருடைய கண்களில்

குற்றங்களே உருவான ஒரு வேதத் துரோகியாய்க் காணப்பட்டார் தத்துவ போதகர்.

மேற்பார்வையாளர் கோவைக் கல்லூரியிலிருந்த இரு வேத சாஸ்திர ஆசிரியர்களை அழைத்தார். "இதோ பாருங்கள், இந்தக் கடிதம். மதுரையிலிருந்து கொன் சாலோ சுவாமிகள் எழுதியுள்ளார். அந்த ராபர்ட் சுவாமி களின் வேலையைப் பற்றியது. இதிலுள்ளவைகள் தண்டனைக் குரியவையா என்றும், என்ன தண்டனை என்றும் பார்த்துச் சொல்லுங்கள். இரண்டாவது, அவற்றில் ஏதாவதொன்றையேனும் தடுக்கப் பெரிய சுவாமிமார்களுக்குக் கடமையா? தடுக்காவிட்டால் சாவான பாவமா? அற்பப் பாவமா? என்றும் கூறுங்கள்" என்ருர்.

கடிதத்திலுள்ள குறைகளைப் படித்த யார்தான் ராபர்ட் அடிகளைச் சும்மா விடுவார்கள்? அதிலும் வேத சாஸ்திரிகளா? அதைப் படித்து ஆராய்ந்தனர். இருவருக்கும் ஒரு ஐயம். கடிதத்தில் உள்ளவை உண்மையாயிருப்பின் ஒரு தீர்ப்பு அளிக்கக்கூடும். இல்லாவிட்டால்........ இல்லாவிட்டால்.... அது அவர்கள் வேலையில்லை. முடிவாக, தத்துவபோதகரின் வேதபோதக முறை மூடக்கொள்கைகளால் நிரம்பியது; துர்மாதிரிகை விளைவிப்பது; அனுமதிக்கத் தகாதது; இவ்வளவு முக்கியமான விஷயத்தில் தவறிப் போயிருக்கும் ஒருவரைத் திருத்துவது பிமென்டா சுவாமியின் மேற்சுமந்த பெருங்கடமை; கடமை தவறின் சாவான பாவங்கட்டிக்கொள்வார் – என்பதே அவர்கள் கருத்து. ஆனல் அவர்கள் இதையெல்லாம் எழுதுவதற்குமுன், ஒரு வரி எழுதினர். அது பிமென்டோ சுவாமிகளைச் சிந்தனையில் ஆழ்த்தியது.

"கடிதத்தில் கண்ட அனைத்தும் உண்மையாகில்".... எனத் தொடங்கியது அவரது முகவுரை. இதைப்பற்றி அவர் முன்பு சிந்திக்கவேயில்லை. இப்போதுதான் என்ன? அவரது புத்தியில் இவை பொய்யாயிருக்கக்கூடுமெனப் படவேயில்லை. எனினும்.... உலகம் இதனை உண்மையென

ஏற்குமா? இந்த வேத சாஸ்திரிகளே அதன்மேல் ஐயத்தை எழுப்பிவிட்டுள்ளனர், அத்துடன் ராபர்ட் சுவாமியின் முறைகளை முதலிலிருந்தே வெறுத்துவந்த கொன்சாலோ சுவாமி ஒருவரின் சான்றுமட்டும் போதுமா? பிமென்டோ சுவாமிகள் மீண்டும் சிந்தித்தார். கொச்சி பெரிய சுவாமியாரும் அவருடைய துணைவர்களுமே இதனைத் தீர்க்கட்டும் என ஒரு கடிதம் எழுதினார்.

கடிதம் மட்டும் அனுப்பவில்லை. கடிதத்துடன் தனக்கு உதவிசெய்த கார்டோஸோ சுவாமிகளையும் அனுப்பினார். கார்டோஸோ சுவாமிகளும் மதுரையை வெறுத்தவரே. அதன் முறைகளை அவர் அடியோடு வெறுத்தொதுக்கினார். அவர் வந்ததும் தன் கொள்கைகட்குச் சான்று தேடலானார். ஆனால் அவர் எளிதில் வெற்றி பெறவில்லை. எனினும் இரு சான்றுகள் கைவரப்பெற்றார்.

நாம் முன்னர் லெயிடாவோ சுவாமிகளைப் பற்றி கூறினோம். தமிழ் கற்க இயலாமையினால் அவர் கொச்சி திரும்பிவிட்டார். அவரைக் கண்ட கார்டோஸோ சுவாமிகள் பற்பல கேள்விகள் கேட்டார். உண்மையில் லெயிடாவோ சுவாமிகள் மதுரைக்கு எதிராக ஒன்றும் சொல்லவில்லை, எனினும் அவருடைய வார்த்தைகட்குக் கார்டோஸோ சுவாமிகள் புதிய பொருள் அளிக்க முடிந்தது.

மற்றொன்று மலபார் மாகாணத்தின் வரவு செலவுப் புத்தகம். அதில் கார்டோஸோ சுவாமிகள் ஒரு பெரிய தொகை மதுரை தத்துவபோதகரால் செலவிடப் பட்டிருப்பதைப் பார்த்தார். இதனைக் கண்ட கார்டோஸோ சுவாமிகளின் கண்கள் மகிழ்ச்சியால் விரிந்தன.

பிமென்டோ சுவாமிகள் தன் கடிதத்துடன் கார்டோஸோ சுவாமியாரை அனுப்பினாரே தவிர கொன்சாலோ சுவாமிகளின் கடிதத்தை அனுப்பவில்லை. எனவே லெயேர்சியோ அடிகளுக்கு ஒருவிதக் கவலையே. மேற்பார்வையாளர் ஏன் மதுரைக் குருக்களின்மேல் இவ்வாறு

கோபமாயிருக்கிறார் என்று அவருக்குப் புரியவில்லை. இரண்டாவதாகக் கார்டோஸோ சுவாமிகள் ஏன் கங்கணங்கட்டி மதுரையைத் தொலைக்கத் தேடுகிறார் என்பதும் அவருக்குப் புரியவில்லை. எனினும் சங்கம் கூடித்தான் ஆகும்.

கடிதத்தில் கண்டபடி சங்கத்தில் எதுபற்றிப் பேச வேண்டும்? 1. மதுரையில் தொடங்கியிருக்கும் இப்புதிய முறைகளை அடியோடு நிறுத்த வேண்டுமா? அல்லது ஏதாவது திருத்தப்படவேண்டுமா? 2. அவ்வாறு திருத்த வேண்டுமாயின் என்னவெல்லாம் திருத்தப்படவேண்டும்? அச்சங்கத்தில் கலந்துகொள்வோர் யார்? பெரிய சுவாமியார் லெயேர்சியோ அடிகள், பிமென்டோ சுவாமிகளின் துணைவர் கார்டோஸோ சுவாமிகள், பெரிய சுவாமியாரின் ஆலோசகர்கள், கிராங்கனூர் மேற்றிராணியார் அதி. வந். ராஸ் அடிகள், இன்னும் சுற்றியிருந்த புகழ்பெற்ற குருவானவர்கள்.

லெயேர்சியோ சுவாமிகளின் மனநிலையோ ஒருவாறு புழுங்கி இருந்தார். பிமென்டோ சுவாமிகள் மதுரையை விரும்பவில்லை என்பதை அறிவார். எனினும் அதனை நிறுத்துமளவு போவார் என அவர் கனவிலும் கருதவில்லை. அதனை நிறுத்தும்வரை அவர் சும்மாயிருக்கப்போவதில்லை.

கூட்டம் தொடங்கியது. பிமென்டோ சுவாமிகளின் கடிதத்தை லெயேர்சியோ சுவாமிகள் வாசித்தார். வாசித்த பின்னர் மற்றொரு கடிதத்தை வாசித்தார். அதுதான் உரோமைப் பெரிய சுவாமியார் மதுரை முறைகளை அனுமதித்து முன்பே எழுதிய கடிதம். பின் ஏன் ராபர்ட் அம்முறைகளைப் பின்பற்றினார் என்பதுபற்றி சில சொல்லி அமர்ந்தார்.

அவரது பேச்சும், உரோமைப் பெரிய சுவாமியார் அக்வவீவா அடிகளின் கடிதமும் கூட்டத்தினரது மனநிலையை மாற்றியதைக் கண்ட கார்டோஸோ சுவாமிகள் எழுந்து மதுரையில் வீணாகும் பெருந்தொகைப்பற்றிப் பேசினார். அவரை நடுவில் நிறுத்தினார் லெயேர்சியோ அடிகள்.

அத்தொகை ஆண்டாண்டு செலவிடப்படுவதன்று என்றும், அது கோயில் கட்டுவதற்காகவும், அவர்களுக்கு உதவுவதற்காக ஒரு நன்செய் நிலம் வாங்குவதற்காகவும் பயன்படுத்தப்பட்டதென்றும் கூறி அமர்ந்தார். கார்டோஸோ சுவாமிகள் ராபர்ட் சுவாமிகள் முறைகளை எதிர்த்துச் சில சொன்னர். ஆனல் அவை விழலுக்கிரைத்த நீரே ஆயின.

பின் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கருத்தைக் கூறினர். கார்டோஸோ சுவாமிகளையும் இன்னும் இருவரையும் தவிர, இதர அனைவரும் மதுரையை ஒரு மாற்றமுமின்றி சும்மா விட்டுவிடலாம் எனக் கருதினர். ஆனல் ஒன்றே ஒன்று, அந்தப் பூணூலை மட்டும் அணியாது விட்டுவிடலாம் என்று கூறினர்.

இந்தப் பூணூலைப் பற்றிச் சிறிது அறிவது தத்துவ போதகரின் சரிதையை முழுதும் உணர்வதற்கு இன்றியமையாதது. இதுமுதல் இன்னும் நூறு பக்கங்களாவது இந்தப் பூணூலைப் பற்றி அடிக்கடி பேசவேண்டியிருக்கும். எனவே அதைப்பற்றி சில ஈண்டு கூறுவோம்.

பூணூலை நாமனைவரும் பார்த்திருக்கிறோம். அது பற்றிச் சில அறிவோம். பூணூலை ஏறக்குறைய எல்லா அந்தணரும் அணிந்திருப்பதைப் பார்த்துள்ளோம். இதைப் பற்றி 1. இந்துப் புத்தகங்கள் என்ன கூறின? 2. தத்துவ போதகரின் காலத்திய இந்தியத் திருச்சபைக் குருக்கள் என்ன கூறினர்? 3. அடிகளது எண்ணம் என்ன?

1. ஓர் அந்தணச் சிறுவனை அவனுடைய ஆசிரியரிடம் கொண்டு சேர்க்கும்பொழுது பூணூல் அவனுக்குக் கொடுக்கப்பட்டது. ஒரு தீ அமைக்கப்பட்டு, அதன்முன் இந்தச் சடங்கு நடைபெற்றது. சிறப்பான முறையில் அமைக்கப் பட்ட பூணூலை பையனின் தோளில் கட்டும்பொழுது, சடங்கு நிறைவேற்றிய அந்தணர் "இந்தப் பூணூலால் உனக்கு புகழுண்டாகக்கடவதாக" எனக் கூறுவார். பின்னர் ஒரு புதுத்துணியும் புல்லினல் ஆன ஒரு இடைக்

கயிறும் கட்டினர். அதற்கு வேண்டிய மந்திரங்களையும் கூறினர். பின்னர் ஒரு சிறிய மான் தோலில் ஒரு சிறு பகுதியை அந்தப் பூணூலில் கட்டிக்கொண்டே "இதோ மானின் தோல் மித்ரா இதனைப் பார்ப்பதால் இது ஒளி விடுகிறது. இது கெட்டவர்கட்குத் தக்கதன்று. இதை உனக்கு அளிக்கிறேன் .... இதனால் நீ புனிதமும் புகழும் பூண்டோனாய் ஆவாய்" என்பர். பின்னர் மாணவன் ஆசிரியரின் அருகே அமர்ந்து தன் "ஆசார்யா"வினிடத்தில் வேதங்களை நன்கு பயின்று, கல்விக்குப் பிறகு நல்ல முறையில் கல்யாணம் பண்ணி வாழுமாறு விண்ணப்பிக்கிறான். பதிலாக அந்தணர் பையனின் கையைப் பற்றித் தூக்கி "அக்னி, சோமன், சனிதா, சரஸ்வதி, பூஷன், அரியாமன், ஆமசுகு, பகதேவதை, மித்ரா உன் கையைப் பற்றிவிட்டனர். நீ அவர்கட்குச் சொந்தம், நீ அவர்களுடைய நண்பர்" என்பர். பின்னர் மூன்று நாட்கள் இவ்வகைச் சடங்குகள் நடைபெற்றன.

இதைமட்டும் வைத்து நோக்கின் உண்மையிலேயே மூடக்கொள்கையாகும்.

மனுநீதி என்ற நூலில் வேறுபட்ட பூணூல்கள் வெவ்வேறுபட்ட சாதியினருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. பருத்தி நூலால் மூன்று வடங்களாலானது அந்தணருக்கு; அரக்கினாலான ஒரே நூலாலானது இராஜாக்களுக்கு; ஒருவகைச் சணலாலானது வைசியர்கட்கு. இதன்படி பூணூல் சமயத்தின் அடையாளமன்று.

அதே புத்தகத்தில் மற்றொரு இடத்தில் ஒருவகைப் புல்லாலான இடைக்கயிறு, கம்பு, பூணூல், கமண்டலம் "இவையாவும் அந்தணன் ஜோதியிலும் புகழிலும் வளர உதவுகின்றன" என எழுதப்பெற்றுள்ளது.

கம்பும் கமண்டலமும் உண்மையிலேயே "சமூகக் காரியங்கட்காகவும் உயர்ந்த குலத்தின் அடையாளங்களாகவும்" கொள்ளப்பட்டன. பூணூலும், இவற்றுடனே சேர்த்துக் கூறப்பட்டதால் அதுவும் ஒரு குலத்தின் அடையாளமே.

ஸ்மிருதி என்ற நூல், "ஓர் அந்தணன் அவன் தாயின் உதரத்தில் உற்பவித்ததிலிருந்து எட்டாவது ஆண்டிலும் ஒரு க்ஷத்திரியன் பதினோராம் ஆண்டிலும், கம்மோதி பன்னிரண்டாம் ஆண்டிலும் பூணூல் வாங்கவேண்டும்" எனக் கூறுகிறது.

உண்மை, இத்துடன் சடங்குகள் இருக்கின்றன. ஆனால் அவர்களது வாழ்வில் எந்தச் செயல்தான் (ஓரளவு முக்கியமான செயல்) சடங்குகளின்றி இருக்கிறது? க்ஷத்திரியர் பெயரும் கம்மோதியர் பெயரும் ஏன் உச்சரிக்கப் பட்டுள்ளன?

முன்பு, பூணூல் வாங்கும் உபநயனச் சடங்கில் "இந்தப் பூணூலால் உனக்குப் புகழுண்டாகக்கடவதாக எனக் கூறுவதைக் கண்டோம். வராஷா ஸ்மிருதியில் "ஓர் அழகிய ஓவியம் சிறிது சிறிதாகப் பொருளின் பற்பல பாகங்கட்கும் வண்ணம் தீட்டுவதால் முற்றுப்பெறுவது போல, ஓர் அந்தணனும் தன் சாதிக்குரிய பலவகைச் சொல்களாலும், குறிகளாலும் அழகு செய்யப்பட்டு விழுப்பம் அடைகிறான்."

இவைகளை நம் அடிகள் அவர்களுடைய புத்தகங் களில் கண்டதாகக் குறிக்கிறார்.

2. 1567, 1575, 1585 என்ற ஆண்டுகளில் கோவையில் கூடிய திருச்சபையின் சங்கங்கள் இதைப் பற்றி வாதித்துள்ளன. முதற் சங்கத்தின் 47-ஆம் கட்டளைப்படி பூணூல் போன்றவை இந்துக்களின் குருத் துவத்தை உணர்த்துவதால் அவைகளைக் கிறீஸ்துவர் கட்கு அனுமதிப்பவர் யாரும் அந்தச் செயலாலேயே திருச் சபைக்கு வெளியே தள்ளப்படுவார்கள். உண்மை, இவர் களுக்குப் பூணூல்பற்றித் தெரிந்திருந்தது மிகச் சொற் பமே.

தத்துவ போதகரின் விளக்கத்தைப் பின்பற்றி அவருடைய அதி வந் மேற்றிராணியார் ராஸ், கோவை அதிமேற்றிராணியாரையும் அவருக்கு உதவிசெய்த திருச்

சபையின் விசாரகரையும் கேட்டு பூணூலை அனுமதித்திருந் தார் 1608-இல்.

1610-இல் கோவை அதிமேற்றிராணியாரான தொம் ப்ரே கிறிஸ்டாவோ தேசா ஏ லின்பாவோ இதனையும் தத்துவ போதகரின் எல்லா முறைகளையுமே ஒரேயடியாய் வெறுத்தார்.

முதன்முதலில் (1607-இல்) லெயேர்சியோ சுவாமி களின் ஆலோசகர்கள் காவி உடைக்கே அனுமதியளிக்க மறுத்தனர். இப்பொழுது (1610-இல்) பூணூலை ஏற்க மறுத்தனர்.

3. தத்துவ போதகர் மேற்கூறிய நூல்களின் உதவி யைக்கொண்டு பூணூல் தன்னிலேயே ஒரு சாதியின் குறி என்றும், உபநயன சடங்கிற்குட்படுவதால் அது மதத் தின் குறியாகவும் மாறுகிறது எனக் கருதினர்.

மதுரை அந்தணக் கிறீஸ்துவர்கள் பூணூலை இழப்ப ராயின் அவர்களைச் சாதியைவிட்டு விலக்கிப் பறைய ரிலும் கீழாக மக்கள் நடத்துவர். இதைத் தவிர்க்கவே தத்துவபோதகர் தானே அந்தணராக மாறினர். எனவே பூணூலை அவர்கள் வைத்திருக்க வழியில்லையா எனத் தேடினர்.

பூணூல் **தன்னிலேயே** ஒரு சாதிக் குறியாகவும் **சடங் கின் மூலம்** சமயக் குறியாகவும் மாறுகிறது. இத்தகை யதைத் திருச்சபை அனுமதித்தே வந்துள்ளது என்பதை ஆசோர், பான்னெல், வலென்சியோ நகர்களின் வேத சாஸ்திரிகளைக்கொண்டு நிரூபிக்கிறார்.

**பூணூலுக்காக இந்தியாவிற்கே கிறீஸ்துவின் இத யத்தைத் தாளிடுவதைவிட தன்னிலேயே தவறற்ற அதனை அனுமதிக்கலாகாதா ?**

தன்னைப் பொருத்தமட்டில் முதலில் அதனை அணிந் தார். பின்னர் "அந்தணச் சந்நியாசிகள் குடுமியையும் பூணூலையும் விட்டுவிடுகின்றனர். ஆனால் வைஷ்ணவர்க

ளானல் நாமத்தையும், சைவர்களானல் விபூதியையும் அணிகின்றனர்" என அறிந்தார். தான் சந்நியாசி என்பதால் பூணூலை விடுத்தார். ஆனல் பூணூல் மறையின் குறியானல் அந்தணச் சந்நியாசிகள் அதை விடுவார்களா என்றும் தன்னையே கேட்டுக்கொண்டார்.

இப்பொழுது தத்துவபோதகர் பூணூலை அணிந்து வரவில்லை. எனவே கொச்சிச் சங்கம் புதிதாக எதையும் ஆணையிடவில்லை. கொச்சியில் நடந்தனவற்றையெல்லாம் கேள்விப்பட்ட அடிகளின் உள்ளத்தில் நன்றி ததும்பியது. இனிமேல் பிமென்டோ சுவாமிகள் தொந்தரவு செய்யமாட்டார் என எண்ணி லெயேர்சியோ அடிகள் தத்துவ போதகருக்கு ஒரு துணைவரைக் காண விழைந்தார்.

ஆனல் பிமென்டோ சுவாமிகள் கொச்சிச் சங்கத்தின் முடிவை அப்படியே ஏற்கத் தயாராயில்லை. கொன்சாலோ சுவாமியின் கடிதம் அத்தனையும் உண்மை என்று கொண்ட இவருக்கு இந்த முடிவு புதிராக இருந்தது. எது உண்மை எனப் புரியவில்லைபோலும். தத்துவ போதகரின் கிறீஸ்துவர்களைக் கிண்டி உண்மையைப் பெறுவது என முடிவு செய்தார். எனவே லெயேர்சியோ அடிகட்கு ஒரு கடிதம் வரைந்தார்.

இதற்கிடையில் லெயேர்சியோ சுவாமிகள் புச்சேரியோ என்பவரை ராபர்ட் அடிகட்குத் துணைவராகக் கூட்டிக்கொண்டு மதுரைக்கு வந்தார். இந்த ஆந்திரே புச்சேரியோ சுவாமிகள் தென் திருவாங்கூரில் பதினெட்டு ஆண்டுகளாக வேலை செய்தவர். தமிழ் மலையாள மொழிகளில் வல்லவர். அவரது வேதபோதகம் சிறப்புடையதாகவே இருந்தது. எனவே அவரை அடிகளுக்குத் துணைவராகத் தெரிந்ததில் தவறில்லை.

எனினும் புச்சேரியோ சுவாமிகளை மதுரையிலிருந்த பரவர் அனைவரும் அறிந்திருந்தனர். அவருடைய தமிழும் தூயதன்று. அவர் தத்துவபோதகருடன் தங்கியிருப்பதை அறிந்தால்....எல்லா மீன் வியாபாரிகளும் ஆசிரமத்தைச்

சூழ்ந்துவிடுவர். அதுமட்டுமன்று; கருவாட்டு நாற்றம்; இதையெல்லாம் அறிந்த தத்துவ போதகர் பெரிய சுவாமியாருடன் இதைப்பற்றிப் பேசினர். பெரிய சுவாமியார் புச்சேரியோ சுவாமியைக் கூப்பிட்டுப் பேசினர். அவரும் ஏற்றுக்கொண்டார். எனவே அவர் கொன்சாலோ சுவாமிகளுடன் சேர்ந்து வேலை செய்யலானர்.

கொச்சியில் சேசு சபைச் சுவாமிமார்க்கு வேத சாஸ்திரம் கற்றுக்கொடுத்தனர் அந்தோனியோ விக்கோ சுவாமிகள். அவர் ராபர்ட் சுவாமிகளுடன் ஒன்ருகப் பயின்றவர்; அதே நாட்டுக்காரர்; பழைய நண்பர். மதுரை முறைகளைப் பற்றி நல்லெண்ணங்கொண்டு தன் நண்பரை என்றும் ஊக்குவித்தவர். அவரோடு சேர்ந்து உழைக்க ஆவல்தான். எனினும் லெயேர்சியோ சுவாமிகள் முதலில் அவரைவிடத் தயாராயில்லை. கல்லூரிகட்குத் தக்க ஆசிரியர்கள் காண்பது அரிது. புச்சேரியோ சுவாமிகளும் ஒத்துவரவில்லையாதலால், ராபர்ட் சுவாமிகளின் விண்ணப்பத்தின்படி அவரை அனுப்ப ஒத்துக்கொண்டார். எனவே 1610-ஆம் ஆண்டில் விக்கோ சுவாமிகள் மதுரை வந்து சேர்ந்தார்.

இந்தச் சமயத்திலேயே பிமென்டோ சுவாமிகளின் கடிதம் வந்து சேர்ந்தது. அதில் லெயேர்சியோ சுவாமிகளைத் தத்துவ போதகரின் கிறீஸ்துவர்கட்கிடையே ஒரு விசாரணை நடத்துமாறு கட்டளையிட்டிருந்தார். மேற்பார்வையாளர், இவ்வாறு நடந்துகொள்வதின் காரணம் புரியாது விழித்தார் லெயேர்சியோ அடிகள்; எனவே கொன்சாலோ சுவாமிகளையும் புச்சேரியோ சுவாமிகளையும் விசாரணையை நடத்துமாறு கட்டளையிட்டார். சோதனையில் 15 கேள்விகள் இருந்தன. கிறீஸ்துவர்களைக் கேள்வி கேட்க, அவர்கள் சுவிசேஷத்தின்மேல் ஆணையிட்டுப் பதிலளிக்கவேண்டும். ஓர் ஊழியர் அவர்கள் பதிலைத் தமிழிலும், அவர்கள் இருவரும் போர்த்துக்கீசிய மொழியிலும் எழுதவேண்டும் எனக் கட்டளையிட்டார். மூன்று அந்தணர்களும், மூன்று க்ஷத்திரியர்களும், இரண்டு

வேளாளர்களும், ஓர் இடங்கொள்ளியும், ஒரு ஞானியும் (அவரது சாதி தெரியவில்லை) சோதிக்கப்பட்டனர். அவர்களிற் சிலர் வடமொழியறிந்த அறிஞர்; மற்றவர் பாமர மக்கள். அவர்களுடைய விடைகள் பொதுவாகப் பின் வருவனவே:

1. அ. ஒரு குறிப்பிட்ட குருவின் சீடர்கள் எனத் தங்களையே அழைத்துக்கொள்ளும் எங்கள் நாட்டு வழக்கைப்பின்பற்றி, எங்களை ஐயரின் சீடர்கள் என அழைக்கிறோம். ஆனால் இவ்வாறு செய்யும் வண்ணம் ஒருவரும் எங்களைக் கேட்கவில்லை. ஐயர் எங்களைக் கிறீஸ்துவின் சீடர்கள் என அழைத்துக்கொள்ளுமாறு கேட்டார். அதையும் செய்கிறோம். ஆனால் "பரங்கி" என்று எங்களைத்தானே அழைத்துக்கொள்வதில்லை.

ஆ. நாங்கள் சேசுக்கிறீஸ்துவின் திருநாமத்தில் விசுவசிக்கிறோம். எனவே நாங்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும்பொழுது "சேசுக்கிறீஸ்துநாதருக்குத் தோத்திரம் உண்டாகக்கடவதாக" என்று கூறி வாழ்த்துகிறோம். இதே சொற்களைப் பயன்படுத்திக் காலையில் எழுந்தவுடனும், இரவில் தூங்கப் போகுமுன்னும், ஒவ்வொரு வேலைக்கும் முன்னும் வேண்டுகிறோம்.

2. மதுரை மக்கள் தத்துவ போதகரை அறிவிலும் பழுதற்ற வாழ்விலும் சிறந்தவராக மதித்துப் போற்றுகின்றனர்.

3. அவர்களில் ஏறக்குறைய எல்லோரும் அவருடைய ஞானவேதத்தைப் போற்றுகின்றனர். ஆனால் சிலர் அவர்களுடைய பொய்த் தேவதைகளை வணங்காதது கண்டு, அவர்களது மறுபிறப்புக் கொள்கையையும் ஏற்காதது கண்டு அவரை நாத்திகரென அழைக்கின்றனர்.

4. அவருக்கும் கொன்சாலோ சுவாமிகட்கும் இடையே நிலவும் வேறுபாடு சமயம் பற்றியதன்று; சாதி பற்றியதே.

5. ஐயர் எங்களைக் கொன்சாலோ சுவாமிகளின் பூசை பிரசங்கங்கட்குப் போகவேண்டாமென்று தடுக்கவு மில்லை, திருச்சபையைவிட்டு வெளியே தள்ளுவதாகப் பய முறுத்தவுமில்லை.

6. அவர் கொன்சாலோ சுவாமிகளின் வீட்டிற்குப் பாவசங்கீர்த்தனம் செய்யப்போகிறுர் என்பதை அறி வோம்; ஐயர் இங்கில்லையெனில் நாங்களும் கூட அவரிடம் போவோம்.

7. ஐயர் ஞான உபதேசத்தில் சில வார்த்தைகளைத் திருப்பிச் சேர்த்துள்ள போதிலும், எங்கள் சமயம் கொன் சாலோ சுவாமியின் சமயத்தினின்று வேறுபட்டதன்று என்பதை உணருகிறேம். "பிதா சுதன் இஸ்பிரீத்து சாந்து" என்று திருத்தியதால், சிறந்த முறையில் அதே கருத்து வெளிப்படுகிறது என்பதையும் அறிவோம்.

8. "குளிக்க வேண்டும், சந்தனம் தடவவேண்டும்" என்றெல்லாம் ஐயர் எங்களிடம் வந்து சொல்லத் தேவை யில்லை; நாங்கள் குளித்தால் ஓரளவு சுத்தமாக இருப்ப தற்கேயன்றி வேறன்று.

9. சந்தனம் பூசுவது ஒரு மத அனுசாரமன்று; வெறும் ஆபரணமே. ஐயர் அதனை அணியும் முறையி லிருந்து அவர் தத்துவபோதகர் என்பது வெளிப்படை. மற்ற யாரும் அதே முறையில் அணிவது கூடாது.

10. வேதபோதகர் அரசகுலத்தவராயிருக்க வேண்டு மென்று ஒரு நியதி இல்லை. எனினும் கீழ்க்குலத்தாரு டன் பழகுவது அவ்வளவு நல்லதன்று; பழகினல் பாவம் என்று ஒன்றில்லை; சமய வெறுபாடும் இல்லை; நாட்டில் வழங்கிவரும் சாதிக்கட்டுப்பாடு அத்தகையது.

11. ஐயரோ, வேறொருவரோ தனது மறை பரங்கிய ரது மறையிலிருந்து வேறுபட்டது என்று கூறவேயில்லை.

12. பரவர்களால் விளைந்த கலகம் ஐயர் எங்களைக் கிறீஸ்துவர்களாக மாற்றிவிட்டார் என்பதற்கன்று, பரங் கியராய் மாற்றிவிட்டார் என்பதற்காகவே,

*13.* ஐயரின் சடங்கு முறைகளும், பழக்க வழக்கங்களும் இந்துக்களின் சமயப் பழக்கங்களினின்று முற்றிலும் மாறுபட்டவை.

*14.* பரங்கி என்ருல் எங்களுக்கு வாந்திவரும்; ஞானஸ்நானத்திற்குப் பிறகு அவ்வாறில்லை. பரங்கியரும் எங்களைப்போன்றே ஒரே சமயத்தைப் பின்பற்றுகின்றனர் என ஐயர் கூறியதால் இப்பொழுது அவர்களை வெறுப்பதில்லை. அவர்களையும் மரியாதையோடே நடத்துகிருேம்.

*15.* பாப்பானவர் என்ருல் யாரென்று தெரியும்; அவரை நாங்கள் திருச்சபையின் தலைவராக ஏற்கிருேம். மேற்றிராணியாரை எங்கள் ஞானத் தலைவராக ஏற்கிருேம். அவரிடம் எங்களிற் சிலர் உறுதிபூசுதல் பெறுவதற்குச் சென்றிருந்தோம். மற்றவர் போகலாமென எண்ணியிருக்கிருேம். நாங்கள் ஞானஸ்நானம் பெறும்பொழுது பணமோ துணியோ பெறவில்லை. நாங்கள் கிறீஸ்துவர்களானது எங்கள் ஆன்மாக்களை இரட்சித்துக்கொள்வதற்கு மட்டுமே.[1]

இதையெல்லாம் கேட்ட புச்சேரியோ சுவாமிகளின் உள்ளம் பூரித்தது. மதுரைக் கிறீஸ்தவர்கள் எவ்வளவு நல்ல முறையில் தங்கள் வேதத்தை அறிந்திருக்கிருர்கள் என்பதைக் கண்டு உவகை கொண்டார். தத்துவபோதகரின் திறமையைப் பாராட்டினுர். கொன்சாலோ சுவாமிகள் விசாரணையின் இரண்டாம் நாளே உடல் நோய்வாய்ப் பட்டார். ஒருவேளை குற்றமற்ற இரத்தத்தைக் காட்டிக் கொடுத்தேன் என்ற நெஞ்சுக்குத்தலால் இருக்கலாம். அல்லது பிமென்டோ சுவாமிகள் இதனைக்கேட்டால் என்ன நினைப்பாரோ என்ற அச்சமாயிருக்கலாம். அல்லது உண்மையிலேயே களைப்பு மேலிட்டிருக்கலாம். எது எவ்வாருயிருப்பினும் புச்சேரியோ சுவாமிகள் மட்டும் ஓர் அழகிய

---

[1] போர்த்துக்கீசியர் சில முறைகளில் பொருள் பதவி மோகங் காட்டி மதமாற்றினர். பொதுவாக, போர்த்துக்கீசியர்கள் ஞானஸ்நான சமயத்தில் துணிமணி கொடுப்பதுண்டு.

கடிதம் வரைந்தார். அதிலும் தத்துவபோதகர் குற்ற மற்றவரே.

எனினும் விசாரணை முடியும்வரை பொறுத்திருக்க முடியவில்லை பிமென்டோ சுவாமிகளால். கொன்சாலோ சுவாமிகளின் கூற்றுக்களனைத்தையும் உண்மையெனக் கொள்ளத் துணிந்துவிட்டாரரோ என்னவோ? ஐந்து வேத சாஸ்திரிகள் கொண்ட ஒரு கழகம் அமைத்து மறுபடியும் கடிதத்தில் கூறப்பட்டவை தண்டனைக்குரியவையா என்றும், தண்டிக்காவிட்டால் பெரிய சுவாமியாருக்கு என்ன பாவம் என்றும் கேட்டிருந்தார்.

இம்முறை வேத சாஸ்திரிகள் பூணூல், வெளிச் சடங்கு (குளிப்பு போன்றவை) ஞானக்கர்ரியங்களில் புதிய சொற்கள் புகுத்தியது, கொன்சாலோ சுவாமிகளிடமிருந்து தனித்துச் சென்றது இவை பற்றியே ஆராய்ந்தனர். முடிவாக "பூணூலை, அத்துடன் சிலுவை இணைக்கப்பட்டிருப்பதால் அனுமதிக்கலாம் குளிப்பு முறைகளெல்லாம் இந்து மதம் பற்றிய மூடக்கொள்கைகள்; ஞானக் காரியங்களில் பெயர்களை மாற்றியது பெருந்தவறு; ஆழந்தெரியாது காலை விட்டுவிட்டார்; இவைகளில் தவறுவது வெகு எளிது; கொன்சாலோ சுவாமிகளிடமிருந்து விலகியது வேதத்தில் பிளவு உண்டாக்கியது போலாகும்" எனத் தெரிவித்தனர். "எனவே தத்துவபோதகர் ஒரு வேதத் துரோகி; அவருடைய கிறீஸ்துவர்கள் உண்மைக் கிறீஸ்துவர்களல்லர். மதுரை வேதபோதக அலுவலை உடனே நிறுத்தாவிட்டால் பெரிய சுவாமிமார்கட்குச் சாவான பாவம்" என்று தங்கள் தீர்ப்பைக் கூறினர்.

சாவான பாவத்தையா பிமென்டோ சுவாமிகள் கட்டிக்கொள்ளுவார்? மறு தபாலிலேயே வேதசாஸ்திரிகளின் முடிவை விளக்கி எழுதினர். கொச்சி ஆலோசகர் குழுவும் மதுரைக் கிறீஸ்துவர்களும் என்னதான் கூறினும் வேதசாஸ்திரிகளின் முடிவு தவருயிருக்காது. எனவே பிமென்டோ சுவாமிகள் மதுரை முறைகளை அடியோடு

தொலைப்பதாகத் திட்டமிட்டு உரோமாபுரிக்கு எழுது வார். அதற்கு முன்னர் தத்துவ போதகர் ஏதும் மறுத் துக் கூறவேண்டியிருப்பின் கூறிவிடலாம். அதையும் அடுத்த கப்பலில் பெரிய சுவாமியாருக்கு அனுப்பிவைப் பார். அடுத்த கப்பல் 1610 நவம்பரில் புறப்படும்.

கடிதம் தத்துவபோதகரைக் கவலையில் ஆழ்த்தியது. அர்ச். இஞ்ஞாசியாரது சபை ஒழுங்குகளில் மிக முக்கிய மானது கீழ்ப்படிதல். அதே ஒழுங்குகளின் முக்கியமான நோக்கம் ஆண்டவரின் அதிமிக தோத்திரம், அதாவது ஆன்மாக்கட்கு இன்னும் அதிக நன்மை செய்தல். பிமென்டோ சுவாமிகளைப்பற்றி அவர் குறை எதுவும் கூற வில்லை. அவர் மதுரையைச் சரிவர அறியவில்லை. எனி னும் எல்லாமறிந்த ஆண்டவர் கையில் விட்டுவிட்டால் என்ன ? இல்லை. நம்மாலானதைச் செய்வது நம் தலை மேல் சுமந்த கடன். ஏன்? அது என் நலத்தை மட்டுமா பொருத்தது? என் நலத்தைமட்டும் பாதித்தால் விட்டு விடலாம். இது மதுரையிலிருந்த கிறீஸ்துவர்களையும் இந்துக்களையும் பாதித்தது. நான்போராடுவது மதுரைக்கு மட்டுமில்லை. நாளைய இந்தியா முழுவதற்குமே. என் கொள்கைகள் சரியென ஏற்கப்படின், கிறீஸ்துவின் அடிபணியும். இஃதொன்றே கதவைத் திறக்கச் சரியான சாவிபோலத் தோன்றியது. எனவே இந்தியாவுக்காக, கிறீஸ்துவுக்காகத் தன் முறைகளையும் முறைகளுக்கு வழி கோலிய தென்னிந்தியச் சூழ்நிலையையும் விளக்கி எழுது மாறு முடிவுசெய்தார்.

இம்முறை பிமென்டோ சுவாமிகள் கொன்சாலோ சுவாமிகளின் கடிதத்தையும் அனுப்பியிருந்தார். தத்துவ போதகர் சுவாமிகட்கு உதவி செய்ய அவருடைய பெரிய சுவாமியார் லெயேர்சியோவும், அவருக்குத் துணைவரான விக்கோ அடிகளும் இருந்தனர். மூவரும் கூடி ஆராய்ந்து, இரு பெரும் கடிதங்கள் எழுத முனைந்தனர்.

சுவாமி விக்கோ கோவை வேதசாஸ்திரிகளின் குற்றச் சாட்டுகட்கு ஒரு விடை எழுதினர். அதன் தலைப்பு

**"மதுரையில் இந்துக்களைக் கிறீஸ்துவர்களாக்கப் பயன் படுத்தப்படும் முறை".** அவரே ஒரு வேதசாஸ்திரி. ஆகவே பக்கம் பக்கமாக எழுதித்தீர்த்தார்.

இதுபற்றிக் கேள்வியுற்ற கிராங்கனூர் மேற்றிராணி யாரும் கவலைகொண்டார். மதுரையில் நடைபெற்ற வேலையே அணைந்துவிடும் என்பதைத் தாங்கமுடியாமல் சமயத்தலைவர் அக்வவீவா அடிகட்கு அவரும் ஒரு கடிதம் அனுப்பினர். "மதுரையில் நடைபெறுவது இறைவனிட மிருந்தே வந்தது ; கோவை வேதசாஸ்திரிகள் மதுரையின் சூழ்நிலையைச் செவ்வனே அறிந்திருந்தால் இவ்வண்ணம் கூறி இருக்கமாட்டார்கள்; சேசு சபையினரிடத்தில் ஒன்று பட்ட கருத்து நிலவுமாறு அடிகள் சீக்கிரம் ஏற்பாடு செய்ய வேண்டுகிறேன் ; அத்துடன் மதுரைக் குருக்களுக் கும் ஆறுதலளியுங்கள்" என்ற கருத்துக்கள் அடங்கிய ஒரு கடிதம் வரைந்தார்.

தத்துவபோதகரும் கொன்சாலோ சுவாமிகளின் குற் றச்சாட்டுகட்கு ஒரு "மறுப்புரை" எழுதினர். அத் துடன் தன் தங்கை லுதோலிகா என்ற கன்னிகைக்கு எழுதிய முடங்கலில் தனக்குண்டாகிய சிலுவையைப் பற்றியும், அதைத் தாங்குமாறும் தனக்காக வேண்டிக் கொள்ளுமாறும் அவர்களை வேண்டிக்கொள்வதைப் படிக் குந்தோறும் படிக்குந்தோறும் கண்ணீர் முத்து முத்தாக வடிகின்றது. ஆ! ஆண்டவரே! இதுதானு சிலுவை யின் இராஜபாதை !

## 10

## கார்மேகங்கட்கிடை ஒரு மின்னல்

கடிதங்ககள் யாவும் உரோமைக்குச் சென்றன. இன்று இரண்டு வாரங்களில் உரோமையிலிருந்து விடைபெற லாம், ஆனல் அன்று இரண்டு ஆண்டுகளாவது ஆகும்.

அதற்கிடையில் தத்துவ போதகரது வாழ்வு துன்பத்தால் சூழ்ந்தது. மதுரையில் அவருடைய நல்ல பெயரைக் கெடுத்துச் சேசு சபையினின்று வெளியேற்றச் சூழ்ச்சிகள் ஆரம்பித்தன.

லெயேர்சியோ அடிகள் மதுரைக்கு வரும்பொழுது மார்ட்டினோ என்ற சிறுவனைக் கூட்டிக்கொண்டுவந்தார். அவன் முன்பு ஓர் அடிமை. லெயேர்சியோ சுவாமிகள் யாழ்ப்பாணத்திற்குச் சென்றிருந்தபொழுது அவனை அவரது கையில் ஒப்படைத்தனர். தத்துவபோதகரின் இல்லத்திற்கு அவன் உதவுவான் என அழைத்துவந்தார் லெயேர்சியோ அடிகள்.

மார்ட்டினோ மடத்தில் ஒருவித நிலைமையைக் கண்ணுற்றான். அலெக்ஸிஸ் என்பவன் வீட்டில் தலைமைக் காரியாளனாக இருந்தான். அவனது துறவற நிலையிலும் அகங்காரம் ஓரளவு ஆட்டியது. எனவே அவனுக்குக் கீழிருந்த இரு அந்தணர் அவனை வெறுக்கலாயினர். இந்த இருவருக்கிடையே இருந்த வெறுப்புத்தீயில் எண்ணெய் விடலானான் மார்ட்டினோ. இந்த வெறுப்பை அலெக்ஸிஸ்மேல் மட்டுமல்லாது, அடிகளின்மேலும் காட்டினான் மார்ட்டினோ. அவர்களுடைய மனத்தாங்கல்களைச் சுவாமி கொன்சாலோவிடம் போய்க் கூறுமாறு அவர்களுக்கு ஆலோசனை தந்தான். என்ன கூறவேண்டும் என்று சொல்லித்தந்தான். அவனது இளவயதிற்கொவ்வாத கதைகளைக் கட்டிவிட்டான். இவற்றில் சில தத்துவபோதகரின் நன்னடத்தையையும் குற்றம் சாட்டின.

இதெல்லாம் அறிந்த கொன்சாலோ சுவாமிகள் லெயேர்சியோ அடிகளிடம் முறையிட்டார். லெயேர்சியோ அடிகள் தீர விசாரணை செயயலானார். ஒருநாள் ஐயரை அழைத்தார். பெரிய சுவாமியாரின் முன்பு சுவிசேஷப் புத்தகம் இருந்தது. தாம் கேட்டவற்றைக் கூறி உண்மையைக் கூற சுவிசேஷப் புத்தகத்தின்மேல் கைவைத்துச்

சத்தியம் செய்யக் கட்டளையிட்டார். தவறற்ற தத்துவ போதகரும் சத்தியம் செய்தார். ஆ! ஏன் இந்தத் துயரம்!

விசாரணையின் இறுதியில் உண்மை வெளியானது. முதலில் லெயேர்சியோ சுவாமிகள் மார்ட்டினேவைக் கொச்சிக்கு அனுப்பிவைத்தார். இரண்டாவது அலெக்ஸிஸை ஒரு வேலையாளராக மாற்றிவிட்டு விக்கோ சுவாமிகளை மேற்பார்க்குமாறு கட்டளையிட்டார். அலெக்ஸிஸால் இந்த அவமானத்தைப் பொறுக்க முடியவில்லை. ஆனால் அடுத்த சில நாட்களில் ஒரு பெரிய களவில் ஈடுபட்டு அகப்படவிருந்தான். அவனைத் தப்புவிக்குமாறு தத்துவபோதகர் கொச்சிக்கு அனுப்பிவைத்தார்.

அனுப்பிவைத்த சில நாட்களில் இராம செட்டியின் வீட்டிலிருந்து சில ஆட்கள் வந்து தத்துவபோதக சுவாமிகளை ஏச ஆரம்பித்தனர். அவர் ஒரு பரங்கி என்றும் அவர் சொக்கநாதனைக் கும்பிடாதது குற்றமென்றும் கூறினர். அவர் வீட்டில் ஒரு பெரிய திருடனை (அலெக்ஸிஸை) ஒளித்து வைத்திருக்கிறார் என்றும் திட்டினர். தத்துவ போதகரை இதுவரைக் காத்து நின்ற இராம செட்டியுமா இவ்வாறு திரும்பவேண்டும்? அடிகள் எழுந்து வானத்தை நோக்கி "பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே! இந்த இராம செட்டி ஒருவன்தான் எங்கள்கூட நின்றான். இப்பொழுது நீர் ஒருவரே எம் கதி. உமதுபேரில் நம்பிக்கையாய் இருக்கிறேன்" என்றார்.

சிலமணி நேரங் கழித்து சிலருடன் ஒரு தளபதி வந்து அடிகளை மேற்கூறியவண்ணம் திட்டித் திருடனைக் கையளிக்குமாறு கேட்டான். ஆனால் அடிகள் சிறிதும் அஞ்சாத உள்ளத்தவராய் "நான் சொக்கநாதனைக் கும்பிடவில்லை, உண்மைதான். ஆனால் நான் அவனைவிட உண்மையான ஒரே கடவுளைக் கும்பிடுகிறேன். பரங்கியென்று நீங்கள் என்னைக் காரணமின்றி அழைக்கிறீர்கள். இந்த இளைஞனை நீங்கள் கொண்டுபோவதற்கு முன்னர் என் தலையை நீங்கள் அறுத்தெறிய வேண்டும். என் உயிருள்ள வரையும் என் இல்லஞ்சார்ந்த அவனைக் கைவிடேன்" என்றார்.

இந்த விடை அவர்களுக்குத் திகைப்பை அளித்தது. அவர்களுள் அரச குலத்தைச்சேர்ந்த ஒருவன் இவரது விடையிலிருந்து இவர் ஒரு இராஜாவே என முடிவுசெய்வதாகக் கூறினன். அவர்கள் ஒரு சந்நியாசியைத் தொடலாகாது. பின்னர் அவர்கள் திரும்பிச் சென்று இராமசெட்டியிடம் நடந்ததைக் கூறினர். இராம செட்டி அடிகளின் மன்னிப்பைக் கோரி ஆள்விட்டான்.

இதைப்போன்று இடையிடையே பற்பல துன்பங்கள் வந்துகொண்டேயிருந்தன. ஒருமுறை ஒரு பெண் காணுமற் போய்விட்டாள், மந்திரவாதிகள் அடிகளைத் தூற்றினர். இறுதியில் அவள் வேருேரிடத்திற்குத் தானே ஓடியிருந்த உண்மை வெளிப்பட்டது. சில அந்தணர்கள் அடிகளைச் சோதிக்கவும் வந்து போயினர்.

இவைகட்கிடையே அடிகளின் மனதில் உருவேற்றுக் கொண்டிருந்தது ஒரு கல்லூரி. அன்றைய மதுரையில் பல தேர்ந்த அந்தண ஆசிரியர்கள் ஏறக்குறைய பத்தாயிரம் மாணவர்கட்கு இந்து தத்துவ சாஸ்திரத்தைக் கற்றுக்கொடுத்து வந்தனர். ஏறக்குறைய ஐம்பது ஆசிரியர்கட்கடியில், ஆசிரியர் ஒருவருக்கு 200–300 பேராகக் கல்வி பயின்றனர். ஒவ்வொரு மாணவரும் ஏறக்குறைய ஐந்தாண்டுகளாவது பயிலவேண்டியிருந்தது. இந்தக் கல்லூரிகளைப் பற்றி எழுதும்பொழுது அவர்களது கல்வியைப் பற்றி சில எழுதுவது தவிர்க்க முடியாதது. அது இந்து தத்துவ சாஸ்திரம் பற்றியது.

இந்து தத்துவ சாஸ்திரமும் வேத சாஸ்திரமும் ஏறக்குறைய ஒன்றே. அந்தத் தத்துவ சாஸ்திரத்தின் தோற்றம் வேதங்களிலிருந்தே. உபநிடத காலத்தில் இந்துச் சாஸ்திரத்தில் கர்மம் அல்லது மறுபிறப்புக் கொள்கை புகுந்தது. பிறப்பு என்ருலே துன்பம். இந்தப் பிறப்புக் கடலிலிருந்து விடுதலை பெறுவதற்கேற்ற வழியையே பின் வந்த தத்துவ வல்லுநர் அனைவரும் தேடினர்.

இவ்வாறு தேடுகையில் விளைந்ததே வேதாந்தம் என்ற துறை. வேதாந்தத்தில் ஆறு பிரிவுகள் உள்ளன.

மற்றப் பிரிவுகளைவிட ஆருவது பிரிவே கத்தோலிக்கத்தைப் படிப்பிப்பதற்குச் சிறந்ததாக உதவியது. இந்த ஆருவது, நியாயம் என்ற முறை. இது முக்கியமாக நிந்தனைக் கலையைப் பற்றியது. சிந்தனைக் கலையை நான்கு பகுதிகளாகப் பிரித்தனர்: விவாதம், அறிவு, சான்று, விசுவாசம்[1] இச்சொற்களின் பொருள் மிகவும் ஆழமானது. இந்து தத்துவ சாஸ்திரமே அடங்கியுள்ளது. இம்முறையைக் கல்லூரிகளில் "சிந்தாமணி" என அழைத்தனர்.

இவற்றில் ஒன்றை அல்லது தனக்கெனத் தனிப்பட்ட ஒரு முறையை ஏற்று அதில் கிறீஸ்துவத் தத்துவ சாஸ்திரத்தையும் வேத சாஸ்திரத்தையும் அந்தணச் சிறுவர்கட்குக் கற்றுத்தரத் தத்துவ போதகர் எண்ணங்கொண்டார். லெயேர்சியோ அடிகளும் உத்தரவு அளித்தார். எனினும் 1610-ஆம் ஆண்டிலேயே அதனை ஆரம்பிக்க இயலவில்லை.

ஏன்? இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று: பொருளின்மை, கல்லூரிகளில் மாணவர்கட்கும் ஆசிரியர்கட்கும் உணவூட்ட உதவியது அரசினரது பொருள். இன்றுபோல் அன்று மாணவர்கள் பணங்கட்டிப் படிக்கவில்லை. மதுரை மாணவனை ஆசிரியருடன் இணைத்தது கல்வியே. ஆசிரியர் மாணவர்களைக் கற்றுக்கொடுப்பதற்காகவே ஏற்ருர். அன்று ஆசிரியரை அரசாங்கம் பெரிதும் மதித்தது, அடிகளோ பொருளின்றித் தவித்தார்.

மற்ருென்று; வடமொழி. அந்தக் கல்லூரிகளில் வடமொழியிலேயே கல்வி புகட்டப்பட்டது. ஆனல் கல்வி பயிற்றக்கூடிய அளவு, வாதிக்கக்கூடிய அளவு தனக்கு வடமொழியில் புலமை உண்டா என்று தத்துவபோதகர் தன்னையே கேட்டுக்கொண்டார். பொருள் சேர்ப்பதற்குள் தான் வடமொழியில் மிகுந்த புலமை பெற உறுதி பூண்டார். இந்த எண்ணம் ஏன் அவர் மனதில் உதித்தது?

---

[1] Argumentation, Knowledge, Evidence, Faith.

அந்தணச் சிறுவர்களிற் சிலரேனும் இவைகளைப் பயின்று தேர்ந்தால் கிறீஸ்துவ குருமாராகலாம்; தான் தொடங்கிய புதிய அலுவல் தொடர்ந்து நடைபெறும்; குருக்களாகாத மற்றவர் அந்தணரோடு வாதாடவும், தம் கிறீஸ்துவ நண்பர்கட்கு உதவவும் பயன்படுவர் என்பதால்தான்.

உண்மை, அன்றுமட்டுமன்று, என்றுமே குருக்களுக்கு உதவி தேவை, கிறீஸ்துவத் தத்துவ சாஸ்திரமும் வேத சாஸ்திரமும் அறிந்த இல்லறவாசிகள் குருக்களுக்கு உதவியாகத் தேவை. அப்போஸ்தலர் காலமுதலே திருச்சபையில் இத்தகையோர் இருந்து வந்துள்ளனர். ஐரோப்பாவில் இத்தகையவர் கிறீஸ்துவத்தைப் பரப்புவதற்கு எவ்வளவு துணையாக உதவினர் என்பது திருச்சபையின் வரலாற்றை அறியும் எவருக்கும் உள்ளங்கை நெல்லிக் கனியெனத் தெற்றென விளங்கும். இன்று திருச்சபை இல்லற அப்போஸ்தலத்துவம் பற்றித் தன் எண்ணத்தைத் தெளிவாகக் கூறிவிட்டது. கிறீஸ்துவச் சமயத்தை முற்றிலும் அறிந்த இல்லற வேதபோதகர் தேவையில்லையா? இத்தகையவரைத் தயாரித்து நமக்களிக்க இந்தியாவிற்கும் இத்தகைய கல்லூரி ஒன்று இன்றியமையாதது. திருச்சபை வேரூன்ற வேண்டுமென்ருல், திருச்சபை இந்தியாவில் தழைத்தோங்க வேண்டுமென்ருல், இல்லறத்தாரும் குருக்களுடன் ஒத்துழைக்கவேண்டும். இத்தகைய ஒத்துழைப்பு பயன் தரத்தக்கதாய் இருக்கவேண்டுமென்ருல் இல்லறவாசிகளும் கிறீஸ்துவத் தத்துவ சாஸ்திரமும் வேத சாஸ்திரமும் ஓரளவேனும் அறிந்திருக்கவேண்டும். சிலரேனும் சரிவர அறிந்திருக்கவேண்டும். இது என்றுமே இன்றியமையாத தேவை.

இத்தேவையை உணர்த்த 350 ஆண்டுகட்கு முன்பே ஒரு கல்லூரி நிறுவ விரும்பினர் தத்துவபோதகர். எனினும் மேற்கண்ட காரணங்களால் அதனை அவ்வாண்டு அமைக்க இயலவில்லை. பின்னர் பதின்மூன்ருண்டுகள் அவருக்குற்ற இடையூறுகள் அதனை அனுமதிக்கவில்லை. பின்னர் வயதும் நிலையும் இடம் கொடுக்கவில்லை. உள்ளத்

தின் ஆவல் நிறைவேருமலே அவர் இவ்வுலகம் நீத்தார். இனிமேலாகிலும் அந்த எண்ணத்தை யாரேனும் ஏற்பாரோ; ஏற்று நடத்துவாரோ என்று இன்னும் ஏங்காமலா இருப்பார் தத்துவபோதகர் மேலுலகிலே?

அந்தக் கல்லூரிக்காகத் தத்துவபோதகரின் கையில் 360 பரோடோக்களை விட்டுச்சென்ருர் லெயேர்சியோ அடிகள். இது திடீரென காணமற் மறைந்துவிட்டது. இதையறிந்த இராமசெட்டி கிறீஸ்துவர்களே திருடியிருக்க வேண்டுமென எண்ணி அவர்களைச் சோதிடர்களின் கையில் ஒப்படைக்க விரும்பினுன். இவர்கள் தம் கைகளில் அகப்பட்டவர்களை எவ்வாறு நடத்துவார்கள் என்பது நாமறிந்ததே. எனவே தத்துவபோதகர் தம் கிறீஸ்துவர்களை அவர்கள் கையில் ஒப்படைக்க விரும்பவில்லை. கள்ளன் தானுகவே அகப்படுவான் என்ருர்.

ஊர் முழுதும் இதுபற்றி ஒரே பேச்சு. அடிகள் கும்பிடும் கடவுள் உண்மையானுல் அவர் ஏன் இத்தகையன நடைபெறும்படி அனுமதிக்க வேண்டும் என்றனர் சிலர். இன்னும் சிலர் இவர் உண்மையான புனிதர் என்ருல் ஏன் கள்வனைத் தானுகவே கண்டுபிடிக்கக் கூடாது என்றனர். மற்றவர், நல்லவர்கட்குக் கடவுள் துன்பங்களை அனுப்ப மாட்டாரென இழித்தனர். இப்பொழுது இவருக்கு இதோ பணம் களவு போய்விட்டது; இவர் நல்லவரா எனக் கேட்டனர்.

ஆண்டவர்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு நோபிலியும் விக்கோ சுவாமிகளும் அடுத்த ஆண்டு தாங்கள் செய்யவேண்டிய வேலையைத் திட்டமிட்டுக்கொண்டிருந்தனர். மதுரையில் பல நன்மைகள் இருப்பினும் சில தீமைகளும் உள்ளன. மதுரை பிராமண சமயத்தின் தலைமைப்பீடம், எனவே பரங்கி பிராமணர் போன்ற சண்டைகளெல்லாம் அதிகம். இன்னும் உள்நாட்டுப் பக்கம் சென்ருல் மதமாற்றுவது அவ்வளவு கடினமாக இருக்காது. எனினும் மதுரையைக் கைவிடக்கூடாது; ஆனல்

மதுரையோடு மட்டும் நிற்கக்கூடாது. நோபிலி அடிகள் விக்கோ சுவாமிகளை மட்டும் மதுரையில் விட்டுவிட்டு மற்ற இடங்களில் முயலவேண்டும். இவ்வாறு அவர்கள் திட்ட மிட்டுக் கொண்டிருக்கும்பொழுது ஒருநாள்......

செபத்தில் அந்தப் பணமுடிப்பு தம் வீட்டின் கூரை யில் சொருகி வைக்கப்பட்டுள்ளதைக் கண்டார். இச் செய்தி எங்கும் காற்றெனக் கடுகி விரைந்தது. சிலுவையி லிருந்து இவன் இறங்கி வரட்டும் என்று இழித்துப் பேசிய யூதர்களின் வாயை மடக்கும் வண்ணம் கல்லறையி லிருந்து வெளிப்போந்த இறைவன் தத்துவபோதகரையும் மகிழச்செய்தார்.

இதெல்லாம் கேட்ட இராமசெட்டிக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. தன் சோதிடர்களை வேண்டாமென்று ஒதுக்கிய அந்தச் சந்நியாசி தன் உதவியின்றியே பணத்தை மீட்டுக்கொண்டதுபற்றி அவனுக்குக் கோபமே. ஒரு முறை தன் ஆட்களை அனுப்பி அடிகளிட மிருந்து அவர் பரங்கியா இல்லையா எனக் கேட்டுவரச் சொன்னான். தத்துவபோதகரும் முன்னர்போல் ஒரு பட்டியல் வழங்கினர்.

எனினும் சினம் தணிந்தாலும் பழைய நட்புத் தோன் றவில்லை. அண்டை நாட்டுப் பாளையக்காரன் ஒருவன் நாயக்க மன்னனிடம் சந்நியாசிகளைப் பற்றியும் அவர்களது நிலத்தைப்பற்றியும் ஏதோ பேசவே, அவன் இராமசெட் டியை அழைத்து அடிகளின் குடிசை கோயில் இருந்த பகுதியைத் தனக்குத் தருமாறு கேட்டான். இராமசெட்டி தன் தமையனே அப்பகுதியை ஒரு சந்நியாசிக்கு அளித்த தாகக் கூறவே நாயக்க மன்னன் எவ்வாறோ மனமாறி சந்நியாசிக்கு அளித்ததை நான் தொடமாட்டேன் என் றான். அத்துடன் ஒருவாறு தொந்தரவு ஓய்ந்தது.

அப்பொழுது அடிகள் கொச்சிக்கு புறப்பட்டுக் கொண்டிருந்தார். ஏனென்று அவருக்குத் தெரியாது. ஒரு வேளை பெரிய சுவாமியாரிடமிருந்து முடிவு வந்துவிட்

டதோ என்னவோ? கொச்சிக்கு வந்ததும் அடிகள் ஆனந்தத்தால் கண்ணீர் சொரிந்தார்.

ஆம், அவர் சேசு சபையில் இறுதி வார்த்தைப்பாடுகள் எடுக்கப்போகிறார். இப்பொழுதுதான் சேசு சபை முற்றிலும் அவரைத் தன்னுடையவராக ஏற்றுக்கொண்டது. சேசு சபையில் பதினேழு ஆண்டுகள் கழித்தபின்னர் கிடைக்கும் ஒரு பெரும் பேறு அது.

அந்த மகிழ்ச்சியே அவர் அந்தப் பதின்மூன்று ஆண்டுகளில் காணவிருந்த ஒரே மகிழ்ச்சி. மேகங்கட்கிடையே ஒரு மின்னல் தோன்றி மறைந்தது.

## 11

## அக்வவீவாவின் கடிதம்: வேலை நிறுத்தம்

உரோமை மாநகரில் ஜேசு என்ற கட்டிடத்தில் ஒரு சிறிய அறையில் அமர்ந்திருந்தார் அக்வவீவா அடிகள். வயதிலும் தள்ளாடித் தளர்ந்திருந்தார். இறப்பின் அறிகுறிகள் இப்பொழுதே காணப்பட்டன. நடுங்கும் கரங்களுடன் தத்துவ போதகரைப் பற்றிக் கடிதம் வரைந்து கொண்டிருந்தார்.

அவருடைய செவிகளில் ஐரோப்பாவில், முக்கியமாக உரோமைமாநகரில் அடிகள்பற்றி நிலவிய பேச்சுக்கள் விழுந்திருந்தன. இந்தப் பேச்சுக்களுக்கடிப்படை இந்தியாவிலிருந்து வந்த கடிதங்களே. இந்தியாவில் சிலர் அவரை ஆதரித்தனர்: பலர் அவரை எதிர்த்தனர் என்பதை நாமறிவோம். மதுரையை, அதன் சூழ்நிலையை நன்கு அறிந்தவர் அவரைப் போற்றினர். இவற்றை அறியாதவர் அவரைத் தூற்றினர். எனவே வந்த கடிதங்கள் பலவும் பலவாறு பேசின. முடிவு? பற்பல முடிவுகள். பலர் அவர் வேதத் துரோகியென முடிவுகட்டினர்.

மற்றும் பலர் அவர் வேதத்துரோகியல்லர், விரைவில் அம்மாதிரி மாறிவிடுவார் என்றனர். இதைக் குறித்துப் புத்தகங்களும் வெளியாகலாயின. அந்தோ : அறியாமை யின் இருள் ஆட்சி செய்கிறது.

தன் தமையன், தன் உறவினர் ராபர்ட் வேதத் துரோகியானுர் என்ற செய்தி அவருடைய உறவினர் களின் செவிகளில் நாராசம் ஏற்றிறைற்போலிருந்தது. அவருடைய முன்னேரான கர்திஞல் ராபர்ட்டைப் போன்றே அவரும் வருவார் என்று எண்ணியிருந்த அவர் களது நெஞ்சம் துன்பத்தால் உருகிற்று. கர்திஞல் ஸ்போர்ஸோ என்னதான் எண்ணிஞரோ ! அவர் உறவின ரில் ஒருத்தி அவரை மீட்டேதான் தீரவேண்டுமென உறுதிபூண்டாள். அக்வவீவா அடிகளிடம் சென்ருள் ; இதற்கென ஒரு குழு அமைத்து இந்தியா அனுப்புமாறு வேண்டிஞள் ; அதற்கு வேண்டிய பொருட்செலவைத் தானே ஏற்பதாகக் கூறிஞள். ஆஞல் அக்வவீவா அவ ளேத் தேற்றி அனுப்பிஞர் ; அவ்வாறு குழு அமைக்க வேண்டி நேரிடின் சேசு சபையே அதன் செலவுகளே ஏற்கும் என்றும் தெளிவாகக் கூறிவிட்டார்.

சேசு சபையிலும் இச்செய்திகள் வருத்தத்தையே விளேவித்தன. அவருடைய சகோதரர்கள் அவர் வேதத் துரோகி என்பதை நம்பவில்லே. எனினும் இந்துக்களின் சில சடங்குகளே ஏற்பதால் அவர் மதத்தைத் துறக்க நேரிட்டிருக்கலாம் என்றும் கருதினர். அவருடைய உற்ற நண்பர்கள் அவருக்குக் கடிதம் வரைந்தனர். அவர்களுள் ஒருவர் கர்திஞல் பெல்லார்மின். அவர் அடிகளே வாஞ்சை யுடன் கண்டித்துப் பெரிய சுவாமிகட்குக் கீழ்ப்படிந்து நடக்குமாறு எழுதிஞர்.

அக்வவீவா அடிகள் இவற்றையெல்லாம் அறிவார். இதற்குமேலும் அறிவார், முதன்முதலில் அவர் கண்முன் தோன்றிஞர் தத்துவபோதகர். இப்பொழுது அணிந் திருக்கும் சந்நியாசி உடையில் அல்லது இருக்கும்

உருவத்தில் அல்ல. பதினெட்டு பத்தொன்பது ஆண்டு கட்குமுன்னர் சிறுவர் ராபர்ட்டாகவேதான் தோன்றினர். அவரது தேவ அழைப்பிற்குண்டான இடையூறுகளெல்லாம் தோன்றி மறைந்தன. வேதம் போதிப்பதற்காக வேற்றுநாடு செல்லத் துணிந்து அவர் வரைந்த கடிதங்களும் அடிகளுக்குமுன் தோன்றி மறைந்தன. அவருக்கும் கர்தினல் ஸ்போஸாவுக்கும் இடையே நடந்த போரும் நினைவில் வந்து மறைந்தது. இப்பொழுது அவரா வேதத்துரோகி! அக்வவீவா அடிகளால் நம்ப முடியவில்லை.

அவர்முன் மேசையில் கிடந்தன பல தாள்கள். முதன் மூன்று ஆண்டுகளில் 1607 முதல் 1609 வரை அவருடைய பெரிய சுவாமியார் லெயேர்சியோ அடிகள் அவரது வேலையைப் புகழ்ந்து எழுதியுள்ளார். பல்லாண்டுகளாக ஒருவரும் மனந்திரும்பாத மதுரையில் உயர்குலத்தவர் 150 பேரை மூன்று ஆண்டுகளில் மனந்திருப்பியுள்ளார். இதெல்லாம் தவருன முறையா? லெயேர்சியோ அடிகள் வீணுகவா இதையெல்லாம் புகழ்வார்?

பிமென்டோ சுவாமிகளோ முற்றிலும் மாருகக் கருதுகிருர். அவரை ஏறக்குறைய ஒரு வேதத்துரோகியென அழைக்கிருர். பெரிய சுவாமியார்கட்கு விரோதமாக நடக்கிருர் என்றும் கருதுகிருர். மதுரை முறைகளை யாவும் தவறெனப் பட்டஞ்சூட்டி அதனை நிறுத்த வேண்டுமென்கிருர்... நிறுத்தவா?

கோவை வேதசாஸ்திரிகளும் அவருடைய குடுமி, சந்தனம், குளித்தல் இவைகளைக் கண்டிக்கின்றனர். கொன்சாலோ சுவாமிகளுடன் தொடர்பு வைக்காதது வேதப்பிரிவினைக்குச் சமம். இதெல்லாம் என்ன?

இதோ அதி. வந். ராஸ் மேற்றிராணியாரின் கடிதம். அவரோ இதையெல்லாம் நல்லது என்கிருர்.

இதோ கொன்சாலோ சுவாமிகளின் கடிதம். பெரிய சுவாமியார்கள் தடுப்பினும் அவர் கீழ்ப்படியவில்லையா?[1]

இத்தனை 'ஆம்' 'இல்லை'கட்கிடையே எது உண்மை? ராபர்ட்டின் "மறுப்புரை" மிக நீளமாகவுள்ளது. அதிலிருந்து உண்மை ஓரளவு தெளிவாகிறது. எனினும் எது சாதிபற்றியது எது சமயம்பற்றியது என்று அறிவது சிறிது கடினமே. "தன்னிலேயே" சடங்கிற்குட்படுவதால் இத்தகைய வேறுபாடுகளினுல் உண்மையை அறிவது கடினம். விக்கோ அடிகளின் கடிதமும் அவ்வாறேயுள்ளது.

இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தார். அவரது கடிதம் 1612-ஆம் ஆண்டுதான் இந்தியா சேர்ந்தது. எனவே 1611-இல் எழுதியிருக்க வேண்டும். அந்தக் கடிதத்தைப் பின்னர் அக்வவீவா அடிகளுக்கே அனுப்பினமையின், அது கிடைக்கவில்லை எனினும் அந்தக் கடிதத்தின் உண்மைகளை அதைப்பற்றி எழுதப்பட்ட பலவற்றினின்று சேர்த்து இங்கு வெளியிடுகிறோம்.

ஜேசு இல்லம்,
உரோமை.......1611

நம் அன்புள்ள மகன் ராபர்ட் தெ நோபிலிக்கு,

ஆண்டவரின் சமாதானம் உங்களுடன் இருக்கக்கடவது. கடிதங்கள் பலவும் பெற்று நான் உம்முடைய வேலையைப்பற்றி நன்கு அறிந்தேன். எனவே பின்வரும் முடிவுகள் செய்துள்ளேன். ஏனெனில் பெரிய சுவாமியார்கள் அறியாது முடிவுக்குவந்தனர் எனக் கருதினுல் கீழ்ப்படிவது மிகவும் கடினமாயிருக்கும்.

உமது உடைபற்றி அறிய எனக்கு மகிழ்ச்சி. உணவிலும் புலாலை விடுத்து தமிழரின் பண்பாட்டைப்பற்றி

[1] புச்சேரியோ சுவாமிகளின் கடிதம் அனுப்பப்பட்டதோ அல்லவோ நாமறியோம். அக்வவீவா சுவாமிகளின் கடிதத்திலிருந்து அது சேரவில்லை என்றே கொள்கிறோம்.

நிற்பது அறிவு. நீங்கள் கூறுவது உண்மையே. பண்பாட்டையன்று; சமயத்தையே போதிப்பது நம் கடமை.

நீங்கள் கூறியவண்ணம் சாதிப்பிரிவு மதுரையில் நிலைத்துநிற்பின், திடீரென அதனை அறுத்தெறிய முயல்வது அறியாமையே. எனவே கோயில்களில் அவரவர்க்கெனத் தனித்த இடங்கள் அளிப்பதில் தவறில்லை. அளிப்பதும் முறையே. இவ்வாறு முழுதும் பண்பாட்டைப்பற்றியவைகளை நீங்கள் ஏற்றுக்கொள்வதை நான் முழுதும் அனுமதிக்கிறேன்.

இவைகளைப்பற்றி உங்கள் பெரிய சுவாமியாருக்கும் அதிமேற்றிராணியாருக்கும் எழுதியுள்ளேன். அவர்களிருவரும் மதுரையில் நடைபெறும் புதிய முறைகளை நிறுததாமல் ஏதாவது சீர்திருத்தம் செய்யலாமாவெனக் கலந்து பேசவேண்டும். கலந்துபேசி அவர்கள் கூறுபவனவற்றைக் கேட்டு நடங்கள். எனினும் பொதுவாக எங்கும் எப்பொழுதும் சில உண்மைகள் உதவும். அவைகளை இங்கே எடுத்துக்கூறுகிறேன் : 1. நீங்கள் உங்கள் பெரிய சுவாமிமார்களின் சொல்லைத் தட்டி நடந்ததாகத் தெரியவருகிறது, அது உண்மையானல் நமது கீழ்ப்படிதல் வார்த்தைப்பாட்டிற்கு முரணனது. 2. நமது சமயத்தில் உண்மையை என்றும் மறக்கலாகாது. ஏ மா ற் ற ம் எதுவும் கூடாது. எனவே முதல் "கிறீஸ்துவின் சமயத்தை அரசரும் ஆண்டியும் பின்பற்றலாம்; உண்மையில் பழுதற்ற வாழ்வு வாழ்வாரே உயர்ந்தோர்; தாழ்ந்தோரோ அஃதல்லாதவர் என்பதை வெளிப்படுத்தவேண்டும்". 3. மற்றக் கிறீஸ்துவர்கட்கு இடறலளிக்கக்கூடிய எதையும் அகற்றி விடுதல் அவசியம். 4. பூணூல் குடுமி போன்றவைகளைப் பற்றி நான் உங்களுக்கு ஒரு புத்திமதி அளிக்கிறேன்; ஒரு வேளை நீங்கள் கூறுவது உண்மையாயிருக்கலாம்; எனினும் உங்களது வாதம் "தன்னிலேயே" "அதற்குக் கொடுக்கப்பட்ட காரணத்தைக் கருதினல்" "சடங்கின்மூலம்" என்பன மேற்சார்ந்துள்ளது. உண்மை ஒன்றுதான் எனினும் இவைகளிற் தவறுவது மிதவும் எளிது. 5. நீங்கள்

போர்த்துக்கீசியருடன் தொடர்பே இன்றி வாழலாம் என எண்ணின், நீங்கள் ஏமாறிவிட்டீர்கள் என்பது திண்ணம். இத்தகைய தொடர்பைத் தவிர்க்கமுடியாது. எனவே கொன்சாலோ சுவாமிகளைத் தள்ளிவைத்தல் கூடாது. அவரும் உங்கள் மதத்தினரே, உங்கள் சபையினரே என்பதைத் தெளிவுற மதுரைப் புதுக்கிறீஸ்துவர்கட்குக் கூற வேண்டும். 6. பற்பல புதுச் சடங்குகளை நீங்கள் பயன்படுத்துவதாகக் கேள்விப்படுகிறேன். இவையெல்லாம் மூடத்தனமானவை, தயவுசெய்து விட்டுவிடவும்.

இவைகளெல்லாம் நான்மட்டும் முடிவுசெய்யவில்லை. பலவேதசாஸ்திரிகளையும் கேட்டே எழுதுகிறேன். மதுரை முறைகளை அடியோடு நிறுத்துவதற்கு ஒருபோதும் உடன்படேன். முழுதும் பண்பாடு சமூகம் பற்றியவைகளை ஏற்றுக்கொள்வது மிகவும் பயனுடைத்து. மற்றவைகளைத் தள்ளுவது அவசியம். இவ்வாறு நாம் அப்போஸ்தலர்களின் பாதையைப் பின்பற்றுவோமாக.

உங்களது செபங்களையும் பூசைப்பலிகளையும்
கோரி நிற்கும்

கிறீஸ்துவில் உங்கள் ஊழியன்
**சி. அக்வவீவா, சே. ச.**

இக்கடிதத்திஞல் விளைந்தவற்றைத் தெளிந்தறிவதற்குத் ''தன்னிலேயே'' ''காரணத்தை நோக்கி'' இவைகளெல்லாம் என்னவென அறிவது நல்லது. தமிழ்நாட்டில் 'சுவரோடு சாத்திய ஏணிக்கு அடியில்! நிற்காதே' என அடிக்கடி கூறுவர். இதற்கு ஒரு மூடக்காரணம் ஏதாவது ஒன்றும் கொடுப்பர். எடுத்துக்காட்டாக சிவன் கோபிப்பான். இரண்டையும் ஒன்றுசேர்த்து நோக்கின் அது அறியாமையாகவே, மூடக்கொள்கையாகவே தென்படுகிறது. எனவே ஒரு சிறுவனை நோக்கி ''இதெல்லாம் பொய், ஏணிக்கு அடியிற் போய்நில்'' என்று யாராவது கூறுவார்களா? இல்லை. சுவரோடு சாத்திய

ஏணி எந்த நேரத்திலும் கீழே விழலாம். எனவே "ஏணிக்கு அடியிலே நிற்காதே" என்பது நல்ல கட்டளை. பின்னால் கூறியதிலிருந்து இந்தக் கட்டளை "தன்னிலேயே" நல்லது என்பது தெரியவருகிறது. 'சிவன் கோபிப்பான்' என்ற காரணத்தோடு இணைத்து நோக்கின் அது சமயம் பற்றியதுபோலத் தோன்றுகிறது. இவ்வாறே "வாசற்படியில் படுக்காதே, நீ வளரமாட்டாய்" என்பர். பின்னதை விட்டு முன்னதை மட்டும் நோக்கின், அது ஒரு நல்ல கட்டளை என்பது புலப்படும். வாசற்படி வழியே பலரும் போவர், வருவர், தூசி இருக்கும், இதெல்லாம் உடம்பிற்கு நல்லதல்ல, எனவே இந்தக் கட்டளை "தன்னிலேயே" நல்லது. அனல் "காரணத்தோடு சேர்த்து நோக்கின்" முட்டாள்தனமானது. இவ்வாறே பற்பலவற்றிலும் அந்தணர்கள் கொடுத்த காரணங்களை ஒதுக்கிவிட்டு, "தன்னிலேயே" நல்லவற்றைத் தத்துவபோதகர் ஏற்றுக் கொண்டிருந்தார். அக்வவீவா அடிகள் இத்தகைய வேறுபாடுகள் எளிதில் தவறுக்கு இழுத்துச்செல்லலாம் எனக் கருதுகிறார்.

"மூடச் சடங்குகள்" எனக் குறிக்கப்பட்டதும் தெளிவாக இல்லை. அந்தணர்கள் குளிப்பதற்கு முன்னும் உணவருந்துவதற்கு முன்னும் பற்பல சடங்குகளுடன் மந்திரங்களை ஓதி வந்தனர். அவர்கள் கத்தோலிக்கரானதும் அத்தகைய சடங்குகள், மந்திரங்கள் எல்லாவற்றையும் நிறுத்திவிடலாமா? முன்பு எல்லாச் செயல்கட்குமுன் தாங்கள் கும்பிட்ட இறைவனை எண்ணிவந்தனர் அந்தணர்கள். அவர்கள் உண்மைக் கடவுளைக் கும்பிடத் தொடங்கிய பின்னர் முன்போல் அவரை அடிக்கடி நினைப்பதைத் தடுப்பது முறையா? எனவே தத்துவ போதகரும் அதிமேற்றிராணியார் அதி வந். ராஸ் ஆண்டகையும் சேர்ந்து புதிய சடங்குகளையும் செபங்களையும் தயாரித்தனர். அவைகளின்படி குளிப்பதற்குமுன் உடம்பில் நான்கு சிலுவைகள் வரைந்து, தண்ணீரில் மூன்று சிலுவைகள் வரைந்து சில செபங்கள் கூறிக் குளிக்கலாயினர்.

ஐயரவர்கள் முடிவெட்டிக்கொள்ளும்போது மற்றோர் அந்தணர் அவரது "ஞான உபதேசம்" என்ற புத்தகத்தை வாசிக்கக் கேட்டுக்கொண்டிருப்பாராம். இவைகளைப் பற்றித் தெளிவாக அறியாததன் காரணமோ என்னமோ, இவைகளைத் "தயவு செய்து விட்டுவிடவும்" எனக் கட்டளையிடுகிறார் அக்வவீவா அடிகள்.

இக்கடிதம் உரோமையில் தயாராயிருக்கும்பொழுது, மதுரையில் பற்பல மாற்றங்கள் உண்டாயின. அவற்றில் முக்கியமானது: மலபார் மாகாணத்தின் பெரிய சுவாமியாராக இருந்த லெயேர்சியோ அடிகள் மாற்றப்பட்டு அவருக்குப்பதில் பியரோ ஃப்ரான்ஸிஸ்கோ அடிகள் பெரிய சுவாமியாரானது. இது தத்துவபோதகரை மிகவும் பாதித்தது.

பியரோ ஃப்ரான்ஸிஸ்கோ ஒரு போர்த்துக்கீசியர்; 47 வயதினர்; 22 ஆண்டுகளாகச் சேசு சபையில் வாழ்ந்திருந்தவர்; இவ்வாண்டுகளிற் பெரும் பகுதியைக் கோவாவிலேயே செலவிட்டார்; கோவாக் கல்லூரியின் தலைவராக இருந்தார்; 1607-இல் உரோமைக்கு இந்தியாவின் சார்பில் சென்று திரும்பியவர். 1611-ஆம் ஆண்டு திசம்பர்த் திங்கள் 21-ஆம் நாள் பிமென்டோ சுவாமிகளால் மலபார் மாகாணத்தின் பெரிய சுவாமியாரானார். லெயேர்சியோ அடிகளால் ஆதரிக்கப்பட்ட "இந்திய மயமாக்கும் முறை"களுக்கு மாற்று மருந்து கொடுப்பதற்கெனவே இவரை மேற்பார்வையாளர் இப்பதவிக்கு உயர்த்தினர்.

மதுரையிலிருந்து வெகுதூரத்தில், போர்த்துக்கீசியர் மலிந்த ஒரு நகரில் தம் வாழ்வின் பெரும் பகுதியைக் கழித்த ஒருவர் "மதுரை முறை"களுக்கு ஒரு மாற்று மருந்தாக நியமிக்கப்பட்டிருக்கும்பொழுது, அவைகளை அவர் ஆதரிப்பார் என எண்ணுவதற்கே இடமில்லை. பதவிக்கு வந்ததும் பூணூலை விட மறுக்கும் எவருக்கும் ஞானஸ்நானம் அளிக்கக்கூடாது எனக் கட்டளை விடுத்தார்.

ஆனால் அவர் அக்கட்டளையுடன் நிற்கவில்லை. மதுரை முறைகளின் தோற்றத்தின் காரணத்தை ஆராய்ந்தார். அம்முறைகளையும் ஆராய்ந்தார். அம்முறைகளிற் குறை காணுவதற்கு முன்னர் அவருக்கு ஒரு வழி தோன்றிற்று.

மதுரையில் பல ஆண்டுகளாகக் கொன்சாலோ சுவாமிகள் வெற்றியின்றி வேலை செய்ததாலேயே தத்துவ போதகர் புதிய முறைகளைப் பயன்படுத்தினர். பழைய முறைகளே வெற்றி அளிக்கும் எனக் காட்டின்... புதியவைகட்கு வேலையில்லை. எனவே கொன்சாலோ சுவாமிகளையும் புச்சேரியோ சுவாமிகளையும் ஊக்குவித்து பழைய முறைகளைப் புதுப்பித்து ஒரு புதுமுறை வகுத்தார்.

அன்றுமுதல் கொன்சாலோ சுவாமிகளும் புச்சேரியோ சுவாமிகளும் "சாக பட்சினி"—புலாலை விடுத்தவர்களாக மாறினர். அன்றொருநாள் தத்துவபோதகரை எள்ளி நகைத்த கொன்சாலோ அடிகளும் புலாலைவிடுக்க ஒத்துக் கொண்டார். இப்புதிய முறையில் "சமூக சேவை" ஒரு முக்கிய பகுதி. நாளும் சிறையில் அடைபட்டிருந்த குற்றவாளிகளைக் கண்டு அவர்கட்கு ஆறுதல் கூறினர்; அவர்கட்கு வைகை ஆற்றிலிருந்து நல்ல தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தனர். நகர வாசலில் மண்டியிருந்த ஏழைகளுக்கு உணவும் பொருளும் அளித்தனர். ஞாயிற்றுக் கிழமைகளில் நல்ல சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. இவர்களது "சமூக சேவை" பற்றிச் செவியுற்ற நாயக்க மன்னனே அவர்களைப் புகழ்ந்துகொண்டதாக வரலாறு அறிவிக்கின்றது.

அன்று சமூக சேவை மதுரையில் ஓரளவு பயனளித்தது. அன்று ஓரளவுதான். எனினும் அது என்றும் பயனளிக்கவல்லது. ஏனெனில் அதில் நாம் கிறீஸ்துவின் அன்பை, ஒளிவிட்டு மிளிரும் சேசுவின் திரு இருதயத்தை மற்றவருக்குக் காண்பிக்கிறோம். கிறீஸ்துதான் முதலில் சமூக சேவை செய்ய ஆரம்பித்தார் எனக் கூறின், அது

மிகையாகாது. யூதேயா எங்கணும் நோயுற்றோர்க்குச் சுக மளித்தார்; துன்பமுற்றோர்க்கு அதனைத் தவிர்த்து இன்ப மளித்தார்; எங்கணும் நன்மை செய்துகொண்டே போனார். செயலிலும் சொல்லிலும் இதனைக் காட்டினார். "உங்களுக்குள் ஒருவர் ஒருவரை சிநேகிக்கிறீர்" என்பதனாலேயே உலகம் நான் தேவகுமாரன் என்பதை அறியட்டும். கிறீஸ்து தம் அன்பினால் உலகை மீட்டார். கிறீஸ்துவின் அன்பைக் காட்டும் சமூக சேவை, உண்மையில் அது சமூக சேவையாயிருக்குமாகில், உலகை வெல்லத்தான் வேண்டும்.

ஆனால் மதுரையில் ஓரளவுதான் பயனளித்தது. ஏன்? ஏனெனில் அதை அளித்தவரது தவறு, அவர்களது சேவையை ஒரு சாராரே ஏற்றனர். மற்றவர் அவர்களைப் பரங்கியென எண்ணி ஏற்றனரல்லர். முதலில் அத்தகைய பெயரை மாற்றி இந்து பண்பாட்டிற்கும் தமிழ்ப் பண்பாட்டிற்கும் சேசுவின் திரு இருதயம் இடமளிக்கும் எனக் கூறித் தெளிவிப்பதும் கிறீஸ்துவின் அன்பைக் காட்டும். தம்மை அனைவரும் ஏற்கும் நிலையில் அவர்கள் இருந்திருந்தால் எல்லோரும் பெற்றுப் பயன் அடைந்திருப்பர். எனினும் கொன்சாலோ சுவாமிகளும் அவருடைய துணைவரும் இவ்வேலையை அடுத்தடுத்த ஆண்டுகளிற் தொடர்ந்து செய்யவில்லை.

1612-ஆம் ஆண்டில் மதுரைக்கு வந்த பெரிய சுவாமியார் முதன்முதலில் தத்துவபோதகரையும் அவருடைய முறைகளையும் நேரே கண்ணுற்றார். அவர் அக்வவீவா அடிகளுக்கு எழுதிய கடிதத்தில்:

அவர்களுடைய தூய்மையான வாழ்வையும் அதன் கடின தபசையும் வெகுவாகப் புகழ்கிறார். "அவர்களைக் கண்ட எவரும் பக்தி உணர்ச்சியைப் பெறாதிருக்க முடியாது" என்பது அவருடைய கருத்து. எனினும் அந்தணர்க்கு ஓர் அந்தணராக அவர்கள் மாறியதை அவரால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. இறுதியில் "அவர்கள் அந்தணரது

வேடமேற்றுத் திரிவதால் அவர்கள் சமயத்தைச் சிறிதும் அச்சமின்றி யாருக்கும் போதிக்கலாம்" என்று அவர் எழுதுவதில் அடி, திட்டுகளுக்குப் பயந்துதான் இவ்வாறு வாழ்கிறார் எனக் குறை கூறுகிறாரோ, அந்த முறையால் விளைந்த ஒரே பயன் இதுவே என்று கூறுகிறாரோ தெரிய வில்லை.

*1612* திசம்பரில் அக்வவீவா அடிகளின் கடிதங் கிட்டிற்று. அவரது கடிதத்தைப் படிக்கு முன்னர், பியரோ ஃபிரான்ஸிஸ்கோ சுவாமிகள் மதுரை முறைகளை அக்வவீவா அடிகள் நிச்சயம் நிறுத்திவிடுவார் என எண்ணியிருந்தார். அதனைப் படிக்கும்போதும் அதே நோக்கோடு படித்தாரோ என்னவோ, மதுரை முறைகளை நிறுத்துவதற்கு அக்வவீவா சுவாமிகளின் அனுமதி கிடைத்ததாக எண்ணினார். எனவே பின்வரும் பொருளடங்கிய ஒரு கடிதத்தை வரைந்து அத் துடன் அக்வவீவா அடிகளின் கடிதத்தையும் சேர்த்து அனுப்பினார்.

அவர் மதுரைக் குருக்கள் உடனே தெருத் தெருவா கச் சென்று மன்னிப்பு கேட்பர் என்று எண்ணினார் போலும்! "அவ்வாறு ஒன்றும் செய்யாதீர்கள், என்னுடைய இக்கடிதத்தில் குறிக்கப்படாத எதையும் செய்வதற்கு முன்னர் எனக்கு எழுதவும்".

இரண்டாவதாக, அடிகள் மதுரையைப்பற்றி நன்கு அறிந்துள்ளார், எனவே புதுக் கடிதங்களை வரைய நினை யாது, அவருடைய கட்டளைகளை நிறைவேற்றுவதே மேல், எனவே இவைகளைப் பற்றி இன்னும் விவாதங்கள் தேவை யில்லை.

மூன்றாவதாக, 'ஏமாற்றம்' ஒன்றும் கூடாது. அந்த 'ஏமாற்ற' த்தால் நம் தந்தை (அக்வவீவா அடிகள்) நீங்கள் இந்தியர்முன் பரங்கியராக இருப்பதை ஏற்க மறுப்ப தையே குறிக்கிறார். கொன்சாலோ சுவாமிகளுடன் ஒரு வேறுபாடும் இருக்கக்கூடாது; உம்முடைய கிறீஸ்துவர் கள் அவரது கோயிலுக்குக் கூச்சமின்றிச் செல்லவேண்டும்;

அவருடைய கிறீஸ்துவர்களும் உம்முடைய கோயிலுக்குக் கூச்சமின்றி வர அனுமதிக்க வேண்டும். நீங்கள் புதிதாக ஏற்றுள்ள சடங்குகள் மற்றக் கிறீஸ்தவர்கட்கு இடறலளிக்குமாதலால் அவைகளே விட்டு நீங்கள் இதுவரை ஏற்காதிருந்த சிலவற்றை மீண்டும் புகுத்திவிட வேண்டும்.

நான்காவதாக, தங்களுடைய உடையை நம் தந்தை அனுமதிப்பதுபோலக்கடிதத்தில்தோன்றுகிறது. எனினும் அவர் அதனேப் பற்றி நன்கு அறிந்திருந்தால் அவ்வாறு செய்திருக்கமாட்டார் என்பது எனது துணிபு. எனவே அதனேயும் விட்டுவிடவும். எனவே மதுரை முறை அனேத்தையும் மாற்றவேண்டும்.

ஐந்தாவதாக, நம் தந்தை முழுதும் சமூக காரியங்களாக உள்ளவற்றை அனுமதிக்கிருர். எனினும் நான் நீங்கள் கூறும் அனேத்தையும் சமூக செயல்களாகக் கருதுவதற்கில்லே.

ஆருவதாக, நம் தந்தை "அப்போஸ்தலர்களின் அடிகளேப் பின்பற்றுமாறு கூறுகிருர்". அப்போஸ்தலர்கள் சாதி, நாடு இன்ன பிறவற்றைப் பாராது கிறீஸ்துநாதரிடம் பெற்ற உண்மைகளேப் போதித்தனர். அவ்வண்ணமே நாமும் செய்யக்கடவோம்.

நான் மேலே கூறியவற்றை நீங்கள் ஏற்றுக்கொள்ளாவிடில் புனித கீழ்ப்படிதலினல் நீங்கள் யாருக்கும் ஞானஸ்நானம் கொடுக்கக்கூடாதெனக் கட்டளேயிடுகிறேன்.

உங்கள்

பியரோ ஃபிரான்ஸிஸ்கோ, சே. ச.

கடிதங்கண்ட தத்துவபோதகரின் உள்ளத்தின் நிலேயை நாம் உய்த்துணரலாம். அக்வவீவா அடிகளின் கடிதத்தை அப்படியே ஏற்றுக்கொண்டார். அதற்குக் கீழ்ப்படியத் தயார். எனினும் "பெரிய சுவாமிமார்கட்குக் கீழ்ப்படியவில்லே" இது போன்ற குற்றச்சாட்டுகளேப்



படித்த தத்துவபோதகரின் உள்ளம் குமுறியிருக்கத்தான் வேண்டும். உள்ளக் குமுறலைச் சிந்தனைக் குமுறல் தாக்கிற்று. குற்றமற்ற சேசுநாதர் பூங்காவனத்தில் தன்னைச் சுற்றிப் பாவக்கடல் புரண்டுவருவதைக் காணவில்லையா? குற்றமற்ற செம்மலைப் பாவி என்றும், கீழ்ப்படிந்த தேவனைப் புரட்சிக்காரன் என்றும் கூறவில்லையா? முழந்தாளிட்டு அடிகள் கைகளை விரித்து, "ஆண்டவரே, இந்தப் பாத்திரம் என்னைவிட்டு அகன்று போகக்கடவது" என்று வேண்டிய சப்தம் இறைவனை நோக்கிப் பறந்தது.

பின்னர், பெரிய சுவாமியாரின் கடிதத்தைப் படித்தனர் தத்துவபோதகரும் விக்கோ அடிகளும். அவர் அக்வவீவா அடிகளின் கருத்தைப் புரிந்துகொண்டாரா? மதுரை முறைகளை அனைத்தும் மாற்றக் கட்டளையிடுகிறார் பெரிய சுவாமியார். "மதுரை முறைகளை அடியோடு மாற்ற ஒருபோதும் உடன்படேன்" என்கிறார் அக்வவீவா அடிகள். இதை வாசித்தாரா பெரிய சுவாமியார்? பெரிய சுவாமியாருக்குக் கீழ்ப்படிந்தால் அக்வவீவா அடிகளுடைய கட்டளையை மீறுவர்.

எனவே பெரிய சுவாமியாரைக் கண்டு பேசிய பின்னரே என்ன செய்வது என்று சிந்திக்கலாம். அவருக்குக் கடிதம் எழுதி ஒன்றும் ஆகாது என எண்ணிக் கொச்சின் வர அனுமதி கேட்டார். பியரோ சுவாமிகள் இது முறையன்று எனக் கருதினர். எனினும் ஆலோசகரை இது பற்றிக் கேட்டார். அவர்களும் முறையன்று என்றே கூறினர். இருவரது முடிவையும் கூறி, அடிகள் வரவேண்டுமென்று இன்னும் எண்ணினால் வரலாம் என அனுமதித்தார். ஆனால், ஒன்று, வந்தால் அந்தச் சந்நியாசி உடையில் வரக்கூடாது.

கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லையே என்று சிந்தித்தார் தத்துவபோதகர். ஆனால்....அக்வவீவா அடிகள் அந்த உடைக்கு அனுமதி அளித்துவிட்டார். இரண்டாவதாக, ஐந்தாண்டுகளாக அணிந்த அதைத் திடீரெனக்

கைவிட்டால் பலரும் இடறல் படுவர். எனவே அவர் அதே உடையில் சென்றாலும் அது உண்மையிலேயே குற்ற மாகாது என எண்ணிச் சென்றார்.

சென்றவருக்கு வரவேற்பு கிடைக்கவில்லை. அதே உடையில் வந்துள்ளார் என்பதைக் கேள்வியுற்ற பெரிய சுவாமியார் அவர் முகத்தில் விழிக்க முதலாய் விரும்ப வில்லை. திரும்பிவிடலாமெனக் கட்டளையிட்டார்.

தம்மவரிடத்தில் வந்தார்; ஆனால் தம்மவர்களோ அவரை ஏற்கவில்லை. கிராங்கனூர் மேற்றிராணியாரிடம் திரும்பினார். அங்கே அவருக்கு அமோக வரவேற்பு. நடந்த கதையைக் கூறினார். இருவரும் கொச்சி சென்றனர்.

இம்முறை பெரிய சுவாமியார் அவர்களைத் திரும்பிப் போகுமாறு கூறவில்லை. ஆனால் அவர்களைக் கண்டு பேச மறுத்துவிட்டார். மூன்று நாட்கள் பொறுத்தார் அதிமேற்றிராணியார். கொச்சியிலிருந்து வந்தவருக்குக் கிடைத்த வரவேற்பை அவர் பொறுத்தும் பயனில்லை. திரும்பிவந்து சூடான ஒரு கடிதம் எழுதினார் அக்வவீவா அடிகளுக்கு. "மேற்றிராணியாருடன் சேர்ந்து வேலை செய்யாத சுவாமிமார்கள் எதற்கு" என்பதே அதன் சாரம்.

பெரிய சுவாமியார், தனியே விடப்பட்ட தத்துவ போதகரை ஒருவாறு அனுமதித்தார். முடிவு? அவர் போதகரின் வார்த்தைகட்குச் செவிசாய்க்கவில்லை. அவர் அக்வவீவா அடிகளின் கடிதத்தைப் பற்றி நினைப்பதைத் தன்னிடம் எழுதித்தர சொன்னார். தன்னுடையதையும் ஐயரவர்களுடையதையும் உரோமைக்கு அனுப்பிவைப் பார். எது சரி என அக்வவீவா அடிகளே முடிவு கூறட்டும்.

தத்துவபோதகர் பின்வரும் கருத்துக்களடங்கிய கடிதம் வரைந்தார்:

1. நான் இந்தக் கடிதம் எழுதுவதற்குக் காரணம் பெரிய சுவாமியார் கட்டளேயே.

2. "ஏமாற்றம்" என்பதுபற்றி நம் தந்தை கூறுவதைக் கவனிப்பின் அவர் எனது சமயமும், கொன்சாலோ அடிகளின் சமயமும் ஒன்றென வெளிப்படுத்தவேண்டுமென விழைகிருர். ஏனெனில் முதலில் கிறீஸ்துவின் சமயத்தை அரசரும் ஆண்டியும் பின்பற்றலாம்; உண்மையில் பழுதற்ற வாழ்வு வாழ்வாரே உயர்ந்தோர்; அஃதல்லாதவர் என்பதை வெளிப்படுத்த வேண்டும் என்பதே அவருடைய வார்த்தைகள். இதைச் செய்ய நான் உடனே தயார்.

3. போர்த்துக்கீசியருடன் தொடர்புகொள்வது பற்றி மறுப்பே இல்லே. ஆனல் என்னுடைய இல்லம் வரும் குருக்கள் நான் அணியும் உடையணிந்தே வரவேண்டும். இல்லாவிட்டால் என்னுடைய கிறீஸ்துவர்கள் இடறலுறுவார்கள். இடறலேத் தவிர்க்கவேண்டியது நம் தந்தையின் கட்டளே. குருக்களல்லாத போர்த்துக்கீசியர் எம் கோவிலுக்கு வரின் அவர்கள் முதலிடம் தேடக்கூடாது. அவர்களுக்குக் கொடுக்கப்படும் இடத்தை ஏற்றுக் கொள்ளட்டும். ஏனெனில் இங்கு அந்தணரே யாவரிலும் உயர்ந்தவராகக் கருதப்படுகின்றனர். என்னுடைய அந்தணக் கிறீஸ்துவர்கள் கொன்சாலோ சுவாமிகளின் கோவிலுக்குப்போக அனுமதிப்பேன். ஆனல் அங்கேயும் சாதி முறைப்படி இடம் வகுக்கப்படவேண்டும் – இதுவே நம் தந்தையின் கட்டளே.

4. பூணூல் போன்றவற்றை நம் தந்தை அனுமதிக்கவில்லே. கண்டிக்கவும் இல்லே. அவர் "தன்னிலேயே, அதற்குக் கொடுக்கப்பட்ட காரணத்தைக் கருதிலுல்" "சடங்கின் மூலம்" போன்றவைகளேப் பயன்படுத்தி விவாதிப்பதில் தவறுவது எளிது என்றுமட்டும் கூறுகிருர். அதனே விளக்கி எழுதுவது என் வேலேயன்று. நானும் துணியேன். ஆனல் ஒன்றுமட்டும் நான் கூறமுடியும். ஏற்கனவே

கிறீஸ்துவரானவர்களிடம் நான் பூணூலேக் கழற்றுமாறு கூறினும் அவர்கள் அதற்கு உடன்படமாட்டார்கள். ஏனெனில் அவர்கட்கு அவர்களுடைய அதிமேற்றிராணி யாருடைய அனுமதி உண்டென்று அறிவர். நான் இப் பொழுது அது தவறு என்று கூறின், அதிமேற்றிராணியார் தவறிவிட்டார் என்று கூறுவதற்குச் சமமாகும். எனவே அவ்வாறு கூறுவது இடறலளிக்கும். ஆனல் நான் சேசு சபையைச் சார்ந்தவனுனதால் அதிமேற்றிராணியாரின் உத்தரவையும் பாராது பூணூலேக் கழற்ற இசையாத யாருக்கும் ஞானஸ்நானம் இனிமேல் அளிக்கமாட்டேன்".

தத்துவபோதகர் மற்ற எல்லாவற்றையும் செயலில் நிறைவேற்றுவார். அக்வவீவா அடிகள் உடனே சந்நியாசி உடையையே கழற்றிப் போட்டுவிட்டுத் திரும்புக என்ருலும் தான் கீழ்ப்படியத் தயாரென்றும் எழுதினர்.

ஆனல் ஞானஸ்நானம் கொடுக்கத் தானிட்டிருந்த தடையுத்தரவை நீக்க மறுத்துவிட்டார் பெரிய சுவாமி யார். கடிதங்கள் சென்று திரும்ப இரண்டாண்டுகளாவது ஆகும். அதுவரையிலும் பல ஆன்மாக்களும் திருச்சபை யின் கதவைத் தட்டிக்கொண்டிருப்பர். "கேளுங்கள் கொடுக்கப்படும், தட்டுங்கள் திறக்கப்படும்" என்று திருவுளம்பற்றிய சேசுவின் அன்பை அறியாமை தாழிடக் கூடும் என்பதற்கு நோபிலி அடிகளின் வாழ்வின் இந்த அதிகாரம் ஓர் அழியாத அத்தாட்சி.

## 12

## பாப்பரசரின் ஆணை

மதுரையில் தேர் விழா சிறப்பாக நடைபெற்றது. அந்தணரும் மற்ருரும் மதுரையாரும், வேற்றூராரும், கும்பல் கும்பலாகத் திரண்டனர். சொக்கநாதர் கோயில் அல்லோலகல்லோலமாகி இருந்தது. பிரசாதத்திற்காகக்

காத்திருந்தனர் எண்ணற்ற மக்கள். இரவில் தேர் புறப்பட்டது. ஓங்கி உயர்ந்து அழகாக அலங்கரிக்கப்பட்ட தேர் நகர, நகர, மதுரை நகரே அதனுடன் நகர்ந்தது. பட்டப் பகலென இரவை மாற்றி நின்றன விளக்கலங்காரங்கள். அங்கும் இங்கும் விற்போர் வாங்குவோரின் குரல்கள் இரைந்து கேட்டன. இந்தக் குரலுக்கிடையே தேர் இழுப்போரின் பாட்டொலியும் கேட்டது.

இதையெல்லாம் கேட்டுக்கொண்டுதான் அமர்ந்திருந்தனர் அந்த இரண்டு சந்நியாசிகள். ஒருவர் கடிதங்கள் எழுதிக்கொண்டிருந்தனர். மற்றொருவர் வடமொழியில் தேர்ச்சி பெற்றுக்கொண்டிருந்தார். வெளியில் நிலவிய இரைச்சலுக்கு அவர்களது குச்சில் நிலவிய அமைதி ஈடு செய்தது. ஆனால் அவர்களுடைய உள்ளங்கள் அப்பொழுது பேசத்தான் செய்தன. அவர்களின் சிந்தனைகள் ஒன்றே. சொக்கநாதனை உலகம் கண்டு கொண்டிருக்கும்பொழுது, தம்மால் தம் இறைவனைக் காட்டவும் அனுமதியில்லையே என்பதே.

அமைதியைக் குலைத்தவண்ணம் விக்கோ அடிகள்: அலெக்ஸிஸ் வந்து போனானே, என்ன நடந்தது? அவன் கோபமாயிருந்ததுபோல் இருந்ததே சுவாமி.

'ஆம்' என்றவண்ணம் நடந்ததைக் கூறினார் ஐயரவர்கள். நடந்தது இதுதான்: அலெக்ஸிஸ்தான் 1607-ஆம் ஆண்டில் இரண்டாவது கிறீஸ்துவரான நாயக்க சாதியினன். அவனுக்குப் பொன்னாசை அதிகம். 1609-ஆம் ஆண்டில் அவன் வீட்டிலிருந்த சில நகைகளை யாரோ திருடிவிட்டனர். இதனைப் பொறுக்க முடியாது ஒரு சோதிடக்காரனைக் கூப்பிட்டுக் கேட்டான். எனவே தத்துவபோதகர் அவனைக் கண்டித்து கோயிலுக்குச் சில மாதங்களாக வரலாகாது என்று கட்டளையிட்டார். ஆனால் தவற்றை உணர்ந்த அலெக்ஸிஸ் அடிகளின் காலில் விழுந்து கெஞ்சினான். அவன் துறவற வார்த்தைப்பாடுகளும் எடுக்க முடிவு செய்தான். பின்னர் 1611-இல்

அவனது ஆணவத்தால் பதவியைவிட்டு நீக்கப்பட்டுக் களவொன்றில் அகப்பட்டுக் கொச்சிக்கு அனுப்பப்பட்டான். அங்கே அவனது நடத்தை மிகவும் மெச்சத்தக்கதாயில்லை. எனினும் தத்துவபோதகரைப்பற்றி ஒன்றும் குறை கூறவேயில்லை. கடற்கரை ஊர்களிற் சுற்றித்திரிந்துவிட்டு 1615-இல் மதுரை வந்தான். வந்து ஐயரவர்களிடம் வேலை கேட்டான். ஆனால் அவர் அவனை வேலைக்கேற்க மறுத்து அவனுடைய வார்த்தைப்பாடுகளிலிருந்து அவனை விடுவித்துவிட்டார். இதையெல்லாம் பொறுக்கமுடியவில்லை; புழுங்கினான்.

இந்த நிலையில் அவன் நண்பன் போனிஃபாசைச் சந்தித்தான். இவனும் முன்பு ஒரு நல்ல கிறீஸ்துவன், வடமொழி தெரிந்த அந்தணன். இவனை அடிகள் 1611-இல் கொச்சிக்கு இறுதி வார்த்தைப்பாடுகள் கொடுக்கச் சென்றிருக்கும்பொழுது கூட்டிச் சென்றார். அங்கே அடிகளுக்குப் பற்பல பரிசுகள் அளிக்கப்பட்டன. அவைகளைக் கண்ட ஏழை அந்தணனது பேராசைத் தீ பற்றி எரியலாயிற்று. அடிகளிடம் அவைகளில் ஒரு பங்கு அளிக்குமாறு கேட்கவும் அவன் வாய் கூசவில்லை. அத்துடன் மட்டுமல்லாது கிராங்கனூர் மேற்றிராணியாரையும் பணத்திற்காக அரிக்கலானான். இவைகளைக் கண்ட ஐயரவர்கள் அவனது நடத்தையைக் கண்டித்தார். அதனை ஏற்குமளவு அவன் தாழ்ச்சியுடையவனல்லன்.

மதுரை வந்ததும் திருமணம் செய்துகொள்ளும்பொழுது சில சேரக்கூடாத இந்துச் சடங்குகளில் பங்கு கொண்டான். இதனை அறிந்த ஐயரவர்கள் அவனை அழைத்தார்; உட்காரச்சொன்னார்; அவனது செயலைக் கண்டித்து திருச்சபைக்கு வெளியே தள்ளினார். போனிஃபாசின் அகங்காரம் கொழுந்துவிட்டெரிந்தது. அவன் புச்சேரியோ சுவாமிகளிடம் சென்றான்.

இவரிடம் திட்டுவாங்கினால் அவரிடம் ஏன் செல்ல வேண்டும்? ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்

டாட்டம். முதலில் புச்சேரியோ சுவாமிகள் தத்துவ போதகரின் நண்பராகவே இருந்தார். இருப்பினும் ஆண்டு கள் செல்லச்செல்ல அவர் ஐயரவர்களை வெறுக்கலானர். இதற்கு மூன்று காரணங்கள் உள. ஒன்று, கொன்சாலோ அடிகள் வெறுப்பூட்டியிருக்கலாம்; மற்றது, அடிகள் அவரை வேண்டாமென்று தள்ளியது. அவரது தமிழும், அவர் பரவர்களிடையே கொண்டிருந்த புகழும் அவருக்கு எதிராய் நின்றன. அன்று அவர் நல்லெண்ணம் கொண் டிருப்பினும், பின்னர் தான் 'இத்தாலியர்' அல்லர் என்ற காரணத்தினலேயே தள்ளிவிட்டனர் என்று கருதினர் போலும். அப்பொழுதிருந்த பெரிய சுவாமியார் லெயேர் சியோ அடிகள் ஓர் இத்தாலியர், தத்துவபோதகர் ஓர் இத்தாலியர். எனவே அவரது வருத்தம் வெறுப்பாக மாறலாயிற்று. மூன்ருவது: பொருமை; கடந்த பதினெட்டு ஆண்டுகளாகத் திருவாங்கூரில் வெற்றிகரமாக வேலை செய்து வந்த அவர் மதுரையில் தோல்வியேயுற்ருர். ஆனல் தத்துவபோதகர் வெற்றிபெற்றிருந்தார் என்பது அவர் 1610-இல் நடத்திய விசாரணை வெளிப்படுத்திற்று. எனவே பொருமை அவரை வெறுக்கத் தூண்டிற்று.

இந்த வெறுப்பிற்கு மற்றுமொன்று துணிவு அளித் தது. உரோமைப் பெரிய சுவாமியார் சீக்கிரத்தில் தத்துவ போதகரை மதுரையிலிருந்து மாற்றிவிடுவார் என்று எதிர்பார்த்தார். எனவே இத்தகைய வதந்தியை மதுரை யில் பரப்பவும் துணிந்தார். இவர் ஐயரவர்களின் மேல் கொண்ட வெறுப்பு வெளியாகவே, போனிஃபாஸ் அவரி டம் வந்தான். வந்தவனுக்கு நல்ல வரவேற்பளித்தார். முன்பே அடிகளுக்கு எதிராக எழுப்பியிருந்த கதைகளை யும் அவனிடம் கூறினர். அவனும் அவற்றிற்குச் சாட்சி யாக நிற்க ஒப்புக்கொண்டான். அவர் ஐயரவர்களின் ஒரு புத்தகத்திற்கு மாற்றுரை எழுதிக்கொண்டிருந்தார். அதி லும் வடமொழி மேற்கோள்களைத் தாக்கி எழுத ஒத்துக் கொண்டான் நயவஞ்சக அந்தணன்: இவற்றிற்குப் பதிலாக "முப்பது வெள்ளிக் காசுகள் தரவும் ஒத்துக் கொண்டார் புச்சேரியோ."

எனவே அலெக்ஸிஸை மேற்கூறிய நிலையிற்கண்ட போனிஃபாஸ் அவனைப் புச்சேரியோ சுவாமிகளிடம் அழைத்துச்சென்றான். அங்கே மற்றொருவனைக் கண்டனர். அவன்தான் மார்ட்டினோ என்ற போர்த்துக்கீசியச் சிறுவன். எவ்வாறோ திரும்பிவந்து ஐயரவர்களின் நன்னடத்தைக்கு விரோதமாக எண்ணற்ற கதைகள் கட்டி விட்டான். அம்முறை அவைகளனைத்தையும் முந்தினவை சேர்த்து எழுதிக்கொண்டே போனார் புச்சேரியோ அடிகள். பாவம்! பொறுமை அவரைக் குருடனாக்கிவிட்டது. ஆனால் அன்றைய மதுரை அரசன் ஒரு குருடனல்லன். மார்ட்டினோ மதுரையில் பற்பல தவறுகள் இழைத்தான். அவன் நடத்தையை அரசினர் கவனித்து அவனை ஊரை விட்டு வெளியேற்றினர். கொச்சி வந்து பியரோ ஃப்ரான்-ஸிஸ்கோ சுவாமிகளிடம் கதைகளைக் கூறினான்.

இந்தக் கதைகளையெல்லாம் முன்பே பியரோ ஃப்ரான்ஸிஸ்கோ அடிகள் கேட்டிருந்தார். கேட்டு புச்சேரியோ அடிகளிடம் அவைகளையெல்லாம் எழுதி அனுப்புமாறு கூறிவிட்டுச் சென்றார். ஆனால் மார்ட்டினோ புதிது புதிதாகக் கதை சொல்லுவதைக் கண்ட பெரிய சுவாமியார் அவன் தன்னையே ஏமாற்றுகிறதைக் கண்டு அவனை மாலூரக்காத் தீவுகட்கு அனுப்பிவைத்தார்.

பியரோ ஃப்ரான்ஸிஸ்கோ அடிகளால் ஊக்குவிக்கப் பட்டு, பற்பல கதைகள் கைவரப்பெற்ற புச்சேரியோ அடிகள் அலெக்ஸிஸை அன்புடன் வரவேற்றார். வந்தவனிடம் "தத்துவபோதகரை விரைவில் மதுரையைவிட்டு நீக்கி விடுவார்கள், தள்ளிப்போனால் ஆறுமாதத்திற்குள் இது நடக்கும், நீதான் மடத்தின் பெரிய ஐயர் அல்லது மடாதிபதி ஆவாய்" என்றார். அது அவனிடத்திலிருந்த பதவி மோகத்தைத் தூண்டிவிட்டது. அவரை இன்னும் விரைவாக வெளியேற்றும் வண்ணம் அவரது நடத்தையைத் தூற்றிக் கதைகளைக் கட்டினான். ஐந்தாறு கிறீஸ்தவர்கள் மூலம் ஐயரவர்களின் வீட்டில் நடப்பதையெல்லாம் கேட்டு,

பண ஆசையாலும் பதவிப்பித்தாலும் அவற்றிலிருந்து கதைகட்டும் தொழிலில் ஈடுபட்டான்.

ஒரு பெரும் புத்தகமே உருவாகிவிட்டது. புச்சேரியோ அடிகள் அவற்றைத் தொகுத்துக் கொச்சியில் பெரிய சுவாமியாருக்கு அனுப்பிவைத்தார். அதற்கிடையில் அந்த மறுப்பு நூல் உருவாகிக்கொண்டிருந்தது. போனிஃபாஸுடன் அவனுடைய நண்பன் கருணைகரனும் சேர்ந்து இருவரும் பூணூல் ஒரு சமயக்குறியே என்று சாதிக்க முயன்றிருந்தனர். எல்லோரும் விரைவில் அலெக்ஸிஸ் மடாதிபதியாகி அவன்கீழ் வேலை பார்க்கும் பொற் காலத்தை எதிர் நோக்கியிருந்தனர். கொச்சியிலிருந்து கடைசியில் ஒரு கடிதம் வந்தது.

எல்லோரும் ஆவலுடன் திறந்தனர். "1615-ஆம் ஆண்டு ஆகஸ்டு 15-ஆம் நாள் பியரோ ஃப்ரான்ஸிஸ்கோ இறந்தார்" என்பதே செய்தி. யாரும் எதிர்பாராத செய்தி. அது அங்கிருந்த யாவரையும் ஒருமுறை குலுக்கியது. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்கும். திகிலுற்ற அலெக்ஸிஸ் ஓடி வந்து தத்துவ போதகரின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டான். மற்றவரும் அவ்வாறே செய்தனர். சிலர் அவர் முகத்தில் விழிக்கக்கூடக் கூசினர். விக்கோ அடிகளின் கால்களில் விழுந்து மன்னிப்புப் பெற்றுத்தருமாறு வேண்டினர். தத்துவபோதகர் அவர்களை மன்னித்தார்.

ஆனல் போனிஃபாஸும் கருணைகரனும் இன்னும் ஈராண்டுகள் இவ்வாறே வாழ்ந்தனர். அவர்கட்குப் புத்திவர புச்சேரியோ அடிகள் தடையாயிருந்தார். 1617-ஆம் ஆண்டில் அவரும் இறந்தார். "இறக்குந் தருவாயில் தத்துவ போதகர் ஊரில் இல்லை. கொன்சாலோ சுவாமிக்குச் சுகமில்லை, எனவே விக்கோ அடிகள் இறுதித் தேவதிரவிய அனுமானங்கள் அளிக்கச் சென்ருர். அவரது உதவியை ஏற்க மறுத்துவிட்டார் புச்சேரியோ அடிகள். அவர் இறந்ததும் அந்த இருவரும் குற்றமுணர்ந்து மன்னிப்

பும் பெற வந்தனர். அவர்களிருவரையும் மேற்றிராணி யார் முன்னர் சத்தியம் செய்து நடந்த உண்மையைக்கூறி மன்னிப்புக் கேட்குமாறு அனுப்பி வைத்தார் விக்கோ அடிகள்.

* * *

பியரோ ஃப்ரான்ஸிஸ்கோ இறந்த நாள் முதல் நம் ஆண்டவர் தம் ஊழியருக்காகப் போராடுவதைக் காண் கிறோம். அவரது மரணத்திற்குப் பின்னர் கஸ்பார் ஃபெர்னண்டெஸ் சுவாமிகள் பதவி ஏற்றார். அவரும் மதுரையை விரும்பியவர் அல்லர். அவர் அந்தக் குற்றச் சாட்டுகளையெல்லாம் ஒழுங்காக எழுதுமாறு கட்டளையிட் டார்; அவருடைய துணைவரான எம்மானுவேல் பராடாஸ் சுவாமிகள் அதனைச் செய்து வந்தார். அவைகளை எழுதி முடித்த பின்னர், அவரது வெறுப்பு ஆறாத வெறுப்பாக மாறியது.

இங்கிலையில் ஐரோப்பாவிலிருந்து கப்பல்கள் இந் தியா வந்து சேர்ந்தன. அக்வவீவா அடிகள் என்ன எழுதி யிருக்கிறார் என்பதை அறிய யாவரும் ஆவல் கொண்டிருந் தனர். பெரிய சுவாமியார் விருப்பு வெறுப்புக்களைப் பொருட்படுத்தாத நல்லவர். தத்துவபோதகரைக் கொச்சிக்கு அழைத்தார்.

கொச்சிக்குச் செல்லவிருந்த அடிகள் நேர் வழியில் செல்லவில்லை. சுற்று வழியாக ஊர் ஊராக தன் காவி யுடையில் கமண்டலமும் கையுமாக கிறீஸ்துவைப் போதித்துக்கொண்டே சென்றார். அவரது ஆன்மதாகந் தான் என்னே! அவரது கடிதங்களை வாசிக்குந்தோறும் அவரது ஆன்ம தாகம் சுடர்விட்டு ஒளிர்வதைக் காண் கிறோம்.

கொச்சிக்கு வந்த அடிகள் அங்குக் கண்டது: அவ ரைப்பற்றி மற்றவர் கூறிய கதைகள் வெளியாகிவிட்டன. கொச்சியிலிருந்த சேசு சபையினர் அவரை வெறுக்கலாயி னர். அவரைக் கண்டு தூர ஒதுங்கினர். அவரை ஒரு

தொழுநோய்க்காரனென நடத்தினர். ஆம், கதைகளில் உள்ளவை யாவும் உண்மையானவையாயிருப்பின் அவர்களது நடத்தை சரியே. அவர்கள் உண்மையென்றே கருதினர். ஆனால் இவைகளெல்லாம் நடந்ததை தத்துவபோதகர் அறிவாரா? அறிந்திருந்தார். கொச்சி வந்ததற்கு அதுவும் ஒரு காரணம். தன்னைமட்டும் குற்றங்கள் பாதித்தமையின் ஒரு வார்த்தை முதலாய்த் தனக்காகப் பரிந்து பேசவில்லை.

ஆனால் அடிகளும் ஒரு மனிதரே. அந்தக் கதைகள் என்னவென்பதைக் கண்ட அவரது உள்ளத்தில் வாள் தைத்தது. யாரால் கட்டப்பட்டவை என்பதை எண்ணுங்கால், எந்த இந்தியருக்காகத் தான் ஒரு "வேதத் துரோகி"யின் வடிவேற்று இத்தனை இன்னல்கள் உழந்தாரோ; இன்னும் உழைக்கத் தயாராய் இருந்தாரோ அதே இந்தியராலே, அதே கிறீஸ்துவராலே! ஆம், அதே அலெக்ஸிஸாலே, அதே போனிஃபாஸினாலே! யார் அவைகளை நம்பி ஊக்குவித்தனர்? தன்னுடைய சொந்தச் சகோதரர்! கண்ணீர் கண்களை நிரப்பியது, எனினும் பெரிய சுவாமிமார்களிடம் தனக்காகப் பரிந்து ஒரு சொல்லும் கூறார்.

எல்லாமறியும் இறைவன் அவரை நண்பர்களின்றிக் கைவிடவில்லை. அவரது வருகையறிந்த லெயேர்சியோ அடிகள் அவருடனேயே இருந்தார். அந்தோனியோ ஸொயைரோ சுவாமிகள் முன்பு கொச்சிக் கல்லூரியின் தலைவர். அவரும் அடிகளைச் சுற்றி நின்றார். அதி மேற்றிராணியாரே விரைந்தோடி வந்தார். கஸ்பாரி சுவாமிகள், மேற்றிராணியாரின் காரியதரிசி, காக்ளியாரி சுவாமிகள், கிராங்கனூர் அதிமேற்றிராணியாரான சங். ஸ்டீஃபன் டி பிரிட்டோ முதலிய அனைவரும் அவரை முன்புபோன்றே அன்புடன் நடத்தினர். அவர்கள் அந்த "வழிகாட்டி"யை முன்புபோன்றே மதித்தனர்.

அவரை முன்பு விலக்கி ஒதுக்கிய மற்றச் சேசு சபையினர் முட்டாள்கள் அல்லர். அவர்கள் சிறிது சிந்தித்தனர். காவி உடையணிந்த அவரது மெலிந்த உடல் அவருக்

காகப் பேசிற்று. குழி விழுந்த அவருடைய கண்களும், முகத்தோடு ஒட்டியிருந்த அவருடைய கன்னங்களும், சுருக்குவிழுந்த நெற்றியும் அவரது கடின தபசைப் பறை யறைந்தன. தன்னை வீணே குற்றஞ்சாட்டிய குருக்களைப் பற்றி நல்லதல்லாத ஒன்றையும் கூருத செந்நா அவரது புனிதத் தன்மையைப் பற்றிப் பேசியது. இந்தத் தபசு, உடை, அறிவு இவையெல்லாம் ஏன்? ஓர் உயர்ந்த குறிக் கோளிற்காக. தூற்றும் மற்றவரது அறிவையும் அடிகளின் அறிவையும் ஒத்துப்பார்த்தனர். ஆண்டாண்டுதோறும் இம்மண்ணில் வாழ்ந்தும் அதன் மொழியினை எவ்வளவு கேட்டனர். இவரைத் தூற்றுபவர்களை இவர் இவ்வாறு தூற்றியிருப்பின் அவர்கள் இவர்போல நடந்துகொள்வார் களா என்றும் தம்மையே கேட்டுக்கொண்டனர். தம் மையே இவ்வாறு மற்ருெருவர் தூற்றின்? அவரது பொறு மையைக் கண்டு வியந்தனர். ‘இன்ன செய்தாரை ஒறுத் தல் அவர் நாண நன்னயம் செய்துவிடல்’ என்பதை அவரது செயலில் கண்டனர். ஒருவேளை ஓர் அர்ச்சிய சிஷ்டவரைத்தான் தூற்றிக்கொண்டிருக்கிருேமோ என்றும் எண்ணினர்.

லெயேர்சியோ அடிகள் சேசு சபையினரின் பெயரில் உரோமாபுரியிலிருந்த பெரிய சுவாமியாருக்கு வரைந்த கடி தத்தில் “ஊக்குவிக்க ஒருவர் இருந்தால்—மனிதர்—முக்கியமாகச் சமயத்தைப் புதிதாகத் தழுவினவர்—எவ் வளவு தூரம் செல்ல முடியும் என்பதைக் கண்டு திகைப் புறுகிருேம். ஆள்வோர்முன் பசப்புவதில் அத்தகையவர் (புதுக்கிறீஸ்துவர்) திறனும் படைத்தவராக உள்ளனர். கஸ்பாரி சுவாமிகளும் தத்துவபோதகரும் இவற்றைப் பற்றி விரித்து எழுதுவர். பாவம் இந்தச் சுவாமியார் என்ன பாடுபடுகிருர். நீங்கள் தயவுசெய்து அவருக்கு ஆறுதல் அளியுங்கள்........”

தத்துவபோதகர் பெரிய சுவாமியாருக்கு எழுத மறுத்துவிட்டார். ஆனல் அக்வவீவா அடிகள் ஆறுதல் கூற மறுத்தாரா? மேற்கூறிய கடிதத்தை அக்வவீவா

அடிகள் வாசிக்கவேயில்லை. அவர் 1615-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 31-ஆம் நாள் இறைவன் திருப்பதம் எய்திவிட்டார். சேசு சபையின் ஐந்தாம் பெரிய சுவாமியாராக, சேசு சபைக்கும் திருச்சபைக்கும் பல்லாண்டுகளாகச் சேவைசெய்து புனிதமான முறையில் விண்ணுலகு எய்தினர். உண்மையில் அக்வவீவா அடிகள் தத்துவபோதகரின் மேற்கொண்ட நம்பிக்கை அசையாத உறுதிகொண்டது. இறுதியாக அவர் எழுதிய கடிதம் இதோ பெரிய சுவாமியாரிடம் சேர்ந்துவிட்டது.

அந்தக் கடிதத்தில் மதுரை முறைகளை ஆதரித்து ஊக்குவிக்குமாறு எழுதியிருந்தார். ஆனால் ஒன்று, பூணூல், குடுமி இவைகளைப் பற்றி இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை. எனவே முடிவு செய்யப்படும் வரையிலும் பூணூலைவிட மறுப்போருக்கு ஞானஸ்நானம் கொடுக்க வேண்டாம் என்றும் எழுதியிருந்தார். மற்றத் தடையுத்தரவுகள் யாவற்றையும் நீக்குமாறு கட்டளையிட்டார்.

இந்தக் கடிதம் அவருடைய சபையினர் யாவரையும் அவருடன் ஒன்றுசேர்த்தது. மதுரை வேதபோதகரை எல்லாரும் வணக்கத்துடன் போற்றினர், அங்கே படித்துக் கொண்டிருந்த சின்ன சுவாமிமார்கள் பலரும் மதுரையில் காவியுடை உடுத்து, பூணூலை விடுத்து, வடமொழி படித்து, ஐயரவர்கள் முறையைக் கடைபிடித்து சமயத்திற்குப் பலரையும் கொண்டுசேர்க்கத் துடியாத் துடிக்கலாயினர். மலைபோல் வந்த துன்பங்கள் பகலவன் முன் பனிபோல மறைந்தன.

* * *

ஆயினும் எல்லாம் மறையவில்லை. புதியதொன்று கிளம்பிற்று. கோவை அதிமேற்றிராணியாராக தோம் ஃப்ரெல் கிறிஸ்தாவோ தெசா 1610-இல் கோவை அதிமேற்றிராணியாரானர். அவர் இந்தியா முழுமைக்கும் ஒரே நீதிநூல் வகுத்தார். அவருடைய அந்தச் சட்டங்களை ஏற்றுக்கொள்ளாத எவரும் ஞானஸ்நானம் பெற

லாகாது என்றும் முடிவுரை கூறினர். கோவை அதிமேற்றிராணியாரே அன்று இந்தியாவில் பாப்பானவரின் பிரதிநிதியின் நிலையில் இருந்தார். எனவே அவரது புதிய சட்டம் மதுரையையும் பாதித்தது.

கிராங்கனூர் அதிமேற்றிராணியார் பண்பாடு பற்றியவைகளை எடுத்துக்கூறிக் கோவை மேற்றிராணியாருக்கு எழுதினர். கடிதங்கண்ட அவர் சீறினரே தவிர சிந்திக்கவில்லை. இவைகளெல்லாம் 'வடிகட்டிய முட்டாள்தனம்' எனக் கூறிவிட்டார் மற்றொரு மேற்றிராணியாரிடத்திலேயே.

எதிர்பாராத பதில் வரப்பெற்ற அதி வந். ராஸ் அவர்கள் மிகவும் மனத்துயருற்ருர். 1606 முதல் ஒன்பதாண்டுகளாக இப்பகுதியில் வாழ்ந்து, மக்களையும் அவர்களுடைய மொழிகளையும் அவர்களுடைய சமூகப் பண்பாட்டையும் மதங்களையும் நன்கு அறிந்த தன் கூற்றுக்களை, நேற்று இந்தியா வந்து கோவையில் அமர்ந்து ஆண்டு கொண்டிருக்கும் புதிய மேற்றிராணியார் அவமதித்ததை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. அதி வந். தெசா மேற்றிராணியாருக்கு முன்னல் 1595-ஆம் ஆண்டு முதல் 1609 வரை கோவைத் திருச்சபையை ஆண்டு நடாத்திய அதி வந். அலெக்ஸிஸ் தெ மெனஸெஸ் அவர்களோ தனது கொள்கையை ஏற்று ஆதரித்து அனுமதியும் அளித்துள்ளார். எனவே இதற்கு ஒரு முடிவு காண விரும்பி அன்று உரோமையில் சேசுக்கிறீஸ்துநாதருக்குப் பதில் திருச்சபையின் தலைவராக மும்முடி தரித்து வீற்றிருந்த பரிசுத்த பாப்பரசர் ஐந்தாம் சின்னப்பருக்கு ஒரு கடிதம் வரைந்தார்.

பரிசுத்த தந்தை ஐந்தாம் சின்னப்பரோ கடிதம் கண்டு புன்முறுவல் பூத்தார். அன்று உரோமையிலிருந்த வேத சாஸ்திரிகளிடம் அவற்றை ஆராயுமாறு கூறினர். அவர்கள் தத்துவபோதகரின்மேல் சாட்டப்பட்ட குறைகளெல்லாம் ஒன்ருேடு ஒன்று சிக்கிக் கிடப்பதைக் கண்டனர். முதலில் அவைகளையெல்லாம் பிரிக்கவேண்டும். 'அவர்

ஓர் இத்தாலியர் நாம் போர்த்துக்கீசியர்' என்ற வேறு பாட்டின் காரணத்தால் எழுந்த குற்றங்களையெல்லாம் ஒரு மூலையில் ஒதுக்கினர். சமூகம் பற்றியவை அவருடைய உடை, உணவு பற்றியவை—இவைகளையும் மற்றொரு மூலையில் ஒதுக்கினர். மூன்றாவது, கட்டடங்களைப் பற்றியது; அது அவருடைய கோயிலினால் விளைந்தது; அதையும் மற்றொரு மூலையில் ஒதுக்கினர். எஞ்சியிருந்தன சிலவே; பூணூல், குடுமி, சந்தனம் போன்றவை. இவைகளைப் பற்றி அவர்கள் முடிவு செய்யவேண்டியது ஒன்றே. அவை சமூகம் பற்றியதா? சமயம் பற்றியதா?

மற்ற மூன்றிலும் அவர்கள் குற்றங்காணவில்லை. 'உரோமை நாட்டுச் சந்நியாசி' என்றால் என்ன? 'பரங்கிப்பாத்ரே' என்றால் என்ன? இரண்டும் அவர்கள் கண்களில் குற்றமாகப் படவில்லை. சமூகத்திற்கு ஏற்ப நடந்துகொள்ளுதலை அவர்கள் போற்றினரே தவிர கண்டிக்கவில்லை. இந்தக் கொள்கைக்கு உரோமாபுரியே சான்று சொல்லி நின்றது. அதன் பண்டைய அரண்மனைகள் கி. மு. முதல் இரண்டாம் நூற்றாண்டுகளிலேயே உருவானவை. இலத்தீன் மக்களின் பண்பாட்டைக் கிறீஸ்துவச் சமயம் ஏற்று அப்பண்பாட்டையே கிறீஸ்துவமாக்கிய வரலாற்றை அப் பழைய கட்டடங்கள் நினைவூட்டி நின்றன. திருச்சபையின் திருநாட்களும் அவ்வாறே. புறச்சமயத்தினர் திருநாட்கள் கொண்டாடும்பொழுது நாம் மட்டும் ஏன் கொண்டாடக்கூடாது என்று கருதினமையின் எழுந்தவையே. கட்டடக் கலையும் சமூகம் பற்றிய கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டெழுந்ததே.

எனவே அவர்கள் தீர்க்கவேண்டியது ஒரே ஐயம். இதனை அறிந்த பல இத்தாலிய நண்பர்கள் 1614-இலேயே ஐயரவர்கட்கும், விக்கோ அடிகட்கும் தெரிவித்தனர். இருவரும் தேவையானமட்டும் அவர்கட்கு உண்மையை விளக்கி எழுதினர். 1615-இல் உரோமன் கல்லூரியில் வேத சாத்திர ஆசிரியரான சேசு சபையைச் சார்ந்த நிக்கோலாஸ் கோதினோ சுவாமிகள் "ராபர்ட் அடிகளும்

அவருடைய துணைவர் அந்தோனி விக்கோ அடிகளும் மதுரை அந்தணரைக் கிறீஸ்துவின் அடிசேர்க்க வேண்டிக் கைப்பற்றியுள்ள முறையை அனுமதிப்பது தேவையா?" என்ற தலைப்பில் அந்தக் கேள்விக்கு விடையளித்து ஒரு புத்தகம் எழுதினர். உரோமை நகர் கற்றறிந்தோர் முன்னர் தம் மாணவர்களை அதனைப்பற்றி விவாதிக்கவும் செய்தார். அதில் அடிகளின் முறையனைத்தையும் ஏற்றுக் கொண்டனர். எனவே மக்களிடையே நிலவிய பழிச் சொல் புகழ்ச்சொல்லாக மாறியது. அதனுடனே நாம் பெயரறியாத மற்றொருவர் "இந்தியாவில், ஒளியில் இன்னும் வராதவரை ஒளிபெறச் செய்வதில் ஏற்பட்ட சில ஐயங்களைப்பற்றிய தெளிவுரை" என்ற சிறுநூல் ஒன்றை வெளியிட்டார். கோவை, கிராங்கனூர் அதிமேற்றிராணி மார்கள் கூடிப்பேசுவது நல்லதென அதில் கூறியிருந்தார்.

இவைகளை ஆராய்ந்த பாப்பரசர் முதலில் அந்த இரு மேற்றிராணிமார்கட்கும் ஒரு சிறு கடிதம் வரைந்தார். அதில் கூடியவரை கிறீஸ்துவைத் தழுவுவதை எளிதாக்க வேண்டும்; இதற்காக இரு மேற்றிராணிமாரும் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்றும் எழுதினர்.

ஆம், நம் நாட்டில் பல மனைவிகள் கொள்ளும் முறை உண்டென்றும் அந்தப் பழக்கத்தைவிட்டு உண்மையைத் தழுவுவது மக்கட்கு மிகவும் கடினமாக உள்ளது என்பதையும் அவரறிவார். அதுபற்றி ஒன்றும் செய்ய முடியாது. ஆனல் ஏற்கனவே கடினமாயுள்ள ஒன்றை ஏன் இன்னும் சாதி சமூகம்பற்றிப் புது ஒழுங்குகள் விதித்து இன்னும் கடினமாக்க வேண்டும்? எனவே பாப்பரசரின் 4—1—1616-இல் எழுதிய "Cum sicut fraternitas" எனத் தொடங்கும் கடிதம்.

இரு மேற்றிராணிமாரும் எதுபற்றிப் பேசவேண்டும் என்றும் எழுதினர். அவர்கள் கூடி ஆலோசிப்பது எப்படிப் பூணூல் முதலியவைகளை அடியோடு சமயம் பற்றியது என்று தள்ளலாம் என்று சிந்திப்பதற்கன்று. அவைகளிற் கலந்துள்ள மூடக்கொள்கைகளைக் களைந்துவிட்டு

அவைகளை ஏற்றுக்கொள்ள ஒரு வழியுண்டா என்ற கேள்விக்கு விடைகண்டறியவே.

தனது முடிவை ஏற்றுக்கொள்ளுமாறு கிராங்கனூர் மேற்றிராணியாருக்கு உடனே பாப்பரசர் கட்டளையிடுவார் என்று மனக்கோட்டைக் கட்டியிருந்த கோவை மேற்றிராணியார் பாப்பரசரது கடிதம் கண்டு ஏமாற்றமடைந்தார். தனது கொள்கையை விடுத்து இப்பொழுது அந்த இஸ்பானிய மேற்றிராணியாருடன் (ராஸ் அவர்கள்) பணிவுடன் அமர்ந்து பேசி ஒரு முடிவுக்கு வரவேண்டும். கோவை மேற்றிராணியார் சிந்தித்து இதனைத் தவிர்க்க வழி ஒன்று கண்டார்.

திருச்சபையின் விசாரகர்களும் கோவையிலேயே இருந்தனர். அவர்கட்குத் தலைவரும் கோவை மேற்றிராணியாரே. எனவே அவர்களை அழைத்து நடந்ததைக் கூறினர். இந்தக் கேள்விகளையெல்லாம் நூருண்டுகட்கு முன்பே கோவைத் திருச்சங்கத்தின் மூலம் விசாரகர் குழு ஆராய்ந்து அவை மதச்சார்புடையன; எனவே ஏற்க முடியாதெனக் கூறிவிட்டது. இவ்வாறு விசாரகர் குழுவால் முடிவுசெய்யப்பட்ட ஒன்றைப் பாப்பரசர் மேற்றிராணிமாரை ஆராயச் சொல்கிருர். ஆனல் விசாரகர் குழுவால் முடிவுசெய்யப்பட்டதை எவ்வாறு இவர்கள் முடிவுசெய்யலாம்? விசாரகர் குழு செய்த முடிவைப் பாப்பரசர் முன்னரே அறிந்திருப்பின் இந்தக் கடிதம் எழுதியிருப்பாரா? என்ற கருத்துக்களடங்கிய கடிதமொன்றைப் போர்த்துகலிலிருந்த தலைமை விசாரகருக்கு எழுதச் சொல்லிக் கட்டளையிட்டார். பாப்பரசரின் கடிதம் 1618-இல் தான் வந்து சேர்ந்தது. இன்னும் எத்தனை மாதங்கள் ஆகுமோ இவ்விரு மேற்றிராணிமாரும் கூடுவதற்கு!

பாப்பரசரின் கடிதங்கண்ட கிராங்கனூர் மேற்றிராணியார் உடனே பேசி முடிவுசெய்ய விரும்பினர். பாவம், தத்துவபோதகர் 1613 முதல் ஐந்தாண்டுகளாகப் பூனூல்

அணிந்தவர்கட்கு ஞானஸ்நானம் அளிக்காமலே இருந்தார். பலரும் காத்திருந்தனர். புதுக்கிறீஸ்துவர்களின் தொகை அதிகரிக்காமலே இருந்தது.

1618-ஆம் ஆண்டு இறுதியில் மற்ரெரு கடிதம் பாப் பரசரிடமிருந்து வந்து சேர்ந்தது. அது அவ்வாண்டு பெப்ரவரித் திங்கள் 18-ஆம் நாளில் எழுதப்பெற்றது. அதில் கோவை அதிமேற்றிராணியாரையும் விசாரகர்களை யும் உடனே ஒரு சங்கம் கூட்டி, அதில் கிராங்கனூர் அதி மேற்றிராணியாரின் கருத்துக்களையும் தத்துவபோதகரின் கருத்துக்களையும் மற்றச் சேசு சபையினரின் கருத்துக்களை யும் ஆராய்ந்து சங்கத்தில் நடந்தவற்றையெல்லாம் பாப் பரசருக்கு அனுப்புமாறு எழுதியிருந்தார்.

இதில் அடிகளும் மற்றச் சேசு சபையினரும் சங்கத் தில் இருக்கவேண்டுமெனக் குறித்திருந்தது கவனிக்கற் பாலது. மற்ரென்று, சங்கத்தில் நடந்தவற்றைப் பாப்ப ரசருக்குத் தெரிவிக்கவேண்டும். அவரே முடிவு செய்வார். இதையெல்லாம் கண்ட தெசா மேற்றிராணியாரவர்கள் என்ன நினைத்தாரோ கடைசியாய் 1619-ஆம் ஆண்டு பெப்ரவரி 4-ஆம் நாள் கோவையில் சங்கம் கூடுமெனத் தெரிவித்தார்.

மேற்கூறிய பாப்பரசரின் கடிதத்துடன் மற்ரெரு கடிதமும் கிராங்கனூர் மேற்றிராணியாரை வந்தடைந்தது. அவருக்கு 1617-ஆம் ஆண்டு இறுதியிலேயே அவருடைய நண்பர்கள் மூலம் கப்பலில் வந்துகொண்டிருந்த பாப்பர சரின் முதற்கடிதம் பற்றித் தெரியவந்தது. ஆனல் அப் பொழுது வயதும் அவரது உடல்நிலையும் அவரைக் கோவா சென்று வர அனுமதிக்கும் என்று நினைக்கவில்லை. எனவே கோவா செல்லாமலே இருக்கத் தன்னை அனு மதிக்குமாறு கேட்டுப் பாப்பரசருக்கு எழுதியிருந்தார். ஆனல் அக்கடிதம் வந்தவுடன் அவரது உடல்நிலை ஓரளவு குணமாய் இருந்தது. ஆன்மாகட்காக உடலுழைப்பையும் பாராது சென்று திரும்பத் தயாராயிருந்தார். பாப்பர

சரோ அவரது உடல்நிலையைப் பற்றிக் கேட்டு வருந்தி மிகவும் அன்புடன் அவரது விண்ணப்பத்தை ஏற்று அவர் போகத் தேவையில்லை என்று எழுதியிருந்தார். எனினும் தத்துவபோதகரின் கருத்துக்களைக் கேட்டு தம் வாக்கைக் கடிதத்தில் எழுதி அனுப்புமாறு கட்டளையிட்டார். அதி வந். ராஸ் அவர்கள் ஆன்மதாகமும், ஐயரவர்களின் வேண்டுதல்களும் அவரைச் செல்லத் தூண்டின.

# 13

## கோவை மகாநாடு

1619-ஆம் ஆண்டில் பெப்ரவரித் திங்கள் 4-ஆம் நாள் கோவாவில் அந்த மகாநாடு கூடவிருந்தது. இந்த மகா நாட்டைப்பற்றிப் பலரும் பலவாருக எண்ணினர்; எண்ணு கின்றனர். அதி வந். தெசா மேற்றிராணியார், தத்துவ போதகரைக் கண்டித்து அவர்க்கு வேதத்துரோகி என்ற பட்டம் சூட்டுவதே அதன் நோக்கு எனக் கருதினர். அதி வந். ராஸ் அவர்கள் அதன் மூலமே மதுரைக் கிறீஸ்துவர் கட்கு அமைதியும், அடிகளுக்குச் சமாதானமும், இந்தியா வில் திருச்சபைக்கு ஒரு வழியும் பிறக்குமெனக் கருதினர். தத்துவபோதகரோ, பல்லாண்டுகளாகத் தான் பெற்ற பெயரும், தனது வேலைக்குத் தடையாகவிருந்த அறியாமை யும் அகன்று ஒரு நிம்மதி உண்டாகும் என எதிர்பார்த் தார். இவர்களுடைய நோக்குகளின்படியே அடிகளின் வரலாற்று ஆசிரியர்களிற் சிலர் இந்தியாவில் திருச்சபை யின் வருங்காலம் அதனல் தீர்மானிக்கப்பட வேண்டியிருந் தது என்றும் கூறத் துணிகின்றனர்.

எனினும் இந்தியாவில் திருச்சபையின் வருங் காலத்தை அவ்வாறு இனவெறியின் கையிலும் அறியாமை யின் இருளிலும் விட்டுவிடவில்லை திருச்சபையின் அதிபர் சேசு. திருச்சபையின் அதிபர்கட்குள்ளே பிளவு ஏற்பட்

டிருந்த அந்தச் சங்கத்தின் கைகளில், இந்தியாவின் வருங் காலத் திருச்சபையைக் கைவிட மனம் விழைந்தாரல்ல அந்தத் தெய்வம். பாப்பானவரின் கட்டளைப்படி, அந்தச் சங்கம் செய்யவேண்டியதெல்லாம் பூணூல், குடுமி போன் றவைகளின் சமயத் தொடர்பை எவ்வாறேனும் நீக்கி, அவைகளைப் புதுக் கிறீஸ்துவர்கட்கு அனுமதித்து திருச் சபையில் மற்றவர்கள் சேர்வதை எவ்வாறேனும் எளிதாக்க முடியுமா, இல்லையா என்று பார்ப்பதே. இதை அவர்கள் விவாதிக்கவேண்டுமே தவிர, ஒரு முடிவுக்கு வரக்கூடாது. இறுதித் தீர்ப்பைப் பரிசுத்த பாப்பு தம்மிடமே வைத்துக் கொண்டது குறிப்பிடத்தக்கது. எனவே, அதி வந். தெசா மேற்றிராணியாண்டவரவர்கள் கொண்ட கொள்கை பரி சுத்த பாப்பு விரும்பியதற்கு எதிர்மாருனது. கூட்டம் எவ்வாறு தொடங்கி எவ்வாறு முடிந்தது என்பதை அறிதல் மிக்க மகிழ்ச்சி அளிக்கிறது.

கூட்டம் ஆரம்பிக்கவிருக்கிறது. படாடோப உடை யில், தங்கச் சங்கிலிகள் மின்ன, பொன் பொறிக்கப்பட்ட மகுடந்தறித்து நடந்துவருகிருர் கோவா மேற்றிராணியார் தொம் கிறிஸ்தாவோ தெசா அவர்கள். இன்று காலையில் அவரைக் காணச் சென்றிருந்தார் தத்துவபோதகர்; மேற்றிராணியார் அடிகளை அன்புடன் வரவேற்கவில்லை. வந்தவர் தாமே எழுதிய சிலவற்றை இவரிடம் தந்தார்; அவற்றையும் ஏற்கவில்லை. ஆன்மதாகத்தின் வேடம் போர்த்துத் தம் வீடுவந்து அஞ்ஞானி என அழைத்து அவரைப் போகச் சொல்லிவிட்டார். இப்பொழுது தம் 'முடிவை'க் கூறிக் கூட்டத்தைக் கலக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் தம் இருக்கையில் அமர்கிருர்.

அவர்க்குச் சற்றுமுன்னர் சென்று தன்னிடத்தில் அமர்ந்தவர் அதிவந். ராஸ் அவர்கள். அவர்களைப்பற்றி நாம் அறிவோம். தளர்ந்த வயதில் செய்த நீண்ட பயணத் தால் களைப்புற்று அமர்ந்திருந்தார். அறியாமையின் இருளை அகற்றுவதற்காக அவர் ஒரு சிறிய புத்தகமொன்றை எழுதியிருந்தார். அதில் தத்துவபோதகரின் கொள்கை

களைப்பற்றிச் செவ்வனே விளக்கியிருந்தார். இப்பொழுது தாமே பேசிப் புத்தகத்தில் காணப்படாத உறுதியையும் உணர்ச்சிகளையும் ஊட்ட விரும்பி அமர்ந்திருந்தார்.

அதோ அமர்ந்திருப்பவர் நம் அடிகள். அவருடைய காவி உடையும், மரக் காலடிகளும், மொட்டையடித் திருந்த தலையும், வாடி வதங்கியிருந்த மேனியும், குழிந் திருந்த கண்களும் அவருடைய ஆன்மதாகத்தையும், தபசின் கடுமையையும் அறை கூவின. இன்று அவர் இரண்டு உத்தரவுகளை வேண்டியிருந்தார். ஒன்று பாப் பரசரின் கடிதத்தில் குறிக்கப்படாதவரை அனுமதிக்கக் கூடாது; மற்றொன்று இன்னும் சிலநாட்கட்குக் கூட்டத் தைத் தள்ளிப்போடவேண்டும். இந்த இரண்டும் அளிக்கப் படவில்லை. எனினும், இந்தப் போர் அவருடையதன்று, சேசுவினுடையது.

மற்றும் அங்கே இருந்தவர்களில் முக்கியமானவர்கள் விசாரகர்கள் இருவரும். அவர்களுள் முதல்வர் அடிகள் தந்த புத்தகத்தையும் மற்றச் செய்திகளையும் படித்தும் தன் மனதை மாற்ற முயலாது தம் மேற்றிராணியாரைத் தாங்கிப் பேசுவதென்றே முடிவுசெய்தார். மற்றவர் தொன் ஃபெர்னன்டோ தெல்மேய்டா. இவர் அவைகளை உண்மையை ஆராய்ந்து அறியும் ஆவலுடன் வாசித்துத் தன் மனசாட்சிக்கு விரோதமாகச் செல்லாது அடிகளையே சார்வதெனத் துணிந்தார்.

இவர்களைத் தவிர்த்து அங்கே ஐந்து சேசு சபைக் குருவானவர்கள் இருந்தனர். முதல் நால்வரும் முன்பு அடிகளுக்கு எதிராகத் தீர்ப்புக்கூறிய கோவை வேதசாத் திரிகள். இப்பொழுது அவர்கள் நால்வரும் அடிகள் தந்த வற்றைக் கூர்ந்து கற்றறிந்து, உண்மைக்காக நிற்பதென முடிவுகட்டினர். ஐந்தாமவர்தாம் பல்மேய்ரா சுவாமிகள். இவர் பெயர்பெற்ற வேதநிபுணரான சுவாமி பிரான்ஸிஸ் சுவாரெஸின் அன்புச் சீடர். தேர்ந்த சமயவல்லுநர். இந்த ஆண்டு மலபார் மாகாணத்தைப் பரிசோதிப்பதற்காக வந்துள்ளார். அவர் இதற்கு முன்னர், ஆண்டாண்டுகளாக

தத்துவபோதகரின் முறைகளை எதிர்த்துப் பேசியும் போதித்தும் வந்துள்ளார். கோவை அதிமேற்றிராணியாரிடம் "உங்கள் கால்களில் விழுந்து அந்தச் சந்நியாசியை மன்னிப்புக் கேட்கவைக்கிறேன் பாருங்கள்" என்றிருந்தார். எனினும் இவரும் அந்தப் புத்தகத்தையும் மற்றவற்றையும் வாசித்த பின்னர் தன் பழைய எண்ணங்களை விடுத்து, உண்மைக்காக நிற்கத் துணிவுபூண்டார்.

அதோ அந்த மூலையில் இருக்கும் சுவாமிமார்களும், துறவிகளும் கோவை மேற்றிராணியாரால் அழைக்கப்பட்டவர்கள். இவர்களில், இருவரைத்தவிர, மற்ற யாவரும் உள்நாட்டுப்புறத்தில் வாழ்ந்தே இராதவர்; ஓர் இந்து மன்னனின் மக்களாக என்றும் இருந்ததில்லை. எனவே சாதி முதலியவற்றைப் பற்றிய அறிவு ஏறக்குறைய பூஜ்யமே. அவர்கள் அதிமேற்றிராணியாருடன் சேர்ந்து பேசுவார்கள்.

கூட்டம் ஆரம்பித்தது. முதன்முதலில் நம் ஐயரவர்கள் மற்றச் சில வடமொழி அறிந்த அந்தணர்களும் இருப்பின் மிகவும் பயனளிக்கும் என்று கூறினர். இதைக் கேட்ட அதி வந். தெசா அவர்கள் சினந்தெழுந்து "அதெல்லாம் தேவையில்லை என்றும் அங்கே கூடியிருந்தவர்கள் மூலமே முடிவுக்கு வரவேண்டும்" என்றும் கூறினர். கூறினவர் அதோடு நிற்கவில்லை. "என்னைப் பொருத்தவளவில், பூணூலோ, குடுமியோ அனுமதிக்கப்படக்கூடாது. இவை இரண்டும் சமயம் பற்றியனவல்ல, சாதி பற்றியனவே என்று கூறுவது உண்மையாயிருப்பினும், எனது மேற்றிராசனத்தில் இது இடறல் விளைக்கும்" என்று முடித்தார். ஆனால் நல்ல வேளையாக இத்துடன் நிறுத்தாது அங்கிருந்த மற்றவர்களையும் தம் கருத்துக்களைத் தெரிவிக்குமாறு கேட்டார்.

முதலில் சேசு சபை சமய வல்லுநர் நால்வரும் தம் கருத்துக்களைத் தெரிவித்தனர். "நாங்கள் ராபர்ட் சுவாமிகளின் முறைகளை எதிர்த்துப் பல்லாண்டுகளாகக் கொண்

டிருக்கிற கொள்கைகள் தகர்ந்து வீழ்ந்துவிட்டன. அவை கள் அறியாமையை அடிப்படையாகக் கொண்டிருந்தன. இன்று நாங்கள் அம்முறைகள் பற்றி எழுதப்பெற்ற யாவற்றையும் கண்டோம். சிறப்பாக, அதி வந். ராஸ் அவர்களின் சிறு புத்தகத்தை வாசித்த பின்னர், எங்களது அறியாமையை விடுத்து அடிகளின் முறைகளில் ஒரு குற்றமுமில்லை என்பதை உணருகிறோம். பூணூலும் குடுமியும் சாதி பற்றியதே அன்றிச் சமயம் பற்றியவையல்ல என்பது எமது துணிபு. ஆகவே அவைகளை அப்புதுக் கிறீஸ்துவர்கட்கு அனுமதிப்பது நமது கடமை. அவ்வாறு அனுமதியாவிடில் அவர்கள் கிறீஸ்துவைச் சேர்வதை வீணே தடுக்கிறோம். எனவே அவர்களைக் கிறீஸ்துவிடம் செல்வதினின்று தடுக்கிறோம். இது சாவான பாவம். எனவே சாவான பாவங் கட்டிக்கொள்ள விரும்பாதிருப்பின் இவைகளை அனுமதிப்பது நமது கடமை.''

பின்னர் பல்மேய்ரா சுவாமிகள் மெதுவாக எழுந்தார். ''அதி வந். ஆண்டகைகளே, திருச்சபையின் விசாரகர்களே, அறிவிற் சிறந்து விளங்கும் சமயவல்லுநரே, மற்றும் ஈண்டமர்ந்திருக்கும் துறவிகளே, குருக்களே, கோயிம்புரா நகரின்கண் நான் நம் சமயத்தைக் கற்றுத்தந்த போதும், மேற்பார்வையாளராக நியமிக்கப்பட்டபோதும், குடுமியையும் பூணூலையும் அடியோடு வெறுத்தொதுக்கினேன். எனவே மேற்பார்வையாளர் பதவியில் மதுரை மிஷனை அடியோடு தொலைக்கவேண்டுமென்ற கருத்துடன் ஈண்டு வந்தேன். எனினும் அமைதியாக சுவாமி ராபர்ட்டின் காரணங்களைச் சீர்தூக்கிய பின்னர் என் எண்ணங்களைச் சீர்திருத்திவிட்டேன்; ஏன்? வெறுப்பு விருப்பாக மாறிவிட்டது எனக்கூறின் அது உண்மையே.

''இன்னும் பாப்பரசரின் கடிதத்தை ஆய்ந்து வாசிப்பின் நாமனைவரும் மக்களின் மதமாற்றத்தைக் கூடியவரையில் எளிதாக்க வேண்டும்; இது நமது கடமை. பாப்பரசரின் கடிதத்தை மறப்பினும், நாமனைவரும் கிறீஸ்துவர்கள் என்ற முறையில் இது நமது உடன்பிறந்த கடமை.

யூதர்கள் கல்லெறிந்து கொல்லத்தேடிய பாவிக்கும் 'போ, இனிமேல் பாவம் செய்யாதே' என்று கருணையுடன் மொழிந்த கிறிஸ்துவை நாம் பின்பற்றுவோமானல், நாமும் நம்மிடையே வாழும் இந்த மக்களுக்குக் கருணை காட்ட வேண்டும். எனவே இவைகளை வேண்டாம் என்று கூறுவதன் மூலம் நாம் இந்தக் கேள்விக்கு விடையளிக்கவில்லை. மாருக, கடமையை உதறித்தள்ள முயல்கிறோம். இது முறையானதன்று" என்று அமர்ந்தார்.

கோவைத் துறவிகளும், குருக்களும் அவர்களுடைய அதிமேற்றிராணியாரைச் சார்ந்தே பேசினர். சிலர் தங்களது அறியாமையை ஒத்துக்கொண்டாலும், கோவை மக்கட்குத் துர்மாதிரிகை அளிக்காமலிருக்க இவைகளை அனுமதிக்கலாகாது என்றனர். கோவையில் துர்மாதிரிகையாம்! மதுரையில் இவைகளை அனுமதிக்கக்கூடாதாம்!

தொன் ஃபெர்னண்டோ தொல்மேய்தாவின் முறை வந்தது: "இந்து அரசர்களின் அடியில் வாழும் மக்கள் இந்தச் சாதிக்குறிகளை வைத்திருத்தல் என்பது ஒரு தவிர்க்கமுடியாத தேவை. வாழ்விற்கு இன்றியமையாதது. எனவே நம்மால் முடிந்தவரையில் அவைகளைச் சமயத்தினின்றும் நீக்கி சாதிக்குறியாக அளிப்பதே முறை, கடமையுங்கூட. எனவே இதனை எதிர்த்து, இவைகளை அடியோடு ஒழிக்கக் கருதின், நாம் திருச்சபையின் கதவுகளை மீண்டும் இறுக்கித் தாழ்ப்பாள்களிடுகிறோமே அன்றி நாம் ஒன்றும் உண்மையில் சாதிப்பதில்லை."

இறுதியாக அதி வந். ராஸ் அவர்கள் பேசவேண்டும். இப்பொழுது ஏறக்குறைய பிற்பகல் மணி இரண்டு. அவரோ தள்ளாத கிழவர், தனது முடிவை மறுநாள் கூறுவதாகக் கூறினர். களைப்பு மேலீட்டால் அவரால் பேச முடியவில்லை. எனினும் கோவை மேற்றிராணியார் கூட்டத்தை நீடிக்க விரும்பவில்லை. "ஏன் இப்பொழுது நிறுத்த வேண்டும்? எதற்காக நாளைக்கும் கூடவேண்டும்?

இன்றே தீர்க்க முடியாத அளவு பெரிய காரியம் என்ன இருக்கிறது? என்னைப் பொருத்தளவில், என்னுடைய கருத்தைக் கூறிவிடுகிறேன். கோவை மக்கள் இடறலுறு வார்கள். ஒரு தனிமனிதனின் விபரீதக் கொள்கையால் என் மேற்றிராசனம் வீழ்ந்துபடுவதை நான் ஏன் பார்த்துக்கொண்டிருக்கவேண்டும்?'' என்று முடித்தார்.

இதற்கு விடையளிக்க எழுந்தார் ஐயரவர்கள்: "அதி வந். மேற்றிராணி ஆண்டகையே, இங்கு நாமனை வரும் கூடியிருப்பது ஒரு தனிமனிதனைப்பற்றியன்று. கிறீஸ்துவின் வேலையைப்பற்றி, அவர் ஆன்மாக்களில் குடிபுகுவதுபற்றி, மக்களது இரட்சணியம்பற்றி. இங்கு நாம் கூடியிருப்பது புதுக்கிறீஸ்துவர்கள் தம்மறையில் நின்று நிலைபெற்றிருக்கத் துணை செய்வதற்காக.''

கோவை அதிமேற்றிராணியார்: "இந்தியாவில் பாப்புவின் ஸ்தானாதிபதியாகிய நாம் கூறும் கூற்றை எதிர்த்துப் பேசுவதற்கு உமக்கு எவ்வளவு அகங்காரம்! எங்கேயோ எதனையோ எண்ணிக்கொண்டு எனக்கு எதிராகப் பேசுகிறீர்! வரலாறு கண்டறியாத ஒரு புது முறையைக் கொண்டு வருகிறாராம்: அது ஒரு முறையா? அது ஒருவரையேனும் உண்மைக் கிறீஸ்துவராக மாற்றும் என்று கனவிலும் கருதமுடியுமா? திருச்சபையின் முறை ஒரே முறை, அதுதான் சிலுவையின் முறை. சிலுவையின் வழியாலன்றி, நாம் கிறீஸ்துவை, இந்து சாதிக்குறிகளால் அவரது சமயத்தைப் போதிக்க இயலாது. ஒரு பூணூலை அணிந்து கொள்வதனாலன்று, நமது இரத்தத்தைச் சிந்துவதினாலேயே நமது கத்தோலிக்கத் திருமறையைப் போதிக்க வேண்டும். சிலுவையில் அறையுண்ட நாதரை மறைத்து ஒளிக்காது, அவரை ஒளியில் கொண்டு வந்து நிறுத்தவேண்டும்'' என்று கூறிவிட்டு வெளியேறிவிட்டார்.

அங்கிருந்த அனைவரும் மறுநாள் அதி வந். ராஸ் தங்களின் கருத்திற்குச் செவிசாய்க்க கோவை மேற்றி

ராணியார் வரமாட்டார் என்றே கருதினர். பலரும் பல வாறு முயன்றதன் பயனாய் இறுதியில் வர இசைந்தார்.

மறுநாள் கூடினர். அதி வந். ராஸ் அவர்கள் அறிவு ததும்பும் ஒரு சொற்பெருக்காற்றினர். அதில் கோவை அதிமேற்றிராணியாரது கொள்கைக்கு ஒரு மறுப்புரை வழங்கியிருந்தார். "கோவை மேற்றிராணியாரவர்கள் தமது மேற்றிராசனத்தில் இடறல்கள் விளையும் என்பதைக் காரணமாகக்கொண்டு மதுரை முறைகளை எதிர்க்கிருர். இதற்கு ஒரு விடையளிப்பது நமது பொறுப்பு. நடந்த யாவற்றையும் உரோமையில் நம் ஆண்டவருக்குப் பதில் வீற்றிருக்கும் பரிசுத்த தந்தை இத்தகையனவற்றை அனுமதித்துள்ளார் என்பதை அவர்கட்கு விளக்கிக்கூறின் எந்தக் கிறீஸ்துவரும் இடறல் உறமாட்டார் என்பது எமது துணிபு. ஏனெனில், பரிசுத்த தந்தைக்குமேல் திருச்சபைபற்றியவற்றில் அதிக அதிகாரம்கொண்ட, அறிவுபடைத்த, தவரு வரத்தால் உதவப்பெற்ற உத்தமன் வேறு யார்? எனவே அவரது அனுமதியின்படி நடைபெறும் எவற்றைப்பற்றியும் இடறல் உறுவது நல்ல கிறீஸ்துவர்கட்கு அழகன்று. அவ்வாறு இடறல் உறின் அவர்கள் நல்ல கிறீஸ்துவர்களல்லர். நம் ஆண்டவர் பாவிகளுடன் உணவுண்டதைக் கண்டு இடறலுற்றுர்கள் பரிசேயர்கள். அப்பரிசேயர்களைப் போன்றவர்களே இக் கிறீஸ்துவர்களும். இன்னும், இவர்கள் இடலுறுவார்கள் என்பது ஒரு தகுந்த காரணமா? ஏதோ சில நன்மைகள் மட்டும் தடையுறும் என்பதனுல் ஒருவேளை இவ்விடறல் களின் பொருட்டு ஒன்றை நிறுத்தலாம், ஆனுல் ஒரு நாட்டின் ஒரு குலத்தாரின் இரட்சணியத்தை இவ்விடறலின் பொருட்டு நிறுத்தலாம் என்பது அறிவிற்கொவ்வாத ஒன்று."

இதன்பின்னர் கோவைச் சமயவல்லுநரான ஆல் போர்த்தோ சுவாமிகள் எழுந்து மறுமுறையும் தத்துவ போதகரைத் தாங்கும் விதமாகக் கூறினுர். அடுத்து தத்துவ போதகரின் எதிர்ப்புக்கூட்டம் பேசத் துவங்கிற்று.

அவர்கள் அடிகளைத் தாக்கிப்பேசினர். "கிறீஸ்துவ உண்மையை இந்து மதத்துடன் கலந்துவிட்ட துரோகி" அவர்! "ஆண்டாண்டுதோறும் நிலவிவந்த கோவையின் பண்பாட்டைப் புண்படுத்திய கோழை'' அவர்! "சுவிசேஷத்தின் தூய்மையைச் சாதியென்னும் குப்பையால் பாழாக்கிய கயவன்'' அவர்! "புனிதமானதையும் புனிதமற்றதையும், கடவுள்பற்றியதையும், பற்றுதகையும், உயர்ந்ததையும் தாழ்ந்ததையும் சேர்த்து முடிபோட முனைந்த மூளையற்றவர்'' அவர்! அடிகள் பேசும்பொழுது பூணூலை அனுமதிக்காவிடில் ஓர் இந்துவும் கிறீஸ்துவனாகமாட்டான் என்று கூறியிருந்தார். அதைப் பயன்படுத்தி ஒருவர் "கிறீஸ்துவ சமயத்தின் உண்மையைப் போதிப்பதே நம்மைச் சார்ந்த கடமை. ஏற்றுக்கொண்டால் ஏற்றுக்கொள்ளட்டும், இல்லாவிட்டால் போகட்டும். அது நம்மைப் பொருத்ததன்று''.

அடிகள்: "அவ்வளவிற்கு யாருக்கு நல்லது? அவர் ஆன்மாவிற்கும் நாம்தான் கணக்குக் கொடுக்கவேண்டும். ஆம், நாம்மட்டும் தேவையில்லாத சிலவற்றில் விட்டுக்கொடுத்திருந்தால் அவர்கள் வாழ்வு அழிந்திராது எனின், நாம் போதித்தால் மட்டும் போதுமா? இதுவும் கடமையல்லவா?"

புனித பிரான்சீஸ்குத் துறவி ஒருவர் கேட்டார்: "நம் ஆண்டவர் உம்முடையதைப் போன்ற உடைகளையா அணிந்திருந்தார்?''

அடிகள்: இல்லை, உங்களுடையதைப் போன்றும் அணியவில்லை.

அத்துறவி அத்துடன் நிற்கவில்லை. "சிலுவையில் தொங்கும் கிறீஸ்துவிற்கும் ஒரு பூணூல் கொடுக்க வேண்டியதுதான் பாக்கி'' என்றார். மேற்றிராணியாரும்; "சேசு சபையைச் சார்ந்த ஒருவர் இந்துவாக மாறிவிட்டார்;

நாமும் அதைப் பார்த்துக்கொண்டு வாளாவிருக்க வேண்டுமாம்'' என்று கூறினர்.

அடிகள் எழுந்து நின்று, "என்னைமட்டும் தூற்றியது போதாதென்று சேசு சபையையும் தூற்ற ஆரம்பித்தமையின் ஏதோ சில கூறுகிறேன். என்னை எவ்வளவு வேண்டுமானலும் தூற்றுங்கள். எனினும் ஒன்று கூறுகிறேன். உரோமை மாநகரை விட்டு நான் வந்தது ஆன்மாக்கட்கு உதவிபுரிய வேண்டுமென்ற ஒரே கருத்தினுல். வந்தபின்னர் என் சமயத்தை நான் இழந்துவிடவில்லை. இந்தச் சங்கத்தில் உண்மைக்கு இடமில்லையாயின் உலகமெங்கும் அவ்வாறில்லை. பரிசுத்த பாப்பரசர் உண்மையை வெளிப்படுத்துவர் என எண்ணுகிறேன்'' என்று கூறினர்.

இறுதியாக ஓட்டு எடுக்கப்பட்டது. அங்கிருந்தவரின் எண்வர் மட்டுமே அடிகட்கு ஓட்டுப்போட்டனர். மற்ற ஒன்பதின்மர் கோவை மேற்றிராணியாருக்குப் போட்டனர். வெற்றிச் செருக்குடன் நடந்தார் கோவை மேற்றிராணியார்.

மறுநாள் கடிதங்கள் உரோமைக்கும் இஸ்பானியாவிற்கும் போர்த்துக்கலுக்கும் அனுப்பப்பட்டன. பப்பானவரின் முடிவை எதிர்பார்த்து நிற்கலாயினர் தோல்வியுற்ற உண்மையாளர்.

## 14

## பல்மேய்ரா சுவாமிகளும் எதிர்க்கிறர்

பரிசுத்த பாப்பானவருக்குக் கோவையில் நிகழ்ந்த யாவற்றையும் விளக்கிக் கடிதம் வரைந்தனர் சங்கத்தில் பங்குகொண்ட ஒவ்வொருவரும். தெசா மேற்றிராணியார் இஸ்பானிய அரசருக்கும் போர்த்துக்கீசிய தலைமை விசாரகருக்கும் எழுதியிருந்தார். மற்றவர்களும் கர்தினல்

பெல்லார்மின் போன்ற அநேக கர்தினல்மார்கட்கும் அநேக கடிதங்கள் வரைந்தனர். இவைகள் எல்லாம் நிகழ்ந்தது 1619-ஆம் ஆண்டு பெப்ரவரித் திங்களில். இத்தனை ஆண்டுகள் கழிந்தது போதாது என்று இன்னும் மூன்று ஆண்டுகள் கிறீஸ்துவை அடைய மதுரைக் கிறீஸ்துவர்களால் முடியாது. என்னே பாவம்!

இதனை எண்ண எண்ண, தத்துவபோதகரின் மனம் துயரில் வருந்தியது. இன வெறியும் அறியாமையும் மாந்தரை இவ்வளவுதூரம் இட்டுச் செல்லும் என அவர் நினைத்ததே இல்லை. பாவம்! இவைகளால் பாடுபடுவது, துயருறுவது, கோவையில் பேசியவர்களல்லர், மதுரைக் கிறீஸ்துவர்களே.

இங்கிலேயில் உரோமை நகரிலிருந்த அவருடைய உறவினர்களிடமிருந்து கடிதங்கள் வந்திருந்தன. அவைகளில் அந்த உறவினர்கள் அவரை மீண்டும் இத்தாலிய நாட்டிற்கு வந்துவிடுமாறு வேண்டியிருந்தனர். ஆம். இது இயற்கையே! அங்கே, இத்தாலிய நாட்டில், உறவினரது செல்வாக்குடன், பாப்பரசருக்கு அருகாமையில், பெரிய சுவாமியாருக்கு நேரடியில் துன்பமின்றி வேலை செய்வதற்கில்லாமல், எங்கோ ஒரு தூரதேசத்தில், ஏதோ ஒரு குலத்தினருக்காக ஏன் இந்தத் துன்பங்கள்? ஏன் இந்த வறுமை? ஏன் இந்தக் கேள்விகள்? ஏன் இந்தக் கெட்ட பெயர்? ஏன் இந்த வசைச் சொல்? ஏன் இந்த "வேதத் துரோகி" என்ற பட்டம்? இதையெல்லாம் தாங்க அவருடைய தாயாராலோ, அவருடைய தமக்கையாராலோ, உறவினராலோ முடியவில்லை. கர்தினல் ஸ்போர்சாவின் மருமகன், வந். ஸ்போர்சாவின் அண்ணன், ராபர்ட் தெ நோபிலி ஏன் இந்தப் பெயர் பெற வேண்டும் என்று உடனே ஊருக்குத் திரும்பி வரச்சொல்லிக் கடிதம் வரைந்தனர்.

அவர் அளித்த விடை மிகவும் சிறந்தது. அது அவரது ஞானவாழ்வு எவ்வளவு ஆழம்படைத்தது என்பதைத்

தெளிவாகக் காட்டுகிறது. அதில் அவர் போர்க்களத்தில் இறங்கிவிட்ட பிறகு புறமுதுகிட்டோடுவது முறையா என்று கேட்டு எழுதுகிறர். "ஏர்க்காலைப் பிடித்த பின்னர் திரும்பிப் பார்ப்பது அழகில்லை" என்கிறர். அவரது உறவினர் வின்ஸென்ஸோ என்பாருக்கு எழுதும் கடிதத்தில், "சோதனைகள் எதற்காக இருக்கின்றன? நாம் அவைகளை வெல்லுவதற்காகவன்றோ? துன்பங்கள் வருவதனல் அஞ்சிவிடுவது ஆண்மைக்கு அழகாகுமோ? நான் பட்டபாட்டின் பயனை அறுக்கவேண்டாமா?" என்று கேட்கிறர். அவருடைய சகோதரிக்கு எழுதும் பொழுது "நான்தான் இவைகளைத் துவக்கினேன். ஆழ மறிந்துதான் காலைவிட்டேன். அடிசேருமுன்னர் அஞ்சி எடுத்துவிட்டால் எப்பொழுதுதான் இறங்கமுடியும்? எண்ணித் துணிந்தேன் கருமத்தை, பின்னர் அதை விடுவ தென்பது கூடாது. எத்தனை துன்பங்களை நான் இதன் பொருட்டு பொறுத்துள்ளேன்; இப்பொழுது இறுதியில் அத்துயர்களின் பலனைத் துஞ்சாது என்னை இவ்வாறு திரும்பி வரக்கூறுகிறீர்களே! இது உங்களுக்கே நியாய மாகத் தென்படுகிறதா?" என்று கேட்டு எழுதினர். அவருடைய ஒன்றுவிட்ட தம்பியர் ஸ்போர்ஸா என்பவர் மேற்றிராணியாராக இருந்தார். பரிசுத்த பாப்பானவருக் கும் கர்தினல்மார்கட்கும் இவரிடம் அதிக அன்புண்டு. எனவே இவரும் சீக்கிரம் ஒரு கர்தினலாகிவிடுவார் என்று எண்ணினர். அவரிடம் எழுதிய கடிதத்தில் "துன்பக்கடலில் என் படகு மூழ்கப்போவதுபோலத் தோன்றுகிறது. உண்மை என்புறம் என்பது திண்ணம். எனினும் இவ்வுலகில் எப்பொழுதும் உண்மை வென்று கொண்டிருக்கிறது என்று யாரும் கூறுவதற்கில்லை. எனவே இறைவனைத் தவிர்த்து தங்களைத்தான் நம்பியிருக்கிறேன். பாப்பரசரிடமும் கர்தினல்மாரிடமும் இங்கு நடப்பவற் றைப் பற்றி விளக்கிக் கூறுங்கள். கோவை அதிமேற்றி ராணியார் இஸ்பானிய அரசருக்கு ஏதேதோ எழுதி யுள்ளார். தாங்களும் கர்தினல் ஸ்போர்ஸாவும் எழுதி அரசருக்குத் தயவுசெய்து உண்மையை விளக்கவும்.

தாங்கள் கர்தினலின் பழுப்பு ஆடையை அணியப்போகிற தைப் பற்றி எனக்கு மெத்த மகிழ்ச்சி. எனினும் தாங்கள் நம் ஆண்டவரை அவருடைய எதிரிகள் போர்த்திய வெண் ணுடையையும் பழுப்பு ஆடையையும் நினைவில் இருத்தி மும்முடிக்குப் பதில் முண்முடியையும் செங்கோலுக்குப் பதில் ஆணிகளையும் அரியாசனத்திற்குப் பதில் சிலுவையை யும் விரும்ப மறவாதீர்" என்கிறார். தனக்கு இவ்வுலக அரசைப் பற்றித்தர விரும்பிய சீமோனுக்கு நம் ஆண்டவர் "சாத்தானே அப்பாலே போ" என்று கூறிய தன் சேசு நாதரைப் போன்றே, அடிகளும் தம் உறவினரை தம் மைப் பின்பற்றுமாறு அழைத்தார்.

சிங்நாட்கட்குப் பிறகு மதுரை திரும்பினர். ஆனால் அங்கே போரும் கலவரமும் நிலவின. தஞ்சை மன்னவ னுடன் ஏற்பட்ட போரின் காரணமாக மதுரை நாயக்கன் திருச்சிக்குச் சென்றிருந்தான். மன்னவனுடன் தலைநகரே திருச்சிக்கு நகர்ந்துவிட்டது. இராமசெட்டியும் அங்கில்லை.

அவருடைய சேசு சபையினர் பலரும் இப்பொழுது அவருடன் சேர்ந்துவிட்டனர். எனினும் பெரிய சுவாமியா ரும் அவருக்கு உதவியாளரான பர்ராடாஸும் இன்னும் பாப்பானவர் அதனை அனுமதிக்க மாட்டாரென்றே எண்ணிவந்தனர். பெரிய சுவாமியார் உரோமை நகரி லிருந்த மியூசியஸ் விட்டலெஸ்கி அடிகட்கு இந்த மதுரை முறைகள் மிகுந்த பணத்தை விழுங்குகின்றன என்று எழுதினர். எனினும் விட்டலெஸ்கி அடிகள் அவைகளைத் தடுக்காது ஆதரிக்குமாறு எழுதிக்கொண்டேயிருந்தார். இவர்கள் இருவருக்கும் உரோமைப் பெரிய சுவாமியார் இதனை ஆதரிப்பதுபற்றிச் சிறிது வியப்பே! ஏனெனில் இதுவரை தத்துவபோதகரின் கொள்கைகளையோ கூற் றுக்களையோ சற்றேனும் அறிந்துகொள்ள அவர்கள் முயலவில்லை.

இங்கிலையில் மேற்பார்வையாளரான பல்மேய்ரா சுவாமிகள் என்ன செய்தார் என்பதை நாம் அறிய விழை

வது இயற்கையே. "உடனே பெரிய சுவாமியாரைத் தடுத்து மதுரையை ஊக்கிப் புதிய முறைகளைச் செழிக்கச் செய்திருப்பார்" என்று நாம் எண்ணுவது முறையே, எனினும் நடந்தது மற்றொன்று. அவரது கொள்கையை அவர் மாற்றிக்கொள்ளவில்லை. அன்று கோவாவில் அம் முறைகளுக்காகப் பரிந்து பேசியதுபோலவே இன்னும் எவர் முன்னும் பேசத்தயார். கொள்கையளவில் மதுரை முறைகளுக்காக அவர் கடைசிவரைத் துணிவார்.

ஆனால் நடைமுறையில் மதுரை முறைகள் தகுதி யற்றவை என்ற முடிவுக்கு வந்தார். அதற்கு என்ன காரணமோ? முதலில் அவர் பெற்றது பர்ராடாஸ் சுவாமிக ளிடமிருந்து ஒரு கடிதம். அக்கடிதத்தில் "அவர் (நோபிலி) எத்தனையோ பேரின் சான்று தருகிறார்; எத்தனையோ புத்தகத்திலிருந்து சான்று நிறுவுகிறார்; இவைகட்கெல் லாம் இப்பொழுது என்னால் மாற்றுரை தரவியலாது. எனினும் ஒருநாள் வரும். அன்று நீங்கள் யாவரும் யார் பக்கத்தில் உண்மை இருந்தது என்பதை உணருவீர்கள். சான்றுகட்கு மாற்றுரை தர இயலாவிடினும் நடப்பதை எடுத்துரைக்க என்னால் இயலும். மதுரைக் கிறீஸ்துவர்க ளிடையே ஒரு சிலுவைக்கூடக் காணப்படுவதில்லை. அதற் குப்பதில் நம் அடிகள் ஒரு கம்பை ஊன்றிக்கொண்டு திரி கிறார். அன்று ஆயிரக்கணக்காக மதமாற்றிய புனித சவே ரியார் கையில் இருந்தது ஒரு பாடுபட்ட சிலுவை, அவர் உடம்பில் இருந்தது பூசை உடுப்புக்கள், அவர் வாயிலிருந் தது தவறான தமிழ்ச்சொற்கள். எனினும் காவியுடையின் றிச் செந்தமிழுமின்றிக் கையிற் கம்புமின்றி, அவர் எத் தனையோ பேரைக் கிறீஸ்துவின் ஒளியிற் சேர்த்தார். அவர் சேர்த்த கிறீஸ்துவர்கள் அந்தணர்களல்லர். அவர்கள் இது வரையிலும் நம் மறையில் நின்று உறுதியோடு வாழ்கின் றனர். ஆனால் இந்தக் கிறீஸ்துவர்களோ ஒரு சிறு காரியத் திற்கு முதலாய்ச் சமயத்தைக் கைவிட்டுவிடுகிறார்கள். இதுதான் இந்தப் புது முறைகளால் விளைந்த விளைவுகள். இதோடு அவரது கோயிலைப் பார்க்க வேண்டுமே! அது

ஒரு கோயிலா? அது ஒரு ஏதோ கூருருளை மோடுபோன்று உள்ளது. அது கடவுள் தங்கும் கோயிலாகவா இருக்கிறது? இந்துக்கள் ஒரு சிலைக்காகக் கட்டும் கோயிலைப்போன்றே நாம் நம் உண்மைத் தெய்வத்திற்காகக் கட்டும் கோயிலும் இருக்கலாமா?" என்று இன்ன பிறவற்றை அடுக்கித் தள்ளினர். இதைக் கண்ட பார்வையாளர் ஒருவேளை எவ்வளவுதான் கொள்கையளவில் மதுரை முறைகள் நல்லனவாகத் தோன்றினபோதிலும், நடைமுறையில் அவை பயனில்லை என்ற முடிவிற்கு வந்தார்போலும்!

எனினும் பர்ராடாஸ் சுவாமிகளின் கடிதத்துடன் நிற்கவில்லை. தாமே மதுரைக்குப் புறப்பட்டார். வழியில் தமிழ் மக்களின் விருந்தோம்பும் குணத்தை இருந்தத் தண்ணீர்ப் பந்தல்களில் கண்டார்; தனித்தோர்க்குத் தாகந்தணித்துப் பசித்தோர்க்கு உணவு அளித்த நம்மவரது பரந்த மனதைப் போற்றி எழுதினர். எனினும் அவர்களது பிறர்சிநேகத்தைச் சாதி வேறுபாடு குலைப்பதையும் கண்டார். பரிந்தோம்பும் பண்பாடு குலவேறுபாட்டால் புண்பட்டது. எளியோரைத் தம் வீட்டினுள் ஏற்க மறுத்தது. இதனையும் ஊர்ந்தார் மேற்பார்வையாளர். தமிழ் மக்களின் கோயில்களும் அவரது மனத்தை ஈர்த்தன. ஓங்கி உயர்ந்த கோபுரங்களும் அவைகளின் உச்சியில் மின்னி நின்ற கலசமும், அகன்று விரிந்த மண்டபங்களும், அவற்றைத் தாங்கிநின்ற பருத்தூண்களும் அவரது கவனத்தை ஈர்த்தன. சென்றவிடமெல்லாம் கோயில்களைக் கண்ட அவர் என்ன நினைத்திருப்பார்!

மதுரை வந்தவர் அடிகளின் மடத்திற்கு விரைந்தார். "மதுரை முறைகள் அதிகப் பணத்தை விழுங்குகின்றன" என்ற குற்றத்தைப் பொய்யாக்கி நின்ற எளிய குடிசையைக் கண்டார். ஐரோப்பாவில் கோயிம்பராக் கல்லூரியில் வசித்து வந்த பல்மேய்ரா அடிகளின் கண்ணில் அது பெருஞ்செல்வந்தரின் வீடாகத் தென்படவில்லை. அவர்களது உடையும் வெகு இழிவாகவோ சிறப்பாகவோ தென்படவில்லை. அவர்களது உணவு முறைகளில் அவர்

ஒறுத்தல் முயற்சியை அன்றி வேருென்றைக் காணவில்லை. அவர்களது வாழ்க்கை முறையிலும் தூய்மை மிளிருவதைக் கண்டார். எனவே அவர் மனதை மாற்றிக்கொள்வார் என்று நம்ப இடமுண்டோ!

உண்மை! அவர் ஒரே ஒன்றில் மட்டும் ஒரு முக்கிய மாற்றம் விளைத்தார். அது இனிமேல் வரவிருந்த எண்ணற்ற மாற்றங்களின் தாய் மாற்றமாக விளங்கியது. கிறீஸ்துவ மறை தென் இந்தியாவில் இன்று வேருன்றியதெனின், அதற்கு ஒரு காரணமாக விளங்கியது அது. அதுதான் " இனிமேல் நம் சமயத்தைத் தழுவ வருபவர்களைப் பரங்கியர் குலத்தில் சேருமாறு வற்புறுத்தலாகாது" என்ற கட்டளை. இந்தக் கட்டளை முதன் முறையாக மலபார் மாகாணம் முழுவதற்கும் பிறப்பிக்கப்பட்டது. முன்பு லெயேர்சியோ சுவாமிகள் தத்துவபோதகருக்கு மட்டும் அதனை அனுமதித்தார். இன்று பல்மேய்ரா சுவாமிகள் மலபார் மாகாணம் முழுமைக்கும் கட்டளை பிறப்பித்தார். இந்த அளவில் மதுரை முறையை மலபார் மாகாணம் முழுவதற்கும் பரப்பிய பெருமை பல்மேய்ரா சுவாமிகளைச் சாரும்.

இவ்வளவு செய்த பல்மேய்ரா சுவாமிகளே மதுரை மிஷனைப் போற்றவில்லை. அதற்காக அவர் கூறும் காரணம் ஒன்று நமது கவனத்தை ஈர்க்கின்றது. 1606-ஆம் ஆண்டில் தத்துவபோதகர் மதுரை வந்து தமது அலுவலைத் தொடங்கினர். முதல் மூன்று நான்கு ஆண்டுகள் அவர் பலரையும் மனந்திருப்பினர். எனினும் இந்தப் பத்து ஆண்டுகளாக அவ்வளவு பயனில்லை. இதற்குப் பல காரணங்கள் உள. ஒருவேளை மக்கள் அவர் தம்மை ஏமாற்றிவிட்டார் என்பதை உணர்ந்துகொண்டனர் போலும். ஒரு ஐரோப்பியராக இருந்துகொண்டு ஓர் இந்தியர்போல நடித்தது ஒரு குற்றம். இப்பொழுது அவர் ஐரோப்பியர் என்பது வெளிப்பட்ட பின் மக்கள் அவரை நம்ப மறுக்கின்றனர். மக்களுள் மனமாற்றுதல் இல்லாமைக்கு இது முதற் காரணம் என்று கருதுகிறேன்.

மற்றென்று சேசு சபைப் பெரிய சுவாமிமார்களைப் பொருத்தது. ஒருவருக்கு ஞான ஒளி அளிப்பது நம்மாலான ஒன்றன்று. மனிதனால் மற்றொரு மனிதனை உண்மை இறைவனின் திருப்பதஞ் சேர்த்தல் இயலாது மனிதர் செய்யக்கூடியதெல்லாம் வழியைக் காட்டுகிறதே. இறைவனின் திருவருள்தான் இருளடைந்து கிடக்கும் ஆன்மாவிற்கு இறைவெளிச்சம் அளிக்கக்கூடும். அவராலேயே மனிதனைத் தம் பதம் ஈர்க்கக்கூடும். இவ்வாறிருக்க இறைவனின் அருளால் மக்கள் நம் மறை நாடி வந்த நாட்களில் "ஞானஸ்நானம் கொடுக்கக்கூடாது" என்று தடையுத்தரவு பிறப்பித்தல் முறையற்றது. பின்னர் இறைவன் அருள் வேலை செய்யாத நேரத்தில் அந்தத் தடையுத்தரவை நீக்கி என்ன பயன்? இந்தப் பெரிய சுவாமியார் தடையுத்தரவை நீக்கிய உடன் இறைவன் அருள்மாரி பொழியவேண்டும் என்பது அவருக்கு என்ன கடமை?

மற்றொரு காரணம்: ஏமாற்றுதல். பல்மேய்ரா அடிகளும், மற்ற போர்த்துக்கீசியரைப் போன்றே "பரங்கி" என்ற சொல் "ஐரோப்பியர்" என்று பொருள்படுவதாகக் கொண்டார். எனவே தத்துவபோதகர் தாம் ஒரு "பரங்கி" அல்லவென்று கூறி, ஓர் இந்தியர்போல் வாழ்ந்தது, தான் ஒரு ஐரோப்பியர் அல்லரென்று கூறி, ஓர் இந்தியர்போல நடிக்கிறார் என்று கருத அவர்க்கு இடமுண்டாயிற்று. உண்மையே உருவெடுத்த சேசுவின் சமயத்தை, இத்தகைய ஒரு பொய்யினால், ஒரு ஏமாற்றத்தினால் பரப்புவது தகுதியன்று என்று கருதினார் பல்மேய்ரா சுவாமிகள். எனவே இத் "தவற்றை" அழுத்தி அழுத்தி எழுதுகிறார். எனினும் உண்மையில் "பரங்கி" என்றால் "ஐரோப்பியர்" என்று அன்று, "பண்பற்றவர்" என்று பொருள்படும் என்பதை அடிகளும் நாமும் அறிவோம்.

பர்ராடாஸ் சுவாமிகள் "மதுரை அதிகப் பொருளை விழுங்குகிறது" என எழுதினார். ஆனால் என்றுமே திருச்சபை பொருளைப்பற்றிக் கவலைப்பட்டதில்லை. அதன்

தெய்வீக முதல்வர் ஓர் ஏழைத்தச்சன். அவர் தம் திருச் சபையைப் பொருளைக் கொண்டன்று, பட்டத்தைக் கொண்டன்று, வன்மையைக் கொண்டன்று, தம் எளிமை யினால், தாழ்ச்சியினால், தம் இரத்தத்தினால் நிறுவினார். அவர் தேர்ந்தெடுத்த தம் அப்போஸ்தலர் உரோமை செல் வந்தர்கள் அல்லர்; கிரேக்க அறிஞர்களல்லர்; கலிலேயா வின் ஏழைச் செம்படவர்கள். ஆண்டவர் பரலோகத்திற்கு ஆரோகணமான பின்னர், அப்போஸ்தலர்கள் கையில் ஒரு காசின்றி, மடியில் ஒரு வாளின்றி நாடுகள் அனைத்தும் சுற்றி வந்தனர். எளிமையில், உரோமையரின் அடிபிடிகட் கிடையே, துன்புறுத்தல்கட்கிடையே திருச்சபை உருவா னது. இன்றும் அது நின்று வருகிறது. இன்னும் எத்தனையோ இடங்களில் சேசுவின் போதகர் பிச்சை யெடுத்துக் கோயில்கள் கட்டுகின்றனர்; கல்வி நிலையங் கள் நிறுவுகின்றனர்; மருத்துவச்சாலைகள் அமைக்கின்ற னர். "வேலையாள் தன் கூலிக்கு உரியவன்" என்பது நம் ஆண்டவரின் வாக்கு. அனைத்தையும் படைத்துக் காத்து வரும் இறைவன் தம் அன்பர்களைச் சும்மா விட்டுவிடுவாரா? எனவே சமயக்கலையிற் தேர்ந்த பல்மேய்ரா சுவாமிகளின் கண்களில் பணத்திற்காக இந்த மதுரையை நிறுத்துவது சரியாகத் தென்படவில்லை.

இத்துடன் நம் பல்மேய்ரா சுவாமிகள் நிற்கவில்லை. புதிய கேள்வி ஒன்றை எழுப்புகிறார். "இறந்தவர்களின் சவங்களை எரித்தல் தகுமா? கத்தோலிக்கரல்லாதவர் இந்நாட்டில் அவ்வாறு செய்கின்றனர். அவர்களது முறை களைப் பின்பற்றிப் புதிதாக மனந்திருப்பிய நம்மவர் அவ் வாறு செய்வது முறையாகுமா? அதில் ஒரு தவறுமில்லை. நாம் மண்ணில் புதைக்கிறோம்; அவர்கள் நெருப்பில் புதைக்கிறார்கள். ஒன்றில், நாளாக நாளாக அது மட்கி மண்ணாகிவிடுகிறது. மற்றொன்றில் அது விரைவில் சாம்ப லாகிவிடுகிறது. இதைச் செய்வது, ஒரு சிலைக்கு ஆராதனை செய்வதின் அடையாளமன்று. எனினும் இதனைத் தடுத் தல் தேவை. இதற்கு உள்ள காரணம் திருச்சபையின்

அடக்கச் சடங்குகள் எவ்வளவோ அழகானவை. அவை களை எல்லாம் மாற்றி அமைப்பது அவ்வளவு எளிதன்று. ஆனல் கிறீஸ்துவர்கட்கென இங்கே தனிப்பட்ட கல்லறை ஒன்று இதுகாறும் நிறுவப்பெறவில்லை...!

மதுரை முறைகளை முற்றிலும் மாற்றி அமைப்பது ஓர் இன்றியமையாத தேவை. ஏனெனில், அவர்களது வாழ்க்கை முறை மிகக் கடினமானது. ஐரோப்பாவி லிருந்து வரும் அனைவரும் தமிழ்மொழியை இவ்வளவு ஐயந் திரிபறக் கற்றுத் தேர்வர் என்று நம்ப இடமில்லை. எனவே சில முக்கியமான மாறுதல்கள் தேவையாயிருக்கும் என்று விட்டலஸ்கி சுவாமிகட்கு எழுதினர் பல்மேய்ரா சுவாமி கள். நம் ஆண்டவரைக் கொன்று கல்லறையில் வைத்த பின்னரும் பசாசு என்ன செய்தான் தெரியுமா? பிலாத்தி னிடம் சென்று கல்லறையைப் பாதுகாக்குமாறு கேட் டான். இப்பொழுது அவ்வாறே அவர்க்கெதிராகக் கலகம் மூட்டி விடுகிருன்.

"மீண்டும் மீண்டும் புண்ணில் எரி நுழைந்தனென விம்மினள்" என்கிருர் கம்பர், அது சீதை இராவணனிடம் சிறைபட்டிருந்த காலத்தே சோம்பியிருந்த படலம். அவ் வாறேதான் மாற்ருனல் விளைந்த துன்பத்தில் வாடியிருந்த தத்துவபோதகர் நிலையும். "வருவார், அவர் வருவார், வந்தென்னை மீட்பார்" என்று ஏங்கியிருந்தார். எனினும் சேசுநாதர் தம்மவர்கள் எதிர்பாராத நேரத்திலேயே வருவார். அவர் வருவதற்கு முன்னர் துன்பங்கள் கூடிக் கொண்டே வந்தன.

மதுரை நாயக்க மன்னன் அன்று விஜயநகரத்தில் இருந்து செங்கோலோச்சிய வெங்கடா பேரரசருக்குக் கப்பம் கட்டிய ஒரு சிற்றரசனே. அவ்வாறே தஞ்சை செஞ்சி நாயக்கர்களும். விஜயநகரம் மெதுவாக வலி இழந்துகொண்டு வருவதைக் கண்ட மதுரை வீரப்ப நாயக்கன், பேரரசரின் எதிரிகளுடன் கலந்து கலகம் விளைக்கலானன். இதற்கிடையே மைசூரில் ஒரு பெரிய

குழப்பம் விளைந்திருந்தது. பேரரசரின் அரசகுடும்பம் கொலை செய்யப்பட்டது. இளவரசன் மட்டும் தப்பித்து, விஜயநகருடன் நட்புக்கொண்டு, உண்மை ஊழியனுகயிருந்த தஞ்சை நாயக்கனின் அரண்மனை சேர முயன்ருன். இந்நிலையில் திருச்சி வந்து தஞ்சை சேரலாம் என்ற நோக்குடன் வந்துகொண்டிருந்தான்.

இதை அறிந்த மதுரை நாயக்கன் திருச்சியில் அவ்விளவரசனைப் போரில் சந்திக்கலாம் என்ற கருத்துடன் திருச்சிக்கு விரைந்தான். எனவே தலைநகரம் திருச்சிக்கு மாற்றப்பட்டது. எனவே மன்னவனுக்குப் பதில் வெங்காயப்பச் செட்டி என்பவன் ஆண்டுவந்தான். இவன் பேராசை பிடித்த வஞ்சகன். இவனது பேராசையை அறிந்த பகைவர்கள் இவனிடம் சென்று அடிகளின் மடத்துள் இருக்கும் "பொற்குவியல்களைப்" பற்றிப் பேசினர். பொன்னுசையினுல், அடிகளைக் கூப்பிட்டு அவர் வசம் இருந்த பணம் அனைத்தும் தன்வசம் வரவேண்டும் எனக் கட்டளையிட்டான். இல்லாவிடில் அவரிடம் உள்ள அனைத்தையும் வன்மையினுல் பறித்து அவரை மதுரையிலிருந்து வெளியேற்றுவதாகக் கூறினுன்.

அடிகள் தலைமறைவாகத் திருச்சிக்குத் தப்பிச் சென்ருர். பல இடங்களிலும் சென்று ஆண்டவரைப் போதிக்க வேண்டுமென்றிருந்த அவரது ஆவல் நிறைவேற ஆரம்பித்தது. அங்கே அதிபனுகயிருந்த ஆண்டிசெட்டி வெங்காய செட்டியைவிட ஒரு படி அதிகப் பேராசையுடையவன். அந்தச் செல்வம் முழுவதும் தம்மைச்சேர வேண்டும் எனக் கட்டளையிட்டான். அடிகள் அங்கிருந்த இராமசெட்டியிடம் சென்று நடந்ததைக் கூறினுர். அவனும் செவிசாய்க்கவில்லை. இறைவனின் கையில் எல்லாவற்றையும் விட்டுவிட்டார்.

தம்மவரை அவ்வாறு விட்டுவிடுவதன்று இறைவனின் திருவழி. ஆண்டி செட்டியிடம் இராமசெட்டி எவ்வாருே இதைப்பற்றிப் பேச நேர்ந்தது. இறுதியில் இதற்கெல்

லாம் காரணமாயிருந்த இரண்டு அந்தணர்களைக் கண்டு பிடித்து அவர்கட்குத் தகுந்த தண்டனை அளித்தனர். மலைபோல வந்த துன்பம் பனிபோல அகன்றது.

## 15

## பாப்பரசர் முடிவு

கோவைச் சங்கத்தில் நிகழ்ந்தனவற்றைக் கேட்ட பாப்பரசர் மிகவும் வருந்தியிருப்பார். அந்த வருத்தத்தி னாலும், தள்ளாத வயதினாலும் பரிசுத்த பாப்பானவர் 5-ஆம் சின்னப்பர் இவ்வுலக வாழ்வை உதறித்தள்ளிவிட்டு இறைவன் திருப்பதம் சேர்ந்தார். அவர் என்றுமே மதுரைப் புதுக்கிறீஸ்துவர்கட்கும், கிறீஸ்துவர்களாக விரும்பும் அந்தணர்கட்கும் எவ்வளவு அவர்களது மனமாற் றத்தை எளிதாக்க முடியுமோ அவ்வளவு எளிதாக்கத் தயாராயிருந்தார். எனினும் இந்தியாவில் இருந்தவர் கட்குள் அறியாமையால் ஏற்பட்ட பிளவைக் குறித்து மிகவும் வருந்தி இறந்தார்.

ஒரு பாப்பானவர் இறந்தால், மற்றொருவரை விரை வில் தேர்ந்தெடுப்பது வழக்கம். கர்தினால்மார் அனைவரும் ஒரு தனிப்பட்ட மாளிகையில் கூடி, வெளி உலகுடன் ஓர் உறவும் இன்றி இறைச் செபத்திலும் தவத்திலும் வாழ்ந்து, இறைவனின் ஒளிக்காக வேண்டித் தம்முள் ஒருவரை, அல்லது எவரேனும் ஒருவரைப் பாப்பரசராகத் தேர்ந்தெடுப்பர். இவ்வாறு விரைவில் மற்றொரு பாப்பர சர் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர்தான் 15-ஆம் கிர கோரியார் என்ற பாப்பரசர்.

இவரும் திருச்சபையின் கொள்கைக்கேற்ப, இந்த மதுரை முறைகளைப் பற்றிய தர்க்கத்திற்கு ஒரு முடிவு காண விரும்பினார். இதுவரை உரோமை நகரில் எத்த னையோ புத்தகங்களும் தாள்களும் இதுபற்றி அச்சிடப்

பட்டிருந்தன. பலர் தத்துவபோதகரை ஆதரித்தனர். சிலர் அவரை எதிர்த்தனர். ஆனால் பாப்பானவரின் அலுவலகத்தில் இருந்த கடிதங்கள் முக்கியமானவை. அவைகளில் பல அவருக்குச் சாதகமாகவும், பல பாதகமாகவும் அமைந்திருந்தன.

**சாதகமானவை:** ராபர்ட் அடிகட்குச் சாதகமாக அமைந்திருந்தவைகளில் முக்கியமானவை நான்கு. ஒன்று கிராங்கனூர் மேற்றிராணியாரின் கடிதம். தென்னிந்தியாவில், மதுரையில் பாப்பரசருக்குப் பதிலாகத் திருச்சபையை ஆண்டுவந்தவர் இவர். எனவே இவருடைய கூற்றுகட்கு அதிக மதிப்பு உண்டு. இவரடியில் இருந்த கிராங்கனூர்க் கிறீஸ்துவர்கள் புனித தோமையாரால் மனந்திருப்பப்பெற்றவர். அவர்களும் தம் பண்பாட்டையோ சாதி முறைகளையோ விட்டுவிடவில்லை. எனவே இவருடைய பழக்க வழக்கங்களும், அவைகளிலிருந்து இவர் எடுத்துக்கூறிய கருத்துக்களும் அப்போஸ்தலரிடமிருந்து பெற்றவை. அவரை ஒரு வேத துரோகி என்று எளிதில் கூற முடியாது.

தத்துவபோதகருக்காகப் பேசியவை அவருடைய மூன்று முக்கிய நூல்கள். ஒன்று 1610-இல் அவர் எழுதிய மறுப்புரை. இரண்டாவது, கோவைச் சங்கம் கூடுவதற்கு முன்பு, புச்சேரியோ சுவாமிகள் கருணாகரனின் உதவிகொண்டு அடிகட்கு எதிராய் தயாரித்த மற்றொரு நூலை எதிர்த்து எழுதியது. மூன்றாவது, தன் உறவினருக்கும், கர்தினால் பெல்லார்மினுக்கும், சேசு சபைப் பெரிய சுவாமிமார்கட்கும், பாப்பரசருக்கும் அவர் எழுதிய கடிதங்கள். இக்கடிதங்களில் மதுரை மிஷனைப் பற்றி எண்ணற்ற செய்திகள் காணப்படுகின்றன. பூணூல், குடுமி இவைகளைப் பற்றித் தெளிவாகப் பலவும் காணப்படுவது அவர் 1610-இல் எழுதிய மறுப்புரையில். இம்மறுப்புரையை ஆங்கிலத்தில் எழுதுபவர்கள் Apologia என்று அழைக்கின்றனர். இது கர்தினால் நியூமென் என்ற பெயர் பெற்ற ஆங்கில எழுத்தாளர் பயன்படுத்திய சொல்.

இவர் முதலில் பதிதராயிருந்து, பின்னர் கத்தோலிக்க மறையைத் தேடி அடைந்தவர். இவரை அவருடைய எதிரிகள் தாக்கிப் பத்திரிகைகளில் எழுதி, இவர் கற்றுத் தந்ததை திருச்சபையின் போதனையல்லவெனத் தூற்றினர். அச்சமயம் கர்தினல் அவர்கள் தமது போதனை சரியே வென நிலைநாட்டி ஒரு நூல் எழுதி அதற்கு இப்பெயர் இட்டார். நம் அடிகளும் அதே சூழ்நிலையில் இப்புத்தகத்தை எழுதியமையின் அதற்கும் ஆங்கில, பிரெஞ்சு, இத்தாலிய மொழிகளில் முறையே, Apologia, Apologie, Apologia என அழைக்கின்றனர். எனினும் அடிகள் இதற்கு Refutatio அல்லது மாற்றுரை அல்லது மறுத்துரை என அழைத்தமையின் நாமும் அவ்வாறே அதனை அழைப்போம். "இந்நூல் நான்கு பாகங்களின் அடங்கும். முதலாவது: கொன்சாலோ சுவாமிகளின் குற்றச்சாட்டுகட்கு அளித்த பதிலுரை. இரண்டாவது: பூணூல், குடுமி போன்றவை சமயம் பற்றியவை அல்ல, அவை சாதி பற்றியவை. மூன்றாவது: சமயம் பற்றிய தமிழ்ச் சொற்களை, முக்கியமாகத் தமதிரித்துவம் பற்றிய சொல்லை எவ்வாறு பயன்படுத்த ஆரம்பித்தார். நான்காவது: பரங்கி என்ற சொல் உண்மையிலேயே கிறீஸ்துவன் என்று இந்த நாட்டில் பொருள்படுகிறதா?" இவற்றில் முதல் இரண்டையும், இறுதிக் கேள்வியையும் நமது நூலில் ஏற்கனவே புகுத்தி விளக்கிவிட்டோம். எனினும் வடமொழியில் உள்ள வேதநூல்களிலிருந்தும் அன்று நிலவிவந்த பழக்க வழக்கங்களிலிருந்தும் அவர் இவைகளை நிறுவுகிறார். இத்தகைய நிருபணங்களை இங்கு விட்டுவிட்டோம். மூன்றாவது பகுதியைப் பின்னர் விளக்கி வரைவோம்.

இந்நூலின் ஆரம்பத்தில், "இன்றியமையாத தேவையின் பொருட்டு இல்லாவிடில் மதுரையிலிருந்த புதுக் கிறீஸ்துவர்களின், இன்னும் அநேக அந்தணரின், ஆன்ம வாழ்வின் பொருட்டு - என்னைப்பற்றிச் சில குறிப்புகள் எழுத வேண்டியுள்ளது. 1. என் அறிவு, 2. என் மொழித்

திறன், 3. செயலறிவு, 4. மேலதிகாரிகட்கும் எனக்கு முள்ள தொடர்பு. 1. என் மெய்விளக்க, சமய விளக்க அறிவைப்பற்றி நான் ஒன்றும் கூறத் தேவையில்லை. என்னைக் குருவானவராக அனுமதித்த என்னுடைய சேசு சபைப் பெரிய சுவாமிமார்களே கூறவேண்டும். என்னைப் பொறுத்தளவில் அவைகளை நன்கு கற்றுத்தேறவே முயன்று வந்துள்ளேன். 2. என்னால் முயன்றவரைத் தமிழைக் கற்றுப் புலமை பெற்றுள்ளேன். என்னால் சமயம் பற்றி, கடவுள்பற்றி, இந்நாட்டின் பெரும் புலவர்களோடு தொடர்ந்து மூன்று நான்கு மணிகள் விவாதிக்க முடியும். சமஸ்கிருதம், தெலுங்கு ஆகிய மொழிகளையும் கற்று அவைகளில் புத்தகம் எழுதவல்ல அளவு புலமையுண்டு. 3. இங்கு நடப்பவைகளைப்பற்றிய செயலறிவு என்னிடம் உண்டு என்பதற்கு அத்தாட்சி தேவையில்லை. ஏனெனில் நான் தான் முதலில் இவைகளைத் தொடங்கிச்செய்கிறேன். அந்தணர்களுடன் அவர்களது மொழியிலேயே தொடர்பு கொள்கிறேன். அவர்கள் நடுவே வாழ்வதால் அவர் களுடைய வாழ்க்கை முறைகளைச் சரிவரக் கற்றுத்தேர்ந் துள்ளேன். 4. நான் இதுவரை செய்தது எதனையும் முதலில் சேசு சபைப் பெரிய சுவாமியார்களிடமிருந்தும், பின்னர் என்னுடைய அதிமேற்றிராணியாரான ராஸ் அவர்களிடமிருந்தும் உத்தரவு வாங்கியே செய்கிறேன்.'' எனவே இவற்றையெல்லாம் வாசிக்கும் உரோமைய அதி காரிகள் அவருடைய நூல்களைச் சும்மா தள்ளிவிடமுடி யாது. முடிந்தால் காரணத்துடன் தள்ளவேண்டும்; முடியா விடில் ஏற்கவேண்டும்.

பின்னர் விசாரகர் தெல்மேய்தோவின் கடிதம் அங்கி ருந்தது. போர்த்துக்கீசிய விசாரகர்-அதிபதி மார்ட்டின்ஸ் தெ மஸ்கரனுஸூம் அடிகளின் சார்பில் ஆறு பக்கங்கள் கொண்ட நீண்ட கடிதம் ஒன்று வரைந்திருந்தார். அது தான் விசாரகர் மன்றத்தின் தீர்ப்புரை.[1] விசாரகர் மன்றம்

---

[1] Fr. Bertrand: "La Mission du Maduré" 1848, p. 401

திருச்சபையின் ஒரு நீதி மன்றம். இந்நீதி மன்றமே திருச்சபையின் கொள்கைகளல்லாதவற்றைக் கொண்டுவருபவர்களைத் திருச்சபையின் பெயரால் கண்டித்து, வேண்டுமானால் திருச்சபையை விட்டுப் புறம்பே தள்ளும். இது அடிகளின் சார்பில் தீர்ப்புக் கூறிவிட்டபடியால், இனிமேல் அவ்வளவு அச்சமில்லை.

பாதகமாக அங்குவந்த கடிதங்களுள் முக்கியமானது கோவை மேற்றிராணியாருடையது. இவர் பாப்பானவருக்குப் பதில் இந்தியப் பிரதிநிதி. மிகவும் கோபத்துடன் கடிதம் வரைந்திருந்தார். ராஸ் மேற்றிராணியாரின் கடிதத்தை மதிப்பதுபோன்றே இவருடையதையும் மதிக்கவேண்டும். இரு மேற்றிராணிமார்களும் எதிர் துருவங்களில் நிற்கின்றனர். இந்நிலையில் எது உண்மையெனக் காண்பது? இவர் சொல்வதா? அவர் சொல்வதா?

அடுத்து, கோவை விசாரகர் பேர்கோஸ் தெ ஸூஸாவினுடையது. இவர் தெல்மேய்தோவைவிட ஒரு படி உயர்ந்தவர்.[1] இவர் கோவை அதிமேற்றிராணியாரின் விருப்பத்தின்படி அடிகட்கு எதிராக மற்றொரு நீண்ட கடிதம் வரைந்தார். இதுவும் வழக்கைச் சிக்கலாக்கியது. இத்துடன் கோவையிலிருந்து லைசென்ஷியேட் ஜான் தெலெகாதோ தெஃபிகுவெய்ரா என்பவரும் நீண்ட கடிதம் வரைந்தார்.

இவைகளையெல்லாம் கண்ட பாப்பரசர் சற்று யோசித்தார். பின்னர் கர்தினல்களின் கழகம் ஒன்று அமைத்து ஆராயுமாறு பணித்தார். இக்கழகத்தில் கர்தினல் பெல்லார்மின், கர்தினல் ஸ்போர்ஸா[2] கர்தினல் பென்ஃஸிலி, கர்தினல் ஆரசேவி ஆகியோரும் இருந்தனர். இவர்கட்கு உதவிசெய்ய மூன்று சமய விளக்க வல்லுநர்கள் இருந்தனர். அவர்கள் தொம் மிக்கேல் என்ற புனித

---

[1] அவரை "Senior Inquisitor" என அழைப்பர்

[2] அடிகளின் உறவினர்.

1A

பெனதிக்தின் துறவி, கார்மேல் துறவியான காம்பனெல்லா சுவாமிகளும், அயர்லாந்தின் மேற்றிராணியாரான பீட்டர் லம்பார்டு ஆவர். நமக்கு முதல் இருவரைப்பற்றிய விவரங்கள் பல கிட்டவில்லை. ஆனால் அதி வந். பீட்டர் லம்பார்டு அவர்களைப்பற்றிச் சற்று அறிவோம்.

கர்திளுல்கள் பெயரளவிலேயே கழகத்தில் இருந்தனர். அதி வந். மேற்றிராணியார் தலைமையில் மற்ற இருவரும் வழக்கை ஆராய்ந்தனர். இந்த மேற்றிராணியாருக்கு அப்பொழுது எழுபது வயது. அயர்லாந்தில் வாட்டர்ஃபோர்ட் என்ற இடத்தில் பிறந்து, ஆக்ஸ்ஃபோர்டில் கல்விகற்ருர். பின்னர் சமய விளக்கத்திற்குப் பெயர்போன லுவேன் நகரில் சிறந்து விளங்கி, சமய விளக்கத்தில் டாக்டர் பட்டம் பெற்ருர். குருவானவராகி, லுவேன் நகரிலேயே கற்றுத்தந்தார். 1601-இல் ஆர்மா நகரின் அதிமேற்றிராணியாராக நியமிக்கப்பட்டார். எனினும் அரசியல் குழப்பங்களால் அயர்லாந்துக்குப் போகமுடியவில்லை. எனவே உரோமை நகரிலேயே தங்கியிருந்தார். விரைவில் திருச்சபையின் புதிதாக நுழைந்த அப்போஸ்தலத்துவ முறைகளில் எது திருச்சபையின் கருத்துக்களுடன் ஒத்து வருகிறது, எது ஒத்துவருவதில்லை, எனக் கண்டுபிடிப்பதற்குப் பெயர் போனவரானுர். இப்பொழுது அவரைத் தலைவராக வைத்தது மிகச் சிறந்ததே. ஏனெனில் போர்த்துக்கீசியர், இத்தாலியர், இந்தியர் முதலியோருடன் தொடர்புகொண்ட ஒரு வழக்கைத் தீர்ப்பதில் ஓர் அயர்லாந்துக்காரர் நடுநிலையில் நின்று ஆராயமுடியும். ஒரு முடிவுக்கு வந்தபின் மறுகட்சி அவரைத் தூற்ருது.

அதி வந். லம்பார்டு அவர்கள் தீர்த்த ஒரு வழக்கு கலிலேயோவினுடையது. அதில் அவர் தவறியது சிறிது வருந்தத்தக்கதே. கலிலேயோவிற்கு முன்பு (கொபெர்னிகஸ் தவிர) மக்களனைவரும் பூமியே உலகத்தின் மையம் என்றும், அது அசையாது நிற்கிறது என்றும், சூரியன், சந்திரன், செவ்வாய் போன்ற மற்றக் கிரகங்கள் பூமியைச் சுற்றிவருகின்றன என்றும் எண்ணியிருந்தனர். இதற்கு

மாருக முதன்முதலில் கொபெர்னிகஸ் என்பவர் சூரியனே உலகத்தின் மையமென்றும், பூமி முதலான மற்றக் கிரகங்கள் யாவும் அதனைச் சுற்றிவருகின்றன என்றும் கண்டார், எனினும் அதனை அவர் உலகிற்கு வெளிப்படுத்தத் தயாராகவில்லை. ஆனால் அவருக்குப் பின்வந்த கலிலேயோ பூமியின் புவி ஈர்ப்பு சக்தியைக் கண்டுபிடித்தார். அந்தக் கொள்கையின்படி ஒரு சடப்பொருள் மற்றொரு சடப்பொருளை ஈர்க்கின்றது, தன்பால் இழுக்கிறது. இதன்படி சூரியனும் பூமியைத் தன்பால் இழுக்கிறது. பூமியும் சூரியனைச் சுற்றி வருகிறது. இவற்றையெல்லாம் கலிலேயோ தனது தொலைக்கண்ணாடிமூலம் உண்மையெனக் கண்டார். எனினும் பழைய வேதாகமத்தில் ஓரிடத்தில் சூரியன் பூமியைச் சுற்றிவருகிறது என்று கூறியிருக்கின்றமையின் திருச்சபையின் அன்றைய அதிகாரிகளும் பலரும் கலிலேயோவின் கூற்றை ஏற்றுக்கொள்ளவில்லை. அதி வந். லம்பார்டும் அதனை ஏற்றுக்கொள்ளவில்லை.

நல்ல வேளையாக, வான சாத்திரத்தை அவர் நன்கு அறியவில்லை எனினும், வேத சாத்திரத்தை நன்கு அறிந்திருந்தார். அவர் நோபிலி வழக்கில் கூறிய முடிவையே பாப்பரசர் தமது முடிவில் கூறியுள்ளமையின் நாம் இவண் அவரது முடிவைச் சிறிது விளக்கி எழுதுவோம்.[1]

அதி வந். லம்பார்டு அவர்கள் முதன்முதலில் பதினான்கு பக்கங்களில் விவாதத்தின் பொருளைப் பற்றியும் அதன் வரலாற்றைப்பற்றியும், ஏற்றுப் பேசுவோரைப்பற்றியும் எதிர்த்துப் பேசுவோரைப் பற்றியும் வரைகிறார்.

---

[1] பின்வருவனவற்றை "Le 'Votum' de Pierre Lombard, Archévêque d' Armagh et la controverse de Robert என்ற நூலிலிருந்து எடுத்துள்ளோம். சங். தாமேன் அவர்கள் சென்பகனூர் கல்லூரியின் வரலாற்று ஆசிரியராக விளங்கியவர். பிரெஞ்சு மொழியிலும் ஜெர்மானிய மொழியிலும் தத்துவபோதகரைப் பற்றி இரு அரிய நூல்கள் எழுதியுள்ளார். இவரே, நாம் இந்நூலில் மிகவும் பின்பற்றும் சங். சோலியர் சுவாமி அவர்களின் ஆசிரியராக விளங்கியமை குறிக்கற்பாலது.

பின்னர் தமது கருத்தைக்கூறி அதன் காரணங்களை விளக்குகிறார். தம் கருத்திற்கு மாறாக மாற்றார்கள் அளிக்கும் காரணங்கட்கு விடையளிக்கிறார். இன்னும் நம்மிடையேகூட பலரும் இந்தியக்கிறீஸ்துவக்கலை, இந்தியக் கிறீஸ்துவப் பண்பாடு, (இந்தியக் கிறீஸ்துவ இலக்கியம்) போன்றவைப்பற்றி தம்தம் கருத்துக்களில் வேறுபடுகின்றனர். நம்மில் பலரும் லம்பார்டு அவர்களின் காரணங்களை அறிய விழையலாம். எனவே அவருடைய காரணங்களையும், அவரை எதிர்த்துப் பேசியோருக்கு அவரளித்த விடைகளையும் ஈண்டு விளக்கித் தருகிறோம்.

**அவரது கருத்து :** "இந்த மதுரை முறைகளைப்பற்றி விளைந்துள்ள பூசலில் பூணூல், குடுமி, சந்தனம், குளிப்பு முறைகள் போன்றவை பண்பாடுமட்டும் பற்றியவை என்று கூறுபவர் ஒரு சாரார்; அவை சமயம் பற்றியவை எனக் கூறுகின்றனர் மற்றொரு சாரார். எனக்குத் தெரிந்த வரையில் இவை பண்பாடு பற்றியவையே எனத் தோன்றுகின்றன. இவற்றில் சில தெரிந்தவரையில் சமயத்துடன் தொடர்புகொண்டுள்ளன. எனினும் அச்சமயத்தொடர்பை அறுத்தெரிந்துவிட்டு நாம் அவற்றை அனுமதிக்கலாம்."

**அனுமதிக்கக் காரணங்கள் :** *1.* மாணவனின்மேல் பூணூலை அணிவித்துக் கொண்டிருக்கும் வேதியர் பின்வரும் வார்த்தைகளைக் கூறுகிறார்: 'இந்தப் பூணூலினால் உனக்குப் புகழுண்டாகக் கடவதாக'[1] இதே வார்த்தைகள் ஒரு க்ஷத்திரியருக்கும் அல்லது ஒரு வைசியருக்கும் பூணூல் தரும்பொழுது பயன்படுத்தப்படுகின்றன.

2. இந்தியாவின் சாதிகள் உயர்சாதி, கீழ்ச்சாதி என்று பிளவுபட்டிருப்பினும், எல்லாச் சாதிகளும் சிவனையோ விஷ்ணுவையோ வேறு எந்தக் கடவுளரையோ வணங்க முடியும், வணங்குகின்றனர். சைவ சமயத்திலேயே நான்கு சாதிகளும் இருக்கக் காணலாம். எனவே பூணூல் போன்றவை மதக்குறிகளாயிருப்பின்

[1] Cf. page 72

நான்கு சாதிகளும் அவற்றை அணியமுடியும். உண்மையில் மேல்சாதியாரே அவற்றை அணிகின்றனர். எனவே அவை மதம் பற்றியவையல்ல: சாதி பற்றியவையே.

3. பிரம்மனை வணங்குவோர் சமயக்குறியாக அரிசியிலிருந்தும், மற்றப் பூமியிலிருந்து விளையும் சிலவற்றிலிருந்து தயாரித்த ஒருவித நெய்யையும், விஷ்ணுவை வணங்குவோர் களிக்கல்லிருந்து தயாரித்த நெய்யையும், சிவனை வணங்குவோர் விபூதியையும் பூசிக்கொள்கின்றனர். இத்தகைய குறிகள் எல்லோருக்கும் பொதுவானவை ஆனல் சாதிக் குறிகள் அவ்வாறல்ல.

4. மேற்கூறியவற்றைத் தெளிவாகக்கூறின், சமயத்தை எல்லோரும் பின்பற்றலாம் என்பது இந்தியரது கொள்கை. ஆனல் எந்தச் சாதியையும் அபகரிக்க ஒருவராலும் முடியாது. பிறந்தாலுண்டு; இல்லாவிட்டால் இல்லை.

5. இன்னும் சமயமே இல்லாத அந்தணரும் மற்றவரும் பூணூலை அணிகின்றனர். லம்பார்டு அவர்கள் "சமயம் என்றால் இறைவனை வழிபடும் முறை" என்பார். புத்தரும் அவருடைய பாதம் பின்பற்றுபவர்களும் ஒரு கடவுள் உண்டென்பதை ஒப்புக்கொள்ளாதவர்கள். (ஹீனயானம்) ஏனெனில், புத்தர் தம் தந்தை, மனைவி, மகன், நாடு, பதவி இவற்றையெல்லாம் நீத்துக் காடுதேடியது எதற்காக? இவ்வாறு இவ்வுலகத்தினின்று துன்பம், மூப்பு, இறப்பு என்பனவற்றை நீக்கலாம் என்ற கேள்விக்கு விடை காண்பதற்காக. அவரது போதகத்தின்படி ஆசையை அறவே ஒழிப்பின் நாம் துன்பம், மூப்பு, இறப்பு என்பனவற்றை நீக்கலாம் என்று கூறியுள்ளார். நம் கத்தோலிக்கமோ ஆசையை **ஒழிக்க** வேண்டாம்; அதனை நல்ல வழியில் **திருப்ப** வேண்டும் என்று கற்றுத்தருகிறது. துன்பம் போன்றவற்றை நம் ஆண்டவர்தாமே மனிதனுக வந்து எவ்வாறு துன்பத்தை இன்பமாக்கலாமென்பதை கற்றுத்தந்துள்ளார். இன்னும், ஒருவராலும் ஆசை

ஒன்றும் இன்றி இருக்க முடியாது. ஆசையை அறவே ஒழிப்பதற்கு "ஆசையை அறவே ஒழிக்கவேண்டும்" என்ருவது விரும்பவேண்டும். அவ்வாறு விரும்பல் ஒரு ஆசை! இவ்வாறு விரும்பாவிடில் எவ்வாறு அழிக்கவேண்டும். இந்த ஆசை இல்லாவிட்டால் மற்ற ஆசைகளை அழிக்க முடியாது; இந்த ஆசையையேனும் நாம் வைத்திருக்க வேண்டும். எனவே "ஆசையை அறவே ஒழிக்க ஒருவராலும் முடியாது." இத்தகைய ஆசை ஒழிப்பில் கடவுளுக்குப் புத்தர் இடங்கொடுக்க வில்லை. எனவே அவரும் ஒரு நாத்திகரே. நாத்திகரும் பூணூலை அணிந்தால், பூணூல் ஒரு சமயக்குறியா?

6. ஜைனர்கள் சமயக் குறிகளையே அடியோடு ஒதுக்குகின்றனர். இவர்கள் உபநிடதங்கள், வேதாந்தம், இன்னும் மற்றச் சமயம் பற்றிய நூல்களையெல்லாம் "வெறும் கதை" என்று கொள்வர். இவர்கள் ஜைனர் என்பவரின் கொள்கைகளைப் பின்பற்றுவர். இவரும் புத்தரைப்போன்றே அரச மரபினராயிருந்த பின்னர் காடு நோக்கினர். அங்கே ஆடைகளையெல்லாம் களைந்தெறிந்து விட்டு வெற்றுடம்புடன் பதின்மூன்று ஆண்டுகளாகத் தவம் செய்தார். பின்னர் வெளிவந்து (வெற்றுடம்புடனே) தன் கொள்கைகளைப் பரப்பினர். அவரது கொள்கையின்படி உபநிடதம் வேதாந்தம் போன்றவை யாவும் பொய். இவ்வுலகினின்றும் விடுதலை பெறுவதற்கு ஒரே வழி தாராளமான மனது, மற்றவர்களிடம் அன்புடன் நடத்தல் போன்ற நற்குணங்களே. இவ்வாறு நடந்தால் இறுதியில் நித்திய உளதைச் (an absolute entity) சென்றடைவோம். இஃதிவ்வாறு இருக்க, சமயக்குறிகள் யாவும் உபநிடதங்களிலும் முதல் மூன்று வேதங்களிலும் காணப்படுகின்றன. எனவே ஜைனர்கள் இவற்றை ஏற்றுக்கொள்ளாததில் வியப்பு என்ன? இவர்களும் பூணூல் அணிகின்றனர்; குடுமி வளர்க்கின்றனர்; எனவே இவை சமயக்குறிகளல்ல, சாதிக்குறிகளே.

7. இன்னும் சந்நியாசிகள் என்பார் முற்றுந்துறந்த துறவிகள். இவர்கள் உலகின் படோடோபம், பொருள், மனைவி, போன்ற அனைத்தையும் விட்டு நீங்குகின்றனர். சாதிக்குறிகளையும் நீக்குகின்றனர். சமயக்குறிகளை மட்டுமே கொண்டுள்ளனர். இத்தகையோர் பூணூலையும் குடுமியையும் அணிவதில்லை.

8. கொத்தர், கொல்லர், தச்சர், குயவர் போன்றோரிலும் சிலர் தம் கலையில் மேம்பட்டுத் திகழ்ந்தால், அவர்கட்கும் பூணூல் அளிக்கப்படுகிறது. ஆனால் அவர்கள் வேதியருடன் கலந்து பூஜை செய்ய இயலாது.

9. அந்தணர்கள் கிறீஸ்துவர்களாகும்பொழுது மற்றச் சமயக்குறிகளைத் தாமே நீக்கிவிடுகின்றனர். சாதிக் குறிகளை மட்டுமே வைத்துள்ளனர். ஏனெனில் அவர்கள் தாம் இவ்வாறு செய்வதாகச் சத்தியம் செய்து தருகின்றனர்.

10. பத்து ஆண்டுகட்கு முன்பு, 1610-ஆம் ஆண்டில் புச்சேரியோ சுவாமியும் கொன்சாலோ சுவாமிகளும் அடிகளுக்கு எதிராக நடத்திய தீர்ப்பில், 9-வது கேள்வியில் எல்லாப் புதுக்கிறீஸ்துவர்களும்—எனவே அவருள் அடங்கியிருந்த பல அந்தணரும்—இன்னும் சிவதர்மாவும் சந்தனம் தடவுதல் ஒரு சமயக்குறி அன்றுவென்று ஆணையிட்டுள்ளனர். இன்னும் இந்தியாவில் அனுபவம் பெற்றுள்ள தொம் ஜெரோனிமோ தெ அஸ்வெய்தா போன்றோரும் இவ்வுண்மைக்குச் சாட்சியம் கூறியுள்ளனர்.

11. கோவாவின் இரு மேற்றிராணிமார்கள் இவ்வாறே செய்துள்ளனர். கோவையில் முதல் மேற்றிராணியாரான அதி. வந். கஸ்பார் அவர்கள் தானூர் அரசனை இத்தகைய குறிகளுடன் ஞானஸ்நானம் பெற அனுமதித்தார் அவ்வரசன் சில காலங்கழித்து போர்த்துக்கீசியரின் பண்பாட்டைப் பின்பற்ற எண்ணி, இக்குறிகளைக் களைந்தெறிந்தான். சினந்தெழுந்தனர் அவனுடைய உறவினர். அவர்களது சினந்தணிக்குமாறு அவன் கத்தோலிக்க

மறையையே விட்டுவிலக நேர்ந்தது.[1] இன்னும் தற்பொழுது கோவை மேற்றிராணியாராகவிருக்கும் கிறிஸ்தாவோ தேசாவிற்கு முன்பு கோவை மேற்றிராணியாராக விருந்த அலெக்ஸிச் தெ மெனெஸெஸ் கள்ளிக்கோட்டையின் அரசனது ஒன்றுவிட்ட மகனுக்கு இந்தக் குறிகளுடனே ஞானஸ்நானம் கொடுக்க அனுமதித்தார். பின்னர் அதே குறிகளுடன் கோவை நகரிலேயே அவனுக்கு உறுதி பூசுதல் அளித்தார்.

12. இதைப்போன்றே பண்பாடு பற்றியவைகளை அந்தந்த நாட்டு மக்களின் விருப்பத்திற்கு விட்டுவிடுவது மேல் என்பது மற்றொரு சான்றின் மூலமும் விளங்கும். சீனாவில் மத்தேயோ ரிச்சி என்ற சேசு சபைக் குருவானவர் செய்தன.

மத்தேயோ ரிச்சி அடிகளும் தத்துவபோதகரைப் போன்றே இத்தாலிய நாட்டினர். 1582-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் ஏழாம் நாள் சீனாவிலுள்ள மக்காவோ என்ற நகர் வந்தடைந்தார். சீனாவிலும் திருச்சபைக்குக் கதவு அடைபட்டேயிருந்தது. ஐரோப்பிய அறிஞர் என்ற முறையில் உள் நுழைந்தார். கிணற்றுத் தவளைப்போல, சீனாவைத் தவிர வேறொன்றும் அறியாத அம்மக்களுக்கு உலகப் படத்தையும், விஞ்ஞானத்தின் முன்னேற்றத்தையும் காட்டிக் கண் திறந்தார். பயில மிகவும் கடினமான சீன மொழியை நன்கு பயின்று அவர்கட்கு மெதுவாகக் கிறீஸ்துவைக் காட்டலானார். அவர்களிலும் "மாந்தரின்" என்ற அறிஞர் பெருமக்கள் இருந்தனர். இவர்களுடைய பண்பாட்டின்படி இவர்கள் ஒருவகையான உடையை அணிந்தனர்; தலைமுடியை ஒரு குறித்த முறையில் ஒழுங்கு படுத்தினர்; நகங்களை வெட்டுவதில்லை. இத்தகைய வழக்கங்களை மத்தேயோ ரிச்சி அடிகள் அகற்றவில்லை.

---

[1] இதுபற்றி G. Schurhammer S. I. Die zeitgenossischen quellen zur Geschichete Portugiesich-Asiens: (1538—1552) பார்க்க.

எனினும் அவருக்குப் பல துயர்கள் நேர்ந்தன. சீனர்கள் இறந்தவர்கட்கு அதிக மரியாதை காட்டி வந்தனர்; பற் பல சடங்குகள் இருந்தன. அது அவர்களது முறை; இதை ஏற்றுக்கொள்ளாவிடில் ஒருவரும் நாட்டுமக்களாகக் கருதப்படார். அறிஞர் பட்டம் பெறுவதற்கு முன் கன்பூஷியஸிற்கும் இத்தகைய வணக்கங்கள் செலுத்தவேண்டும் என்ற கட்டளை ஒன்று இருந்தது. அதற்கு மாருகச் சென்ருல் என்றும் சீன கத்தோலிக்கச் சீனுவாக மாருது என்பதைத் கண்டார் ரிச்சி அடிகள். சீனர்களின் புத்தகங்கள் பலவற்றைப் புரட்டிப்பார்த்து, அது பண்பாடு பற்றியதே என்பதைக் கண்டார். எனவே அவ்வணக்கங்களை அனுமதித்தார். இவற்றையெல்லாம் செய்துவிட்டு, சீன மிஷனை நல்ல நிலைமையில் இருத்திவிட்டு, 1610-ஆம் ஆண்டு மே மாதம் 11-ஆம் நாள் பீகிங் நகரில் உயிர் துறந்தார். எனவே 1620-ஆம் ஆண்டில் உரோமாபுரியில் பேசிக்கொண்டிருந்த அதி. வந். லம்பார்டு அவர்கள் அவருடைய செயல்களையும் ஒரு சான்ருகக் கொண்டு வந்தார். [1]

14. திருச்சபையின் விசாரகர் குழுவின் முடிவை முன்பின்ஆராயாது தள்ளிவிடலாகாது. அதி. வந். மார்த்தின் தெ மஸ்கரேனுஸும் மற்ற மூன்று மேற்றிராணிமார்களும் இக்குறிகள் சமயக் குறிகளல்ல, சாதிக்குறிகளே என முடிவு செய்துள்ளனர்.

இக்காரணங்களை விளக்கிய பின்னர் அதி வந். லம்பார்டு அவர்கள், தமது முடிவுக்கு எதிராக மற்றவர்கள் கொண்டுவரும் காரணங்களைப் பொய்ப்பிக்கின்ருர்:

---

1 மேற்கூறிய சடங்குகளைப் பற்றி 1631 முதல் 1704 வரை நிகழ்ந்த விவாதத்தின் முடிவில் 1715-இல் 11-ஆம் கிளெமெண்டும் 1741-இல் 14-ஆம் ஆசீர்வாதப்பரும் முறையே "Ex illa die" "Ex quo singulari" என்ற கடிதங்களில் சங். ரிச்சிக்கு மாருக முடிவு செய்தனர். சடங்குகளைமட்டுமே கண்டித்தனரே தவிர, லம்பார்டு சுவாமிகள் கூறும் உடை, தலைமுடி, நகங்கள், போன்றவற்றைப் பற்றி ஒன்றும் கூறவில்லை.

1. அந்தணர்கள் எல்லோரும் இந்து சமயக் குருக்கள்: என்கின்றனர். இதை எதிர்த்து எளிதில் விடையளிக்கிருர். ஒருவேளே சாதிகள் முதன் முதலில் தோன்றிய பொழுது எல்லா அந்தணர்களும் குருக்களாக இருந்திருக்கலாம். ஆனல் இன்று எல்லா அந்தணர்களுக்கும் கோயில்களில் பூஜை செய்ய அநுமதி உண்டா? இல்லே. மாருக, அந்தணர்கள் மட்டுமல்லர் குருக்கள்; அவர்கட்குக் கீழ்ப்பட்ட சாதிகளிலிருந்தும் குருக்கள் உள்ளனர். அவர்களே நம்பியார், பண்டாரங்கள் என அழைக்கின்றனர்.[1] எனவே அந்தக் காரணங்கூறுபவர் இந்தியாவைப் பற்றிய அறிவு படைத்தவரல்லர்.

2. மற்ற யாவற்றையும்விட மிகவும் வன்மை வாய்ந்த மற்ருென்று: கோவைத் திருச்சங்கங்கள் இந்தக் குறிகளேச் சமயக் குறிகளாகக் கருதி இவற்றிற்கு மாருகத் தீர்ப்புக் கூறியுள்ளன. இக்குறிகளேப் பயன்படுத்துவோரைக் கண்டித்துத் தண்டிக்குமாறு போர்த்துக்கீசிய, இஸ்பானிய அரசர்களே வேண்டியுள்ளன. அதி. வந். லம்பார்டு அவர்கள் *1567, 1575, 1585, 1606* இந்த ஆண்டுகளில் நடந்த சங்கங்களின் முடிவைக் கூறிவிட்டு, தமது விடையைத் தருகிருர். இந்தச் சங்கங்கள் யாவும் கோவாவிலிருந்த அந்தணர்களேயேயன்றி மற்ற அந்தணர்களேப் பற்றிப் பேசவில்லே. இஃது ஏறக்குறைய எல்லாத் தாள்களிலும் குறிக்கப்பட்டுள்ள "Brachmanes Goa" அல்லது "Brachmanis Goanis" "கோவாவிலுள்ள அந்தணர்கள்" என்ற சொற்களின் மூலம் விளங்கும். இந்தக் கோவை அந்தணர்கள் உண்மை அந்தணர்களல்லர்; அவர் வைசியர்களே. எனவே அவர்கட்கு மேற்சாதிக் குறிகளிருக்கவில்லே. அவர்கள் சங்கங்களிடம் சாதிக்குறிகளேப் பற்றி பேசவும் நினைத்திருக்க மாட்டார்கள். எனவே

[1] 'நம்பியார்" என்பதை லத்தீனில் "Nambini" என எழுதுகிருர். தாமியன் சுவாமிகள் நம்பியாராக இருக்கலாம் எனக் கருதுகிருர்.

சங்கங்கள் மதுரை அந்தணர்களைப்பற்றி ஒன்றும் குறிக்க வில்லை.

இதன் பின்னர் தன் முடிவுரையைப் பின்வருமாறு தெரிவிக்கிறார்.

1. பூணூல், குடுமி, சந்தனம், ஸ்நானங்கள் போன்றவை உயர்சாதிக்குறிகள். எனினும் இவைகள் மூடக் கொள்கைகளுடன் பழக்க வழக்கங்களுடன் சிக்குண்டு கிடக்கின்றன. இச்சிக்கலைப் பிரித்து, வேண்டாதவற்றை நீக்கிவிட்டு, இவைகளை உயர்சாதிக் குறிகளாக அணிந்து கொள்ள இணங்குவது நல்லது. இருப்பினும் அவைகளை வேண்டுபவர், அக்குறிகளை மூடக்கொள்கையின்படி அவற்றைத் தாங்கள் வாங்கவில்லை என ஆணையிடவேண்டும்.

2. பிற சமயக்குறிகள் அனைத்தையும், "ஒருபோதும் அவற்றைப் பயன்படுத்தமாட்டேன்" என்ற ஆணையுடன் அகற்றிவிடவேண்டும்.

3. இந்தியப் பண்பாட்டு முறைப்படி உயர்சாதியினர் கீழ்ச்சாதியினருடன் பழகுவதில்லை. கிறீஸ்துவர்களிலும் இதே முறை நிலவுகிறது. கிறீஸ்துவ உயர்சாதியினர் தாங்கள் சமயத்தின் பொருட்டு இவ்வாறு பிரிந்து நிற்கவில்லை என்பதைத் தெளிவாக உணர்ந்து, வேண்டும் பொழுது ஆணையிட்டுக் கூறவும் தயாராக இருக்க வேண்டும்.

4. பிற சமயக் குருக்கள் நம் சமயம் தழுவும்பொழுது அந்தக் குருத்துவத்தையும் அதனுடன் சேர்ந்த அனைத்தையும் ஆணையிட்டு விட்டுவிடவேண்டும். அதனுடன் மேற்கூறிய குறிகளைக் குருத்துவத்தின் பொருட்டன்று, சாதியின் பொருட்டே கொண்டுள்ளதாக ஆணையிடவேண்டும்.

"ஒவ்வொருவரும் தாம் அழைக்கப்பட்ட அலுவலிலேயே நிலை பெறுவாராக" என்ற அர்ச். சின்னப்பரின் கூற்றுடன் (1 கொரிந். 7:20) என்னுரையை முடிக்கிறேன் என்று முடிக்கிறார்.

தொம் மிக்கேல் அவர்கள் தத்துவ போதகரின் சார்பிலும், காம்பனெல்லா சுவாமிகள் எதிராகவும் வாக்களித்தனர். மூவரில் இருவர் அடிகளின் சார்பில் வாக்களிக்கவே, 1623-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 31-ஆம் நாள் புனித 15-ஆம் கிரகோரியார் 'ரொமானே ஸெதிஸ் ஆன்திஸ்திதெஸ்'[1] என்று தொடங்கும் சட்டம் ஒன்று எழுதி அனுப்பினர்.

இதில் ''மனிதனின் வலுவின்மையைக் கண்டு மனமுருகி, நம் சமயத்தை ஏற்கனவே தழுவியுள்ள, இனிமேல் தழுவப்போகும் எல்லா அந்தணர்களுக்கும் மற்றவர்கட்கும், இக்கடிதத்தின் மூலம் சாதிக் குறிகளாகப் பூணூலை அணிவதற்கும் குடுமி வைப்பதற்கும் உத்தரவு அளிக்கின்றோம். சுத்தமாக இருத்தல் பொருட்டு ஸ்நானங்கள் செய்வதையும் நாம் ஆட்சேபிக்கவில்லை. எனினும் மூடக்கொள்கைகள் அனைத்தையும் அப்புறம் அகற்றும் நோக்கத்துடன் கீழ்க்கண்டவைகளை அனைவரும் பின்பற்றவேண்டும் : ''

கத்தோலிக்கக் குருவானவரல்லாத எவரிடமுமிருந்து, யோகிகளிடமிருந்தோ, பட்டர்களிடமிருந்தோ, இவற்றைப் பெறலாகாது. ஒரு கத்தோலிக்கக் குருவானவர் மேற்றிராணியாரால் அனுமதிக்கப்பட்ட செபங்களுடன் அவைகளை மந்தரித்துக் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுக்கும்பொழுது, மூடக்கொள்கைகள் அனைத்தையும் அகற்றும்பொருட்டு, நாமறியாத ஏதேனும் இருப்பினும் அவற்றையும் நீக்கும்பொருட்டு, நூலின் மேல் நுனியை வலது கைக்கட்டை விரலாலும், அடி நுனியை இடது கையாலும் பற்றி, வலது கையைத் தூக்கும் அந்தப் பழக்கத்தை அடியோடு நீக்கல் வேண்டும். பகோடாக்களில் ஒருவரும் பூணூல் வாங்கக் கூடாது.

மூன்று பிரிவுகளுடைய நூல் புனித தம திரித்துவத்தை மட்டும் குறிக்க வேண்டும்; அதனை ஒருவரும்

1 'Romanae Sedis Antistites'

செபம் பண்ணும்பொழுது கையில் வைத்திருக்கக்கூடாது. முன்னரே யாரேனும் வேறு யாரிடமுமிருந்தோ, அந்த இந்து முறைப்படியோ பூணூலை வாங்கியிருந்தால் அந்தப் பூணூல்களை யாவும் அடியோடு ஒழிக்கவேண்டும்; அவற்றிற்குப் பதிலாக புதியன மந்தரித்து வைத்துக்கொள்ளலாம். பூணூலுடன் முன்னர் தொடர்பு கொண்டிருந்த எல்லா மந்திரங்களுக்கும் செபங்களுக்கும் தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டது."

இவ்வாறு பதின்மூன்று ஆண்டுகளாக நிலவிய போருக்குப்பின் அமைதி நிலவியது. அடிகளுக்கும் அவரைச்சார்ந்த மற்றவருக்கும் இந்தியாவின் இரட்சணியம் அண்மையில் தோன்றியது. அவர் கண்முன் எண்ணற்ற ஆன்மாக்கள் கிறீஸ்துவின் பொன்னடிகளைப் பின்பற்றும் இன்பக் காட்சி தோன்றி மறைகிறது. எத்தனையோபேர் கிறீஸ்துவுக்காக உயிர்கொடுக்கும் நற்காட்சியைக் காண்கிறார். மூடிக்கிடந்த கதவுகள் திறந்துவிட்டன. மதுரை மக்கள் 'பரங்கி' என்ற பெயரையும் கத்தோலிக்கர் என்ற பெயரையும் ஒரு பொருள் குறிக்கும் தனித்தனிச் சொற்கள் அல்ல என்பதையும் அறிந்து கொண்டனர். கத்தோலிக்கக் குருக்களும் அதிகாரிகளும் பூணூல் சந்தனம் போன்றவை சமயம்பற்றி எழுந்தவை அல்ல, சாதிப் பற்றியவையே என்பதையும் உணர்ந்து கொண்டனர். வெளியே தடுத்து நின்ற மூடிய கதவுகள் திறந்தன. மக்களின் உள்ளங்களில் கதவுகள் திறக்குமா?

*நான்காம் பாகம்*

# திறந்த கதவு

## 16

## தத்துவபோதகர் இட்ட வித்து

பரிசுத்த பாப்பரசரின் கடிதம் வந்துசேருமுன்னரே சேசு சபைப் பெரிய சுவாமியார் ராபர்ட் அடிகளுக்கு உரோமை நகரிலிருந்து எழுதிய கடிதத்தில் நடந்தவை களைப்பற்றி எழுதி இருந்தார். அவைகளின்மூலம் ஏங்கிக் கிடந்த அந்த உள்ளத்திற்கு ஒரு தேற்றம் உண்டாகியது. ஞானஸ்நானம் கொடுக்க முந்திக்கொண்டிருந்த அந்தக் கைகட்கு ஒரு தெம்பு தோன்றியது. புனித சவேரியாரைப் போல நாடெங்கணும் உலகெங்கணும் நடந்து திரிந்து நம் ஆண்டவரைப் போதிக்கத் தவித்திருந்த தாகமும் ஒருவாறு அடங்கலாயிற்று.

புதிய மிஷனுக்கு இனிமேல் திருச்சபையின் மேல் அதிகாரிகளிடமிருந்து தொந்திரவு ஒன்றும் விளையாது. ஆனல் மிஷனை இவ்வாறே இருக்கவிடலாமா? மதுரைக்கு மட்டுமா கிறீஸ்துநாதர்? தான் இறந்த பிறகு மிஷன் அழிந்துபோகாதவண்ணம் அதை எவ்வண்ணம் தடுப்பது? இந்த இரு கேள்விகளுக்கும் விடை காண முயன்ருர் தத்துவபோதகர். அவருக்கு இப்பொழுது நாற்பத்து ஆறு வயது. அவர் செய்த தபசுகளால் அவரது உடல் மிகவும் வாடியிருந்தது. அவரின் மனக்கவலைகளும் உடல் வாட்டத்தை அதிகரித்தன. அவர் இன்றைக்கோ நாளைக்கோ இறக்கக்கூடும். அதற்குமுன்னர் மிஷனை உறுதியாக நிலைநாட்ட வேண்டும். அத்துடன் கிறீஸ்துவை மதுரைக்கு மட்டுமின்றி மற்ற ஊர்களுக்கும் அளிக்கவேண் டும். இதுவே அவரது கவலை.

மதுரையை விட்டுக் கிறீஸ்துவை மற்ற ஊர்களுக்கும் அளிக்கவேண்டுமென்ற ஆவலுக்கு மற்றக் காரணங்கள் உள. திருமலை நாயக்கன் விஜயநகர பேரரசுடன் ஓயாது தொடுத்த போர்கள் அவனைத் திருச்சிராப்பள்ளிக்கு இழுத்துச் சென்றன. எங்கே அரசனோ அங்கே தலைநகர். திருச்சிராப்பள்ளியே ஒரு தலைநகர்போல மாறியது. அரசனின் படைகளும் அரண்மனை அந்தணர்களும் அங்கே சென்றுவிட்டனர். எனவே மதுரைக்கு முன்னிருந்த சோபனம் இன்றில்லை. மதுரையிலேயே மட்டும் கிறீஸ்துவை வைத்துவிட்டால், திருச்சிராப்பள்ளிக்கு யார் அவரைக் கொண்டுபோவது? திருச்சியிலும் மற்றொரு பங்கு அமைக்கலாம் என்ற நோக்குடன் கிளம்பினர்.

அவர் திருச்சிக்கு மட்டுமில்லை, தமிழ்நாட்டில் வெவ்வேறு இடங்களிலும் பங்குகள் அமைக்கப் புறப்பட்டார். அப்பங்குகள் எல்லாப் பகுதியின் மையமாக விளங்கும். அம்மையத்திலிருந்து நம் சமயம் அந்த வட்டாரம் முழுவதும் பரவும். இன்னும் தமிழ்நாட்டில் எந்த நேரத்திலும் வேதகலாபனை எழலாம். அவ்வாறு எழுந்தால் கிறீஸ்துவர்கள் அக்கலாபனை பரவாத மற்றொரு மையத்திற்குச் சென்று தம்மைப் பாதுகாத்துக்கொள்ளலாம். இத்தகைய கருத்துக்களுடனே தத்துவபோதகர் தம் இடத்தை விட்டு வெளியேறினர்.

தத்துவபோதகரைப் போன்ற புகழ்பெற்ற அந்தணச் சந்நியாசி ஒருவர் இவ்வாறு ஓர் ஊரை நாடிச் செல்லுங்கால் பொதுவாகத் தனியே செல்லுவதில்லை. அவருடன் பல அந்தணச் சீடர்களும் மற்றும் பலரும் செல்லுவர். அவரது கையில் ஒன்பது கணுக்களுடைய ஓர் ஊன்றுகோலும், அவரது கையில் தாமே எழுதிய நூல்களில் ஒன்றும் இருக்கும்.

தத்துவபோதகரைப் பற்றி வழங்கிவரும் கதைகளில் அவர் பல்லக்குகளிற் சென்றார் எனக் கூறப்படுகிறது. இஃது பொய். அவர் தாமே சென்ற இடமெல்

லாம் கால் நடையாகவே சென்ருர். திருச்சிக்கு நெருங்கி வருகையில் அவரின் சீடர்களிற் சிலர் முன்கூட்டியே சென்று அவரது வருகைக்குத் தயார் செய்தார்கள். அங்கே முன்னரே மதுரையிலிருந்து அரசனுடன் வந்திருந்த கிறீஸ்துவர்கள் இப்பொழுது அவரை எதிர்நோக்கியிருந்தனர். வழிநடந்து வந்த தங்கள் சுவாமியிடம் தங்கள் ஞான வாழ்வைக் கூறினர். அவரது புத்திமதி கேட்டனர்; ஆசீர்வாதம் பெற்றனர். பின்னர் சில நாட்களிலேயே திருச்சியை விட்டு சேலத்திற்குப் புறப்பட்டார்.

திருச்சியில் ஒரு புதிய பங்கு அமைக்காது உடனே சேலத்திற்கு ஏன் புறப்பட்டார்? திருச்சியில் எல்லாம் ஒரே அல்லோல கல்லோலமாயிருந்தது. புதிய போர் ஒன்று இப்பொழுதோ அப்பொழுதோ ஆரம்பிக்கவிருந்தது. இந்நிலையில் தத்துவபோதகர் மக்கள் தம்மைக் கேட்பதற்கு வருவர் என்று எதிர்பார்க்கவில்லை. ஆண்டவர் என்றும் அமைதியிலேயே உள்ளார். அவர் அமைதியின் உருவம்; அமைதியின் தோன்றல். அவர் செய்வது எதுவும் ஆத்திரத்திலன்று, அமைதியிலேயே.

திருச்சிராப்பள்ளியிலிருந்து சேலத்திற்குப் போகிறவர்கள் சேந்தமங்கலம் என்ற ஊர் வழியே போவர். அடிகள் அவ்வூரை அணுகும்பொழுது அவ்வூர் அரசன் இராமச்சந்திரன் என்னும் பெயருடையான் அவரைத் தம் ஊருக்கு அழைத்தான். அடிகளும் அழைப்பை ஏற்ருர். இவ்விராமச்சந்திரன் தன் தகப்பனின் இரண்டாம் குழந்தை. இவன் தன் தமையனை ஏமாற்றி அரசுடைமையைப் பற்றினன். மூத்தானை மதியாத இளையானைத் தமிழ்ப்பண்பாடு மதிப்பதில்லை. இழுக்குற்ற இராமச்சந்திரன், புகழ்பெற்ற தத்துவபோதகரைத் தம் அகத்தே அழைத்தேனும் இவ்விழிச் சொல்லைப் போக்கலாமென நினைத்தே அவரை அழைத்தான். சிலநாட்களுக்குப்பின் இதையெல்லாம் அறிந்த அடிகள் உடனே

அவ்வூரைவிட்டுச் சேலம் நோக்கினர். அவர் வந்தது ஆன் மாக்களைத் தேடி, நல்வரவேற்பை எண்ணியன்று.

சேந்தமங்கலத்தின் வரவேற்பு சேலத்தில் கிடைக்க வில்லை. சேலத்துப் பாளையக்காரன் சேந்தமங்கலத்தானை விட வன்மையிற்சிறந்தவன். சேந்தமங்கலத்தரசன் தத்துவ போதகருக்கு அளித்த வரவேற்பைப்பற்றிக் கேட்டிருந் தான். தான் இராமச்சந்திரனைவிடச் சிறந்தவன் என்ப தைக் காட்டிக்கொள்ளவோ என்னவோ தம் நாடு தேடி வந்த சந்நியாசியை வரவேற்கவில்லை. அரசன் எவ்வாறோ அவ்வாறே மக்களும். அவர்கள் கொண்டுவந்த உண்மையை ஏற்க மறுத்தனர், ஏற்க விரும்பவில்லை. அவருக்கு உண வளிக்க ஒருவரும் முன்வரவில்லை. இருக்கவும் ஏற்ற இட மில்லை.

ஆம், ஊருக்கு வெளியே ஒரு சிறிய சத்திரத்தில் தங்கினர். அவர் எண்ணங்கள் பெத்லேகம் குச்சை நோக் கிச் சென்றன. விண்ணீத்து மண்தேடி வந்தானை கண் ணேக்கா இவ்வுலகின் கொடுமைதனை என்னே சொல் வோம்! தமக்காக உயிரளிக்க வந்தானுக்குப் பிறக்கவோர் இடமளிக்கா இவ்வுலகை என்னே சொல்வோம்! எசமான னுக்கு மேற்பட்டவனல்லன் வேலையாள். அவர் அங்குச் சிலநாட்கள் பொறுமையுடன் தங்கினர்.

பொறுமை வென்றது. நம் ஆண்டவர் பலரையும் தம்பால் இழுத்துக்கொண்டது மறைந்த வாழ்விலுமன்று, போதித்த வாழ்விலுமன்று, சிலுவையில் தொங்கிய அத் துன்பவாழ்வில்தான். முப்பது ஆண்டுகள் சாதிக்காததை, மூன்று ஆண்டுகளில் சாதிக்காததை மூன்று மணி நேரத் தில் சாதித்தார். கள்வனொருவனை, செந்தூரியன் ஒருவனை, அறைய வந்தாரிற் சிலரைத் தம்பால் ஈர்த்தார். துணிவற் றுக் கிடந்த நிக்கோதேமஸிற்கு துணிவளித்தார். தத்துவ போதகரை மக்கள் தூற்றிக்கொண்டிருக்கும் பொழுது கூட, ஒருவன் துணிந்து தமது வீட்டில் அவருக்கு இடங் கொடுத்தான். அவரும் மெதுவாகப் போதிக்க ஆரம்பித் தார். இஃது வெகுவிரைவில் மக்களின் மனதை மாற்றியது.

பலரும் அவரை நோக்கி வந்தனர்; சிலர் "பார்த்துவிட்டுப் போகலாமே" என்று வந்தனர்; மற்றவர் விவாதித்து "ஒரு கை பார்க்கலாம்" என வந்தனர். எல்லோரையும் அவரின் சொற்கள் ஆட்கொண்டன. அவர் போதித்த உண்மை (தத்துவம்) அவர்கள் மனங்களைக் கொள்ளை கொண்டன.

அவருடைய போதனைகளைக் கூர்ந்து கேட்பவர்களுள் ஒருவன் திருமங்கலம் என்பான். இவனே சேந்த மங்கலத்துப் பாளையக்காரனின் தமையன். இவ்வுலக அரசை இழந்து மறுவுலக அரசைப் பெறுவதற்கே போலும் மிகுந்த ஆவலுடன் அவன் அடிகளிடம் வந்து, நமது சமயத்தைக் கற்றுக்கொள்ளலானன். இயற்கையாக இது சேலத்துப் பாளையக்காரனுகிய செல்லப்ப நாயக்கனின் குருவிற்குப் பிடிக்கவில்லை. பற்பல முறைகளைக் கையாண்டு அவனை அடிகளிடமிருந்து பிரிக்க முயன்றான். வாயால் கூறிப்பார்த்தான்; அது நடக்கவில்லை. பேயால் மிரட்டிப் பார்த்தான்; பலிக்கவில்லை. பற்பலவிதமாக அடிகளைத் தூற்றிப் பேசினன்; இதுவும் பயனளிக்கவில்லை. இறுதியில் இழிய தந்திரம் ஒன்று செய்தான்.

செல்லப்பநாயக்கனை இராமச்சந்திரனின்மேல் போர் தொடுக்கச் செய்தான். எதற்காக? திருமங்கலத்திற்குப் பாளையத்தைப் பெற்றுத் தருவதற்காக. எனவே திருமங்கலம் போரில் கலந்துகொள்வதுதானே நியாயம். போர் நடுவே, ஒரு நாரதச் சூழ்ச்சியின்மூலம் திருமங்கலத்தைக் கொல்லத் தேடினன். கொலைக்கு முன்னரே சூழ்ச்சி வெளியாயிற்று. தப்பித்தேன், பிழைத்தேன் என அண்மையிலிருந்த மாரமங்கலம் என்ற பாளையத்தை நாடிச்சென்று விட்டான் திருமங்கலம். செய்தி கேட்ட அந்தணன் என்ன நினைத்திருப்பானே!

மாரமங்கலத்திலிருந்து திருமங்கலம் அடிகளுக்கு நடந்ததை எழுதி உடனே வந்து ஞானஸ்நானம் கொடுக்குமாறு கேட்டான். அப்பொழுது அடிகள் மதுரையிலிருந்தார். அவர் ஏன் மதுரைக்கு வந்தார்?

ஐரோப்பாவிலிருந்து கப்பல்கள் வந்து சேர்ந்து கொண்டிருக்கின்றன என்ற செய்தியைக்கேட்ட விக்கோ அடிகள் அப்பொழுது சேலத்திலிருந்த தத்துவபோதகரை மதுரைக்கு வரவழைத்தார். பற்பல காரணங்களால் கப்பல்கள் உடனே இந்தியாவிற்கு வரவியலவில்லை. எனவே மதுரையிலேயே சில மாதங்கள் தாமதித்து இருந்தார். இறுதியாகப் பாப்பரசரின் கடிதம் வந்து சேர்ந்தது. கடிதங்கண்டவுடனே சேசு சபைப் பெரிய சுவாமியாருக்கு மிஷனிற்காக இன்னும் அதிக வேலையாட்கள் அனுப்புமாறு கேட்டு எழுதினர்.

இவைகளெல்லாம் நடந்த ஆண்டு 1625. இவ்வாண்டில் மதுரைக்கும் மலபாருக்கும் பெரிய சுவாமியாராகயிருந்தவர் கஸ்பார் தெ ஆன்ந்ரே தா என்பவர். இவர் எப்பொழுதுமே அடிகளுக்கு உற்சாகமூட்டி மதுரை மிஷனுக்காகப் பரிந்துபேசி வந்தவர். திருச்சபையின் அதிகாரிகளே அடிகளுக்கு உத்தரவு அளித்துவிட்டமையின் சற்றும் தயங்காது அவர் அடிகளுக்கு வேண்டிய உதவியளிக்க முன்வந்தார். அடிகளைக் கொச்சிக்கு அழைத்தார். அழைத்து, அவருக்கு வேண்டிய ஆளை அவரையே பொறுக்கி எடுத்துக்கொள்ளுமாறு வேண்டினர். அடிகள் சங். எம்மானுவேல் மார்த்தீன்ஸ் என்பவருடன் மதுரை திரும்பினர்.

இங்ஙிலையிலேயே திருமங்கலத்திடமிருந்து கடிதம் வந்தது. உடனே சேலம் நோக்கி விரைந்தார். சேலத்திலிருந்து மாரமங்கலத்திற்குச் சென்றூர். ஆனல்....திருமங்கலம் அவரை அன்புடன் வரவேற்கவில்லை. அவரிடம் வாய்கொடுத்துப் பேசவில்லை. என்னே மாறுதல்! அடிகள் சிந்தித்தார். மற்றவரைக் கலந்தாலோசித்தார். காரணம் புலன்பட்டது.

அந்தணர்களிற் சிலர் திருமங்கலத்தினிடம் சென்றனர். "உங்கள் தம்பி இராமச்சந்திரன் உங்களுடன் சமாதானம் செய்துகொள்ள விரும்புகிறூர். நம் சேலத்து

இராஜா செல்லப்ப நாயக்கனின் படையெடுப்பை அஞ்சியே இந்த முடிவுக்கு வந்துள்ளார். எனவே உங்களுக்கு அரச பதவி விரைவில் கிட்டிவிடும். ஆனால் ஒன்று: நீங்கள் அரசரானல் கிறிஸ்துவராகக்கூடாது. எங்கள் கருத்துக்கிசையாது நீங்கள் மதமாறினல், உங்கள் மக்கள் உங்களுக்கு எதிராக புரட்சி செய்வார்கள். நாடும் பதவியும் போகும்'' என்றனர். இருதலைக்கொள்ளிபோலத் தத்தளிக்கலாயினன் திருமங்கலம்.

ஒருபுறம் அரசு, மறுபுறம் கடவுள். ஒருபுறம் ஆசை, மறுபுறம் மனச்சாட்சி. தானறிந்த உண்மைத் தெய்வத்தை முப்பது வெள்ளிக்காசுகட்காகக் காட்டிக்கொடுக்க மனந்துணியவில்லை. எனினும் அரசபோகத்தைத் துறக்கவும் தைரியம் வரவில்லை. ஆசைக்கும் மனச்சாட்சிக்கும் இடையே அகப்பட்டுக்கொண்டு தத்தளித்தவன் அடிகளை நல்ல முறையில் வரவேற்கவில்லையெனின் அதில் என்ன வியப்பு!

தத்துவபோதகர் இதனை அறிந்துகொண்டார். எனவே அவனைத் தனியாக விட்டுவிட்டு மாரமங்கலத்திலேயே வேறு வீடு பார்க்கலானர். இவ்வுலக அரசிற்கும் மறுவுலக அரசிற்கும் இடையே இரண்டில் ஒன்றைத் தெரிந்துகொள்வது அவனுடையகடமை. அவனது நித்திய வாழ்வு அவனது தேர்தலைப் பொருத்திருந்தது. அடிகள் அவனுக்காகத் தேர்ந்தெடுக்க முடியாது. எனவே மாரமங்கலத்துப் பாளையக்காரனிடம் போயிருக்க ஒரு வீடும், கோயில்கட்ட இடமும் வேண்டவிருந்தார்.

அந்த ஊர் அந்தணர்கள் தத்துவபோதகர் மீது ஒரு கண் வைத்திருந்தனர். அவர்கள் பாளையக்காரனின் மனத்தை, அவர் அவனிடம் செல்வதற்கு முன்பே, அவருக்கு எதிராக நஞ்சிட்டிருந்தனர். அவர்கள் அவ்வாறு முன்னெச்சரிக்கையாயில்லாவிடில் என்ன நடக்கும் என்பதைச் சேலத்தில் நடந்ததிலிருந்து அறிவார்கள்.

தொடர்பின் பொருட்டு சேலத்தின் பாளையக்கார னுக்கும் தத்துவபோதகருக்கும் இடையே மூண்ட நட்பைப்பற்றி முன்னரே கூற இயலவில்லை. முதன்முதலில் அப்பாளையக்காரன் அடிகளை வரவேற்காததுபற்றி நாமறி வோம். ஊர்மக்கள் மனமாறியபின்னர், அடிகளின் புகழ் அவன் காதிற்குக் கிட்டியது. அடிகள் அவ்வூரின் பற்பல நோய்களையும் வேதாகமத்திலிருந்து எடுத்த வாக்கியங் களின்மூலம் குணமாக்கினர். செல்லப்ப நாயக்கனின் மனைவி நோய்வாய்ப்பட்டாள். நாயக்கன் அடிகளின் செபங்களைக் கோரி நின்றான். விரைவில் நோய் தீர்ந்து குணமுற்றாள் அவன் மனைவி. இதைக் கண்ட செல்லப்ப நாயக்கன் நன்றி உணர்ச்சியை வெளிப்படையாகக் காட் டும்பொருட்டு போதகரை அரண்மனைக்குள் வரவேற்றான்.

இங்கேயிருந்த அந்தணர் சும்மாயிருக்கவில்லை. அடி களின் போதகங்களைப் பற்றிக் கேள்விகள் கேட்டனர். எனவே ஒரு விவாதம் எழுந்தது. விவாதத்தில் அந்தணர் களின் மாயாவாதக் கொள்கைகளை எளிதில் அவர் தவ றென எண்பித்தார். முடிவில் நாயக்கனையே யார் வென் றார் என முடிவு கூறுமாறு வேண்டினர். நாயக்கன் அடி களின் சார்பில் தீர்ப்புக்கூறினான். தீர்ப்புக்கூறியதுடன் நிற்கவில்லை; அடிகளைத் தனியே அழைத்துச்சென்று அவரிடம் ஏறக்குறைய இரண்டு மணிநேரம் அளவளாவி னான். இறுதியில் தன்னிடமிருந்து எதுவேண்டுமானாலும் கேட்குமாறு கூறினான். அடிகள் என்ன கேட்டார்? ஒரு வீடு கேட்டாரா? இல்லை. அவனது நாட்டில் தடை யின்றிப் போதிக்க உத்தரவு கேட்டாரா? இல்லை. அவர் விரும்பியது அவனது நட்பையே. அரசனின் உள்ளம் மகிழ்ச்சியால் நிரம்பியது. தானே அடிகளுக்கு ஏற்ற ஒரு வீடும் தந்தான்.

மற்றுமொரு முறை அரசனிடம் இரு இரசவாதக் காரர்கள் வந்து, தங்கள் வித்தையைப்பற்றிப் பேசலாயி னர். "இரும்பைத் தங்கமாக மாற்றவல்லோம்" என இறும் பூது பேசினர். "தகுந்த வெகுமதி அளிப்பின் இதோ இப்

பொழுதே செய்வோம்" என்றனர். உண்மையை ஆராய விரும்பிய நாயக்கன் அடிகளை அழைத்தான். அடிகள் அவர்களை நோக்கி "நீங்கள் துறவிகளா இல்லறத்தில் உள்ளவர்களா?"

"நாங்கள் இல்லறத்தில் உள்ளவர்கள்; எங்களுக்குப் பிள்ளைகுட்டிகள் உண்டு."

"எனவே அவர்ளைக் காப்பாற்ற உங்களுக்குப் பணம் தேவையல்லவா?"

"அதை ஏன் சாமி கேட்கிறீர்கள்—பணத்தேவை மிகவும் அதிகம், அதனால்தான் நாயக்கரைத் தேடி வந்தோம்"

"ஆனால் நீங்கள் ஏன் உங்கள் வித்தையைப் பயன் படுத்திக்கொள்ளக்கூடாது? ஏன் நாயக்கரைத் தேடு கிறீர்கள்?" என்றார் தத்துவபோதகர்.

சித்தர்களுக்கு என்ன கூறுவதெனத் தெரியவில்லை. நாயக்கனே இதுவரை பெரும் பணக் குவியல்களைப் பற்றி கனவு கண்டுகொண்டிருந்தான். "பெருஞ் செல்வம் பெறக்கூடிய சித்து ஒன்றை அறிந்துகொள்ள அடிகளைத் தனியே அழைத்துச் சென்றான். அங்கே அடிகளிடமிருந்து இதுவரை கேட்டிராத மற்றொரு சித்தைப்பற்றிக் கேட்டான். தண்ணீரை இரசமாக மாற்றிய சித்தரைப்பற்றி அவர் கூறியதைக் கேட்டான். இரசம் இரத்தமானதைப் பற்றியும் கேட்டான். பாவிகளைச் சர்வேசுரன் குமாரர்களாக மாற்றும் சித்தைப்பற்றியும் கேட்டான். ஆச்சரியத்தில் மூழ்கிய நாயக்கன் மறுமுறையும் "எதுவேண்டுமானாலும் கேள்மின்; அதனை அளிப்பேன்" என்றான். ஆனால் மறுமுறையும் அடிகள் உன் நட்பையே எனக்கு அளி என்றார். தான் அவர்க்களித்த நட்பின் சின்னமாக இறுதிவரையிலும் அந்தணர்களின் கடுபிடியினின்றும் காப்பாற்றி வந்தான்.

இவையாவற்றையும் அறிந்த மாரமங்கலத்து அந்தணர்கள் இம்முறை அடிகள் மாரமங்கலத்து அரசனிடம் போவதற்கு முன்னரே அவனிடம் சென்று அடிகளுக்கு எதிராக அவதூறுகள் பலவற்றைக் கக்கினர். அரசனும் அவருடைய பசப்பு மொழிகளால் ஏமாந்துவிட்டான். தத்துவபோதகரின் வேண்டுதல்களுக்கு அவன் செவி மடுக்கவில்லை. முதன்முதலில் சேலத்தில் நடந்தது போலவே இப்பொழுதும் ஊருக்கு வெளியே இருந்த சத்திரத்தை நாடிச்சென்றார்.

ஆண்டவர் தம் ஊழியர்களைக் கைவிட்டு விடுவதில்லை. திருமங்கலம் அவரைத் தேடி வந்தான். ஒரு வேளை அந்தணர்களின் கூற்றில் சூழ்ச்சி ஏதேனும் அவனுக்குத் தென்பட்டிருக்கலாம்; அல்லது அவனது தெய்வப்பற்று உலகப்பற்றை வென்றிருக்கலாம். அவன் அவரை நாடிவரும்பொழுது தன் பிள்ளைகளையும் கூட்டி வந்தான். அவர்களை அடிகளின் கால்களில் பணியக்கூறி சுவாமி தாங்கள் என்னில்லம் வந்தபொழுது தங்களை மதியாது நடத்திவிட்டேன். என்னை மன்னித்தருளும். ஏதோ ஏழை, என்ன செய்வதென அறியாது விழிக்கிறேன். நான் என்னவானாலும் சரி, சுவாமி நீங்கள் இந்தப் பிள்ளைகளையேனும் மோட்சம் சேர்க்க வேண்டும். இவர்கட்கு நம் வேதத்தைப் போதியுங்கள். இவர்கள் கற்றுத் தேர்ந்தவுடன் நீங்கள் இவர்கட்கு ஞானஸ்நானம் கொடுங்கள்" என்றான்.

அடிகள் இதுதான் சமயம் என்று அவனுக்குப் புத்தி மதிகள் புகட்ட முன்வரவில்லை. அறியாதவர்களுக்கே அறிவுரை, துணியாதவர்களுக்கு ஒருவுரையும் உதவாது. துணியவேண்டியது அவரவர் பொறுப்பு; குருக்களின் அல்லது பெற்றோர்களின், அல்லது மூத்தோர்களின் பொறுப்பன்று. எனினும் அவர் அவருடைய பிள்ளைகட்குப் போதிக்க ஏற்றுக்கொண்டார். சில மாதங்கள் கழித்து அவர்கள் ஞானஸ்நானம் பெற்றனர்.

அவர்களுள் மூத்த பையனுக்கு இருபது வயது. அவன் தன் சமயத்தின் மேல் மிக்கப் பற்றுக்கொண்டவன். எனவே இவன் தனக்குச் சமயத்தைக் கற்றுத் தந்த குருவின்மேலும் மிகுந்த அன்பு பூண்டவன். அவர் சத்திரத்தில் பட்ட துன்பங்களை அவன் பார்க்கச் சகியாது, அவருக்கு வேறு இடம் தேடிக்கொடுத்தான். அவனுக்கு இருந்த ஒரே ஆசை "நான் பெற்ற செல்வம் பெறுக இவ் வையகமும்" என்பதே. தான் பெற்ற இன்பத்தைத் தந்தையும் மற்ருேரும் பெறவேண்டும் என்பதே. இதற்காக அடிக்கடி இறைவனை வேண்டிவந்தான். இவனை மற்றக் குழந்தைகளும் பின்பற்றினர். ஒருநாள் திருமங்கலமும் மற்றக் குழந்தைகளும் அடிகளும் கூடியிருக்கும் பொழுது அடிகள் இவனை நோக்கி "உன் தந்தையின் மனமாற்றத்திற்காக நாள்தோறும் வேண்டிக்கொள்கிருயா?" எனக் கேட்க அவர்களில் மிகவும் இளையவன் "வேண்டிக்கொள்கிறேனு? எங்கப்பா மனமாருதவரை எங்களால் வேறென்ன செய்யமுடியும்?" என்று விடையிறுத்தான். இது திருமங்கலத்தின் மனதில் பசுமரத் தாணிபோல் பதிந்தது.

ஆனுல் இன்னும் திருமங்கலம் மனமாறவில்லை, கடைசி வரப்பிரசாதத்தையும் ஆண்டவரளித்தார். ஓர் அந்தணன் மிகவும் நோய்வாய்ப்பட்டுக் கிடந்தான். அக் குலத்தாரின் மாயாஜாலங்களெல்லாம் பலிக்கவில்லை. இறுதியில் அவன் அடிகளை அழைத்துவரக் கட்டளையிட்டான். வந்த அடிகளிடம் "நீங்கள் என்னைக் குணப்படுத்தினுல், நான் உங்கள் சமயஞ் சேருவேன், நான் மட்டுமல்ல. என் வீடு முழுவதும் ஞானஸ்நானம் பெறும். அத்தோடு நிறுத்துவேனு, ஒரு பெரிய கோயில் எழுப்பி அதன் அருகே ஒரு குளமும் வெட்டுவேன்...என்றெல்லாம் அடுக்கிக் கொண்டே சென்ருன். இதையெல்லாம் கேட்ட அடிகள் நம்பவில்லை. இருப்பினும் சுற்றி இருந்தவர்களை நோக்கி "எனக்கு இவன் இந்த ஆணைகளின்படி நடப்பான் என நம்பிக்கையில்லை....எனினும் சுற்றி நிற்கும் உங்கள்

பொருட்டு என் கடவுளை நோக்கி வேண்டுகிறேன்" எனக்கூறி வேண்டினர். வேண்டுதல் கேட்கப்பட்டது. நோயாளி நலமுற்றான். எதிர்பார்த்தபடி அவன் தன் சொற்படி நடக்கவில்லை.

ஆனல்... சுற்றி நின்றவர்களில் ஒருவன் திருமங்கலம். அவனது மனம் மாறிவிட்டது. வீடு திரும்பியவுடன் தன் தாய், மனைவி, மற்றோர் அனைவரிடமும் தன் முடிவை விளக்கிக்கூறினன். குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு தத்துவ போதகரிடம் வந்தான். வந்து ஞான உபதேசங் கற்பித்து ஞானஸ்நானம் தருமாறு கேட்டான். இது நடந்தது 1625-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் முதல்நாள். அதே ஆண்டு கிறீஸ்து பிறந்தவிழா அன்று அக்குடும்பம் முழுவதும் ஞானஸ்நானம் பெற்றது. கிறீஸ்துவின் அமைதி குடும்பம் எங்கணும் நிலவியது. திருமங்கலத்தின் தம்பி இராமச்சந்திரனும் அவனைச் சமாதானத்திற்கு அழைத்தான்.

திருமங்கலத்தின் கடிதமே தத்துவபோதகரை மாரமங்கலத்திற்கு அழைத்து வந்தது. ஆனல் திருமங்கலம் மனமாறுதற்கு முன்னரே பலரும் அவர் போதித்த உண்மையை ஏற்றுக்கொண்டனர். அவர்களது மனமாற்றத்திற்கு வழி வகுத்தது அவர்மூலம் தீர்ந்த நோய்களின் எண்ணிக்கையே. அவர் போதித்த கிறீஸ்து, கண்ணற்றோருக்குப் பார்வையும், செவியற்றோர்க்குக் கேட்டலையும், நோயுற்றோர்க்குச் சுகத்தையும் அளித்துச் சென்ருர். கிறீஸ்து செய்த புதுமைகளே அவரது தெய்வத்துவத்திற்குச் சான்று பகன்றன. அவ்வாறே தத்துவபோதகர் நோய்களைத் தீர்த்தது அவர் போதித்த தத்துவத்தின் தெய்வத்தன்மைக்குச் சான்று பகர்ந்தது. ஏறக்குறைய நாற்பதின்மர் 'தத்துவத்தை' ஏற்றுக்கொண்டனர்.

நாற்பதின்மரையும் திருமங்கலத்தையும் இழந்த அந்தணர்கள் வாளாயிருப்பார்களா? 'நாரதக் குறும்பு விளைக்கலாயினர். இவன் ஒரு மந்திரவாதி. பேயின்மூலம்

நோய்களைத் தீர்க்கிறான் என வதந்தியை எழுப்பினர். இத்தகைய வாய்ப்பிற்காகக் காத்துக்கொண்டிருந்தது போல தொற்றுநோய் ஒன்று ஊரெங்கும் பரவலாயிற்று. நாள்தோறும் பலரும் மடிந்தனர். மந்திரவாதிகளின் வித்தைகள் பயனளிக்கவில்லை. காற்றுள்ளபோதே தூற்றிக்கொள் எனக்கூறி அவர்களிற் சிலர் தத்துவபோதகரே இதற்குக் காரணம் என்றும் அவரை முதலில் வெளியேற்ற வேண்டும் என்றும் அரசனிடம் கூறி வைத்தனர்.

அரசன் அவரை வெளியேற்றவேண்டும் என்று எண்ணியிருப்பதை அறிந்தான் இளவரசன். இவ்விளவரசன் அடிகளின் நண்பன். போதகர்மேற் கொண்ட அன்பால் அவரை அணுகித் தன் தந்தையின் கருத்துக்களைத் தெரிவித்து, அவரை உடனே தப்பித்துக்கொள்ளுமாறு வற்புறுத்தினன். 'தப்பி ஓடுவது' என்பதைப் போதகர் ஏற்கவில்லை. உறுதியுடன் இருந்தயிடத்திலேயே இருக்கப் போவதாகத் தெரிவித்தார். நல்லவேளை அரசனும் அவரை வெளியேறுமாறு கட்டளையிடவில்லை. மக்களும் அவரது அஞ்சாமையைக் கண்டு வியந்து "உண்மை எதற்கும் அஞ்சாது" என்றபடி அவர்பால் உண்மையுள்ளது என்பதைக் கண்டு அவரை எதிர்ப்பதை நிறுத்தினர்.

துன்பம் அகன்றது. எனினும் அடிகள் மாரமங்கலத்தில் இனிமேலும் தங்க இயலவில்லை. மதுரையிலிருந்த விக்கோ அடிகளின் உடல் நலக்குறைவைப்பற்றித் தகவல் வந்திருந்தது. எனவே மார்த்தீன்ஸ் அடிகளை மாரமங்கலத்திற்கு அழைத்துவிட்டு தத்துவபோதகர் மதுரைக்குப் புறப்பட்டார். அவர் திருச்சியை நெருங்கிக்கொண்டிருக்கையில் விக்கோ அடிகளது உடல்நிலை சரியாய்விட்டது என்ற தகவல் கிடைக்கவே திருச்சியிலேயே தங்கினர்.

அவரைத் திருச்சியில் தங்கச்செய்தது அவரின் பழைய கிறிஸ்துவர்களின் தேவைகளே. பூசை செய்ய ஒரு குருவானவரும் இல்லை; பாவசங்கீர்த்தனம் கேட்பதற்கும் யாருமில்லை. துன்பதுயரங்களில் உறுதுணையாயிருக்க

ஒருவருமில்லை. எனவே துன்பத்தால் மேலிட்டு உழன்ற தம் மக்களைக் கண்காணிப்பதற்காகவே அங்கே தங்கினார். அவர்களது சோகக் கதைகளைக் கேட்டு ஆறுதல் அளித்தார். அவர்களின் ஐயங்களை அகற்றித் தெளிவு புகட்டினார். அவர்களுடைய பாவங்களைப் பாவசங்கீர்த்தனத் தொட்டியில் கேட்டுப் பாவப் பொறுத்தலளித்தார். பலிப்பூசை வைத்து அவர்களது ஆவலை ஆற்றினார். திவ்விய நன்மை வழங்கி அவர்களது ஞானப்பசியைத் தணித்தார்.

இவைகளையெல்லாம் முடித்த பிற்பாடு இந்து நண்பர்களையும் வரவேற்றார். அவர்களுடைய கேள்விகளுக்குப் பதிலளித்தார். அவர் எவ்வாறு அவர்களுடன் விவாதித்தார் என்பதைச் சற்றே விவரிப்போம். இதுவே அவரது முறை.

"இந்துக்களை மனமாற்றுவதில் நாம் பின்பற்ற வேண்டிய முறை" பற்றி 1627-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் போர்த்துக்கலிலிருந்த மாஸ்கரனேஸ் அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் தத்துவபோதகர் கூறுகிறார்:

"நாங்கள் இப்பொழுது பின்பற்றும் முறையே சிறந்த முறையாகத் தோன்றுகிறது; இது எங்கள் முடிவு அன்று; அனுபவம் கூறும் முடிவு. இந்துக்கள் நம் சமயத்திற்கு எதிராகப் பல தப்பெண்ணங்கள் கொண்டுள்ளனர். அவற்றை நீக்கி உண்மையை வழங்க நாம் செய்யவேண்டிய முதற்காரியம், எடுத்த உடனே அவர்களது சமயத்தையும், கடவுளர்களையும் எதிர்த்துப்பேசலாகாது. ஏனெனில் அவற்றை நாம் தாக்கியவுடனே அவர்கள் தாக்கிப் பேச ஆரம்பிக்கிறார்கள். பின்னர் அவர்களை மனமாற்றுவது மிகவும் கடினம்.

பரோணியஸ் என்பவர் எஃஸோடஸ் புத்தகத்தில் இருபத்திரண்டாம் அதிகாரத்தில் இருபத்தெட்டாம் வாக்கியமான 'தேவதைகளுக்கெதிரே பேசாதிருப்பாயாக' எனக் கூறியிருப்பதை இதே பொருளில்தான் கொள்கிறார்.

"இன்னும் அப்போஸ்தலர் அர்ச். தோமையாரும் இவ்வாறே செய்ததாகக் கூறுகின்றனர். மெடஃப்ராஸ்டஸ் என்பார் அவரைப்பற்றி எழுதுவது: 'புனித தோமையார் பேய்களின் சமயத்தைத் தழுவினர் என்பதைக் கண்டார்; இத்தகைய சமயங்கள் அவர்களின் மனங்களில் ஆழமாகப் பதிந்துள்ளதையும் கண்டார். மனதில் நெடுங்காலப் பழக்கத்தால் ஆழமாகப் பதிந்துள்ளதை எளிதில் அகற்ற முடியாது. அதனை அகற்ற மெதுவாக இணங்கச் செய்ய வேண்டுமேயன்றி பலாத்காரம் செய்யக்கூடாது என்பதையும் அவரறிவார். எனவே அவர் எடுத்தவுடனே அம்மதங்கள் பொய் என நிரூபிக்காது முதலில் அவர்களுடன் அன்புடன் அளவளாவினர்.

"நான் இவைகளை எதற்காகக் கூறுகிறேன் எனின், எங்கள் முறையே மிகப் பழைய அப்போஸ்தோலிக்கக் காலங்களிலிருந்தே நடைமுறையில் இருந்துவந்த முறையாகும் என்பதை மெய்ப்பிக்கவே. நாங்கள் சேசுக்கிறீஸ்துநாதரை உண்மையிலிருந்து வேறுபடுத்தாது மக்களுக்குப் பிரசங்கிக்கிறோம் என்பதை மெய்ப்பிக்கவே.

"எடுத்துக்காட்டாக: நான் திருச்சியில் இருந்தபொழுது மண்டலபதி ஒருவருடன் விவாதித்தேன். நான் கடவுள் என்றால் இன்ன குணங்கள் உடையவர் என்று கற்றுத்தந்தேன். முதலில் கடவுள் உண்மையைத் தவிர வேறொன்றும் பேசவல்லாரென்றேன். உடனே அந்த மாணவர் 'அப்படியானல் இந்தக் கடவுளர் உண்மைக் கடவுளாக இருக்கமுடியாது; ஏனெனில் எத்தனையோ முறை பொய் சொல்லி உள்ளனர்' என்றார்.

"பின்னர் நான் சொன்னேன்; 'கடவுள் எல்லாம் அறிந்த அறிவாளி, அவரால் தவருகவே நடக்க முடியாது'.

'அவர் அப்படியானல் இந்த இந்து தேவதைகள் எத்தனையோ முறை அறியாது விழித்தனர்; எனவே அவர்கள் கடவுள் இல்லை'.

"ஆசிரியரின் வேலை உண்மையை எடுத்துக்கூறி விளக்குவதே; மாணவரின் வேலை அந்த உண்மையின்படி நடப்பதற்கு என்ன செய்யவேண்டும் என்பதை தெளிவாக வரையறுப்பதே. இதற்கு ஆசிரியர் விளக்கங்கூற தேவையில்லை."

"அந்த மாணவர் ஒரு வைஷ்ணவராக இருந்தார். எனவே அச்சமயத்திற்குரிய எல்லாக் குறிகளையும் அணிந்திருந்தார். முக்கியமான குறிகள் தலையிலிருந்த நாமமும், கைகளிலிருந்த வேறுசில குறிகளுமே. ஒருநாள் என்முன் அமர்ந்த அந்த மாணவர் 'சுவாமி, நான் விஷ்ணுவைக் கும்பிட்டபொழுது இவற்றை அவன்மேல் கொண்ட அன்பால் அணிந்துகொண்டேன். இப்பொழுது நான் அவனைத் தெய்வமென்றே நம்பக்கூட இல்லையே. இவ்வாறிருக்க நான் இவைகளை அணிவது அறிவிற்கொப்பவில்லை' எனக்கூறி நாமத்தையும் மற்றக் குறிகளையும் உடனே அழித்துவிட்டார்.

"நான் முதன்முதலிலேயே இவருடைய தெய்வங்கட்கு எதிராகப் பேசியிருந்தால் உடனே எழுந்து போயிருப்பார். ஒருநாளும் நம் சமயம் சார்ந்திருக்கமாட்டார்."

இதுவே அடிகள் மதுரையிலும் மற்ற இடங்களிலும் பின்பற்றி வந்த முறை. திருச்சியில் அவர்க்கு உதவியாக இருந்த புதுக்கிறீஸ்துவர்களில் ஒருவர் கம்மாளர் வகுப்பைச் சேர்ந்தவர். அவரைப்பற்றி விரித்து அடுத்த அத்தியாயத்தில் கூறுவோம்.

கூடிய விரைவில் அடிகள் திருச்சிராப்பள்ளியில் பதினேழு ஞானஸ்நானங்கள் கொடுத்தார். திருச்சியிலும் ஒருவாறு நிலைத்த திருச்சபை ஒன்று ஏற்படுத்தியாய்விட்டது.

இந்த நிலையிலேயே லெயேர்சியோ அடிகளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. இப்பொழுது அவர் மறுமுறையும் மலபார் மாகாணப் பெரிய சுவாமியாராக மாறியிருந்தார்.

மூன்று வேதபோதகர்களும் தூத்துக்குடியை நோக்கி நடந்தனர்.

லெயேர்சியோ அடிகளும் ராபர்ட் அடிகளும் சந்தித்ததை இங்கு விவரிக்கவும் வேண்டுமோ? இருவரின் உள்ளங்களும் எவ்வாறு உரையாடின என்பதை வாசகரின் கற்பனைக்கு விட்டுவிடுவோம். ஈண்டு அவர் மதுரை மிஷனில் செய்த சில மாறுதல்களை மட்டும் நோக்குவோம்.

முதன்முதலில் விக்கோ அடிகளைப்பற்றி மிகவும் கவலையுற்றார். அவரது உடல்நிலை மிகவும் தளர்ந்துவிட்டது. அவருக்கு ஓய்வு அளிக்கவும், அவரது உடல்நிலையைப் பாதுகாக்கவும் அவரை மாரமங்கலத்திற்கு அனுப்புமாறு முடிவு செய்தனர். மதுரையில் தத்துவபோதகரையும், திருச்சிராப்பள்ளியில் மார்த்தீன்ஸ் சுவாமிகளையும் பணியாற்றுமாறு கூறினார்.

இவ்வாறு பிரிந்தவர் மறுமுறை கூடினரா எனக் கூறுவதற்கில்லை. 1630-ஆம் ஆண்டு லெயேர்சியோ அடிகள் உயிர் நீத்தார். அவர் மதுரை மிஷனுக்கு ஆற்றியுள்ள தொண்டுகளை இந்நூலைப் படித்த ஒவ்வொருவரும் நினைவு கூருவர் என்பது தெளிவு.

விக்கோ அடிகளின் உடல்நிலையும் மோசமாகிக் கொண்டே வந்தது. இதே ஆண்டில் அவர் இறக்காவிடினும் அவருடைய செயல்கள் குறைந்துகொண்டே வந்தன. எனவே அவரது வரலாற்றையும் இங்கேயே முடித்துக் கொள்கிறோம். துன்பகாலத்தில் தத்துவ போதகருக்கும் அவரது மதுரை மிஷனுக்கும் ஊன்றுகோலாக, உறுதுணையாக நின்றார். அதன் வெற்றிக்காலத்தில் அதனை அனுபவிக்க வேண்டாதவர் போன்று 1638-ம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் இருபதாம் நாள் இறைவன் திருப்பதம் எய்தினார்.

தத்துவபோதகர் மதுரையில் கூடியவரையில் வேலை செய்துகொண்டிருந்தார். பன்முறை அந்தணர்களிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் இன்னல்கள் விளைந்துகொண்

டிருந்தன. எனினும் கரிய மேகத்தின் நுனியிலேயும் கண்களைப் பறிக்கும் மின்னலைக் காண்கிறோம். அவ்வாறே காதுக்கும் மனத்திற்கும் இனிமை அளிக்கும் சில செய்திகள் வந்தன. நாயக்க மன்னவன் அடிகளுக்கு உறுதுணையாயிருந்தான். அவன் குடும்பத்திலிருந்து ஒரு சிறிய பையன் சிலமுறைகள் அடிகளைக் காண வந்துகொண்டிருந்தான்.

இன்பமும் துன்பமும் கலந்ததே வாழ்க்கை என்பதைத் தெளிவுற உணர்ந்த தத்துவபோதகர் எந்நேரமும் இடியோசைக்கும் துன்பத்திற்கும் விழிப்பாயிருந்தார். எனினும் இத்துன்பம்போய் இன்பம் வரும். சிலுவைபோய் உயிர்ப்பு வரும். இருட்டுப் போய் வெளிச்சம் வரும் என்ற நம்பிக்கையே அவரை இவ்விடர்களையெல்லாம் அஞ்சா நெஞ்சத்துடன் எதிர்க்கச் செய்தது.

## 17

## இரத்தத்தால் நீர்வாத்தல்

தத்துவபோதகர் இட்ட வித்து வளர்ந்துகொண்டிருந்தது. அவ்வித்திற்கு அவரே ஓரளவு நீர்பாய்ச்சினர். எனினும் அவ்வித்தின் வளர்ச்சிக்கு உதவியவர்கள் மற்றும் சிலர் உளர். விக்கோ அடிகள் வித்திட்டவருள் ஒருவரே. ஆனல் எம்மானுவேல் மார்த்தீன்ஸ் அடிகளும் திருச்சிராப்பள்ளிக் கம்மாளர் ஒருவரும் முஃதியுடையான் என்ற ஒரு பண்டாரமும் திருச்சிராப்பள்ளியிலும் மாரமங்கலத்திலும் போதகர் இட்ட வித்தைப் போற்றிக் காத்து வளர்த்தனர். இவர்கள் யார்? தத்துவபோதகர் இட்ட வித்தை எவ்வாறு வளர்த்தனர் என்பதை ஈண்டு நோக்குவோம்.

சங். எம்மானுவேல் மார்த்தீன்ஸ் ஒரு போர்த்துக்கீசிய சேசு சபைத் துறவி. அவர் 1625-ஆம் ஆண்டு தத்துவபோதகருடன் மதுரைக்கு வந்தார். இங்கே இரண்டு ஆண்டுகள் விக்கோ அடிகளுடன் தங்கித் தமிழ்

கற்றுக்கொண்டிருந்தார். பின்னர் தத்துவபோதகரின் விருப்பத்தின்படி மாரமங்கலத்தில் பணியாற்றினார். லெயேர்சியோ அடிகளின் ஆணைப்படி நிகழ்ந்த மாற்றங்களில் ஒன்று இவரைத் திருச்சிக்கு மாற்றினது.

திருச்சியில் இவர் ஒரு கம்மாளரைச் சந்தித்தார். இந்தக் கம்மாளரது பெயர் இதுகாறும் அகப்படவில்லை. எனவே அவரைக் கம்மாளரென்றே அழைப்போம். கம்மாளர் என்பார் கொத்தனர் வகுப்பைச் சார்ந்தவர். திருச்சபை என்ற கட்டடத்தைத் திருச்சிராப்பள்ளியில் கட்ட மிகவும் உதவியவர். உண்மையிலேயே தன் பெயருக்குகந்தவர்.

இவர் நம் திருச்சபையில் சேருவதற்குமுன்பே "தன் நெஞ்சறிவது பொய்யற்க" என்ற வாய்மொழியின்படி நின்றவர். "உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்" என்றவாறு திருச்சி நகர் முழுவதும் பெயர் பெற்றவர். தனக்குவமை இல்லாத கடவுள் ஒருவரைக் கண்டு அவர்தம் நற்றாள் தொழவேண்டும் என்ற ஆவலால் தூண்டப்பட்டு பற்பல சமயங்களையும் பயின்று எது உண்மைக் கடவுளை வணங்குகிறது என அறிய முயன்றார். இம்முயற்சியில் கீழ்க்குலத்தைச் சார்ந்த ஒரு வள்ளுவனைக் கண்டு அவன் கற்பித்தவைகளை ஏற்று, சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி துலையில்லார் கண்ணுங் கொளல் என்றவாறு தமக்கு ஒப்பில்லாத தாழ்ந்த குலத்தினரிடமிருந்து தோல்வி ஏற்றுக்கொண்டு அவருக்குப் பணிந்து நடந்தார்.

புதிய குருவின் போதனைகள் மனத்திற்கு மற்றவைகளை விட அதிகம் ஒத்துவரினும் அவை முழுதும் பொருந்துவனவாகவில்லை. இவ்வாறு உண்மைக்காக ஏங்கி நிற்கும் வேளையில் தத்துவபோதகரின் புதிய வேதத்தைப்பற்றிக் கேள்விப்பட்டார். இவருக்கு மதுரைக்குப் போகவும் ஒரு வாய்ப்புக் கிட்டியது. இவருக்கு அடிக்கடி வேலை தந்த எசமானர் அரசனின் படையில் ஒரு தளபதியாயிருந்தார்.

அவரது வேலையால் அடிக்கடி அவர் மதுரைக்குப் போக நேர்ந்தது. அவருடன் சேர்ந்து கம்மாளரும் மதுரைக்குப் போய் அங்கே கிறீஸ்துவர்களுடன் நட்புக்கொள்ளலானூர். இக்கிறீஸ்துவர்கள் அவரை விக்கோ அடிகளிடம் கூட்டி வந்தார்கள். சிலநாட்கள் கழிந்தபின் அவர் ஞானஸ்நானம் பெற்ருர். இவைகளெல்லாம் நடந்தது 1623 அல்லது 1624-ஆம் ஆண்டில்.

திருச்சிக்குத் திரும்பியபிறகு அவர் தம் புதிய வேதத்தைக் கற்பதிலும் அவற்றைப் பரப்புவதிலும் காலத்தை செலுத்தத் தயங்கவில்லை. அடிகள் எழுதிய ஒரு நூல் தேவோக்கியத வேத லக்ஷணங்கள் என்ற நூல். அந்நூலைத் தாம் படித்தவுடன், அதைத் தாமறிந்த பலருக்கும் அளித்தார்.

இவ்வாறு, கம்மாளர் இந்தப் புத்தகத்தைத் தம் பழைய குருவிற்குக் கொடுத்தார். இந்த வள்ளுவன் கீழ்க் குலத்தைச் சார்ந்தவர். எனினும், கல்வி கேள்விகளிற் தேர்ந்து விளங்கியவர். உடையார்முன் இல்லார்போல் எக்கற்றுங் கற்ருர் கடையரே கல்லாதவர். எனவே செல்வரும் உயர்குலத்தோரும் குலங்கருதாது அவரது உயர்வை ஏற்றுக்கொண்டிருந்தனர். அந்த நாட்களில் உயர் குலத்தார்க்கே உரித்தான குதிரையைப் பயன்படுத்தும் உரிமையும் இவர்க்கிருந்தது. இவரிடம் இருந்த ஒரு சிறந்த குணம்: உண்மையைக் கண்டால் அதனை ஏற்பது. "எது என்னவாயினும் சரி என் வாழ்வு உண்மையைக் கண்டு அடைந்து அதனை உலகிற்கும் அளிப்பதே" என்பதே அவர் குறிக்கோள்.

இவர் ஒரு பண்டாரம். பண்டாரம் என்பார் கீழ்க் குலத்துத் துறவி. அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும் வேண்டிய எல்லாம் ஒருங்கு என்ற புலவனின் திருவாக்குப்படி அனைத்தையும் ஒருசேரத் துறந்தவர் இவ்வள்ளுவர். யான் என்னுடைய என்னும் செருக்கையும் அறுத்தவர். இவரது சொல் வன்மையும்

கொள்கை வன்மையும் மற்றப் பண்டாரங்களையெல்லாம் இவருக்குத் தலைவணங்கச் செய்தன. இம்மையில் புகழும் மறுமையில் வாழ்வும் உடையவரென மக்கள் மதித்து வந்தனர்.

இவரிடம் கம்மாளர் அந்தப் புத்தகத்தை அளித்தார். இவரும் அதை வாசித்தார். அதை வாசித்தபின் தான் போதிப்பதோ மற்றவர்கள் போதிப்பதோ தேவோக்கிய மான (தெய்வத்திற்கு உகந்த) சமயமில்லை என்பதை உணர்ந்தார். இத்தகையவற்றை உணர்ந்தவர்கள் எவருமே செய்யக்கூடியவை இரண்டு: ஒன்றில் அவ்வுண்மையை மனமொத்து ஏற்று அதன்படி தெய்வத்திற்கு ஒவ்வாதவற்றைக் களைந்து எறிவது; அல்லது இவ்வுண்மையை ஏற்பதால் உண்டாகும் இன்னல்களுக்கு அஞ்சி, அதனை ஏற்காது, அந்த உண்மையைக் கூறினவரைத் தூற்றுவது. பின்னதையே நம்மிடையே வழங்கிவரும் பழமொழி ஒன்று உணர்த்துகிறது. 'உள்ளதைச் சொன்னல் உடம்பெரிச்சல்.' நம் வள்ளுவர் மனச்சாட்சியின்படி நின்றவரானதால் இனி வரவிருப்பது கண்டு அஞ்சாது உடனே தன் போதகத்தைத் துறந்தார். தான் வாசித்த அந்த நூலின் ஆசிரியரை அணுகி அவர் போதித்த சமயம் தேவோக்கியமான வேதமா என அறியவிருந்த ஆவலுடன் தத்துவபோதகரை நாடினர்.

இவைகள் நடந்தபொழுது, 1626-ஆம் ஆண்டில் தத்துவபோதகர் மாரமங்கலத்தில் இருந்தார். அந்த ஆண்டு ஜுலை மாதம் முப்பத்தொன்றும் நாள் வள்ளுவர் தத்துவபோதகரை அடைந்தார். தன்னைப்பற்றியும், தன் குலத்தையும், தன் இரண்டாயிரம் சீடர்களைப்பற்றியும் தத்துவபோதகரிடம் பேசினர். அவருடைய புத்தகத்தைப் பற்றியும், தன் ஆவலைப்பற்றியும் பேசினர். இறுதியாக அடிகளுடைய மாணவராக வேண்டுமெனக் கூறினர்.

வந்தவரை வரவேற்று உபசரித்த அடிகளுக்கு அவரை ஏற்றுக்கொள்வதா இல்லையா எனப் புரியவில்லை.

கீழ்க் குலத்தைச் சார்ந்த ஒருவனுடன் தொடர்பு கொண்டுள்ளதை அறிந்தால் மாரமங்கலத்துச் சாதிவெறி பிடித்த அந்தணர்கள் என்ன கூறுவார்களெனப் புரியவில்லை. இது ஒருவேளை புதிய மிஷனையே அழித்துவிடவும் கூடும். ஒருவனுக்காக மதுரை, திருச்சி, சேலம், ஏன் இந்தியா இவை எல்லாவற்றின் ஆன்ம இரட்சணியத்தையும் தடுக்கலாமா?

எனினும், கிறீஸ்துநாதர் இவனுக்காகவும் இறந்தார். இவன் மட்டுமே இவ்வுலகில் பாவங்கட்டிக்கொண்டிருப்பின் அவனை மீட்பதற்காக இம்மண்ணுலகு போந்திருப்பார். இன்னும் கத்தோலிக்க மதம் அந்தணருக்கு மட்டும்தானு? இல்லை. உலகில் பிறந்துள்ள ஒவ்வொரு மகனுக்கும் மகளுக்கும் கத்தோலிக்க மதம் பொதுச் சொத்து. ஆம், ஒரு சொத்து அது; பூர்வீகச் சொத்து, பரலோகப் பிதா தம் சுதனின் மூலம் இவ்வுலகனைத்திற்கும் விட்டுச் சென்ற சொத்து; ஆனால் இவ்வுலகினது அன்று. அது இறைவன் நமக்கு அளித்த அழியாச் சொத்து; இதனைத் தீயும் நீரும் கொள்ளா; கரையான் அரிக்காது; மனிதனின் வஞ்சகமும் அதனைத் தொடமுடியாது. அறியாத இச்சொத்து, அன்பே மயமான இறைவனின் சொத்து. எல்லாருக்கும் உரியது; பகிரக் குறையாத இச்சொத்து கீழ்க் குலத்தோருக்கு மட்டும் மறுக்கப்படவில்லை. ஏழைகளுக்கும், செல்வந்தருக்கும், யூதருக்கும், சமாரியருக்கும், பரிசேயருக்கும், ஆயக்காரனுக்கும் தரம் பாராது, நடுநிலைமைக்கும் அவரவரின் ஏற்குந் திறமைக்கும் ஏற்ப அளிக்கப்பட்ட இச்சொத்து இந்தியாவிலும் அந்தணருக்கும் மற்றவருக்கும் அளிக்கப்படல்வேண்டும்.

எனவே வருவது வரட்டும் என்று கூறி அவரை ஏற்றுக்கொண்டார். அவர் கழுத்தில் அணிந்திருந்த லிங்கத்தை அகற்றுமாறு பணித்தார். நாளும் வந்து கற்றுப் போகுமாறு அனுமதித்தார்.

சில மாதங்கள் கழிந்தபின் அந்த வள்ளுவர் ஏங்கிக் கிடந்த பொன்னுள் வந்தது, ஞானஸ்நானம் பெறவேண்டிய

நாள். அவருக்கு என்ன பெயர் கொடுப்பது எனத் தெரியவில்லை. இறுதியில் அடிகள் ஒரு பெயரைத் தேர்ந் தெடுத்தார். அது என்ன பெயர் தெரியுமா? அதுதான் முக்தியுடையான் என்ற பெயர். அதை எல்லோரும் ஆங்கிலத்தில் Hilary, இலத்தீனில் Gaudentius என மொழி பெயர்த்தனர். முக்தி என்பது வெறும் மகிழ்வை மட்டும் குறிப்பதில்லை. அது இரட்சணியத்தினால் நாம் மோட்சத்தில் அடையும் இன்பத்தைக் குறிக்கும். முக்தி யுடையான் என்பது இரட்சணியம் அடைந்தவன் எனப் பொருள்படும். ஒருவேளை முக்தியுடையானின் அசையாத விசுவாசத்தையும் அணையாத அன்பினையும் நோக்கித் தானோ என்னவோ அடிகள் இவ்வாறு பெயரிட்டார்.

முக்தியுடையானும் தன் பெயருக்கேற்ப நடந்து கொண்டார். திருச்சி வந்தவுடன் சும்மா இருக்கவில்லை. அவர் நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் முழுவதும் எனக்கூறித் தன் பழைய சீடர்கள் யாவரையும் மன மாற்ற ஆரம்பித்தார். இவரது ஆன்ம தாகமும் சேசுநாதரின் நேசமும் குருபக்தியும் படிப்போரது உள்ளத்தில் சிவ தர்மாவைக்கொண்டு நிறுத்துகிறது. தத்துவபோதகரின் வாழ்க்கை ஆரம்பத்தில் தெலுங்கு நாட்டிலிருந்து எதிர் பாராதவண்ணம் வந்து சேர்ந்து, அவருக்கு வடமொழி பயில்வித்து தானும் புதுவேதம் பயின்று அவ்வேதத்தில் இறுதிவரை நின்றார். நின்றதுடன் அல்லாமல் தம் குருவிற்காகப் பரிந்து எத்தனையோ முறை பேசியும் எழுதியும் உதவியும் இருந்தார். மதுரை அந்தணர்களை மெதுவாக மனமாற்றவும் முயன்றார். இதோ சிவதர்மாவிற்கு ஞானஸ்நானம் அளித்த அதே கைகளே முக்தியுடையானுக்கும் ஞானஸ்நானம் கொடுத்தன. இதோ முதல் அந்தணருக்கு ஞானஸ்நானம் கொடுத்த அந்தணச் சந்நியாசி தத்துவ போதகரே இப்பொழுது முதல் உள்நாட்டுக் கீழ்க்குலத்தானுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார்.

முக்தியுடையான் நேராகத் திருச்சிராப்பள்ளிக்கு வரவில்லை. கேட்டாரைப் பிணிக்கும் சொல்வன்மை

கொண்டவராதலால் வழி நெடுக மக்கள் அவரது மொழி கேட்கக் கூடினர். கேளாதவரையும் கேட்க விரும்புமாறு எடுத்துக்கூறும் வகையால் மக்களின் மனதை உண்மை சமயத்தின்பால் ஈர்த்தார். இவ்வாறு இறைவனின் திரு விதையைப் பல இடங்களிலும் பரப்பிக்கொண்டே வந் தமையால் சிலகாலந் தாழ்த்தியே திருச்சி வந்தடைந்தார்.

வந்தவர் சும்மா இருக்கவில்லை. வந்தவரை மற்றவ ரும் சும்மா இருக்கவிடவில்லை. மனமாற்றத்தைக் கேட் டவர் விவாதிக்க வந்தனர். மதமாற்றத்தைப் பொறுக்கா தவர் அவரைத் திட்டி ஏச வந்தனர், இவைகளையெல்லாம் பொருட்படுத்தாது நம் முக்தியுடையான் திருச்சியிலிருந்து கீழ்க்குலக் கிறீஸ்துவர்களையெல்லாம் கூட்டி ஒன்றுபடுத் தினர். இதோடு சிலரையும் மதமாற்றினர். இதெல்லாம் நடக்கும்பொழுது தத்துவபோதகர் அங்கில்லை.

இவைகளையெல்லாம் பார்த்த பண்டாரங்களுக்குப் பொறுக்கவில்லை. அவர் கட்டிய கோயிலைத் தகர்த்தெறிந் தனர். "கிறீஸ்துவர்களுக்கு எதிராக எழுந்து, முக்தியுடை யானையும் மற்ற முக்கியமானவர்களையும் கைது செய்தனர். கைகளில் விலங்குகள் பூட்டப்பட்டன. தங்களுடைய சிலை களை வணங்குமாறு வற்புறுத்தினர்; சாட்டைகளால் அடித் தனர்". 'அடிமேல் அடிவைத்தால் அம்மியும் நகரும்' என்ற கூற்று இவ்விஷயத்தில் பலிக்கவில்லை. அசையாத விசுவா சத்தை அடித்த அடிகளால் அகற்ற முடியவில்லை. தங்கள் உடல் வலி அவர்களது ஆன்ம வலியின்முன் வலியிழந்து நின்றமையைக் கண்டவர்கள் : "புது வேதத்தில் உண்மை யில்லாவிடில் எவ்வாறு இந்த மக்கள் இவ்வளவு மன வலிமையுடன் இருக்க முடியும்?" எனக்கூறித் திகைத்து கைதிகளை விட்டுவிட்டனர்.

திருச்சபையின் ஆரம்பத்தில் இத்தகைய நிகழ்ச்சி ஒன்றன்று, ஒன்பது நடந்தன. அவற்றில் யூதேயாவில் அப்போஸ்தலர்களைக் கைதுசெய்து துன்புறுத்தியதும் ஒன்று. பின்னர் விடுதலை செய்யப்பட்டு அவர்கள் திரும்பும்

பொழுது "ஆண்டவருக்காகப் பாடுபட ஒருமுறையேனும் வாய்ப்புக்கிடைத்ததே" என மகிழ்ந்து திரும்பினர். அதே போல் நம் முதல் திருச்சிராப்பள்ளிக் கிறீஸ்துவர்களும் திரும்பினர். இவ்வாறு பாடுபட வாய்ப்புப் பெருதவர்கள், பாடுபட்டவர்களின் கால்களையும் கைகளையும் கண்ணீர் கண்களை மறைக்க முத்தமிட்டனர்.

இங்கிலேயில் தத்துவபோதகர் கொச்சியிலிருந்து திரும்பி வந்ததும் வராததுமாகத் திருச்சிராப்பள்ளிக்கு விரைந்தார். மறுமுறையும் வேதகலாபனை விளையாவண்ணம் தடுக்க முக்தியுடையானைச் சேலத்திற்கு அனுப்பி வைத்தார். பின்னர் மதுரை மகாநாயக்கனை திருமலே நாயக்கனைக் கண்டுத் தன் சமயத்தைப் பரப்ப உத்தரவு வாங்க வேண்டி அவனைப் பேட்டி காண வேண்டினர். நாயக்கனும் உடனே சம்மதித்தான். சந்நியாசியின் படோடோபத்துடன் அரசனைக் கண்டார். கண்டு அவன் முன்னர் வடமொழியில் ஓர் அழகிய உரையாற்றித் தான் வேண்டிவந்ததைக் கூறினர். மன்னவனும் உடனே தன் அரசில் எங்கு வேண்டுமானாலும் போதித்துக் கோயில் கட்டலாம் என உத்தரவளித்தான்.

நம் முக்தியுடையான் மாரமங்கலத்திற்குச் சென்ற சில நாட்களுக்குப்பிறகு மார்த்தீன்ஸ் அடிகள் அங்கு வந்தார். மாரமங்கலத்திற்கு வருவதற்முன்னர் அவர் மதுரையில் விக்கோ அடிகளுக்குப் பதிலாக இருந்தார். அங்கே அவருக்கு இருவித வேலைகள் இருந்தன : ஒன்று தத்துவ போதகரின் அந்தணர்களையும் கோயிலையும் பார்த்துக் கொள்வது, மற்றொன்று அங்கேயிருந்து பழைய கோயிலேயும் பார்த்துக்கொள்ள வேண்டியிருந்தது. பழைய கோயிலென அழைக்கப்படுவது கொன்சாலோ சுவாமிகளால் கட்டப்பட்டு நடத்தப்பட்டு வந்த கோயிலே. இப்பொழுது கொன்சாலோ சுவாமிகளால் கட்டப்பட்ட அந்தக் கோயில் கங்காணிப்பாரின்றி இருந்து வந்தது. கொன்சாலோ சுவாமிகளின் 'பரங்கி'க் கிறீஸ்துவர்களையும் கண்காணித்து அவர்களுக்கும் உதவிசெய்ய வேண்டியிருந்தது.

இது போதாதென்று அநேக கீழ்க்குலத்தார் நம்மதம் சேரவேண்டுமெனத் தவித்துக்கொண்டிருந்தனர். எனவே மார்த்தீன்ஸ் அடிகள் பகலில் தத்துவபோதகரின் சாதி அனுசாரங்களை விடாத கிறீஸ்துவர்கட்கும், இரவுகளில் கொன்சாலோ சுவாமிகளின் கிறீஸ்துவர்கட்கும் மற்றக் கீழ்க்குலத்தாருக்கும் போதித்து வந்தார்.

இதுவே தத்துவபோதகர் இட்ட வித்தின் முதற் செடி. அடிகள் அந்தணருக்காக மட்டும் தம் முறையைக் கொணரவில்லை. அந்தணரை மதமாற்றினால் மற்றவர் தானே வருவர் என்பதை அறிந்தே அவ்வாறு செய்தார். இன்றும் நாமும் கல்விகேள்விகளிற் சிறந்து விளங்குவோரையும் புகழ்பெற்றுத் திகழ்வோரையும் நம்பாற் சேர்த்தோமானால் அவர்களைப் பின்பற்றும் அனைவரும் நம்பால் வரக்கூடும். இதையே நாம் Intellectual Apostolate என ஆங்கிலத்திலும், தமிழில் மேம்பட்டோரின் மதமாற்றம் எனவும் அழைக்கிறோம். இவ்வாறே அன்று பதினேழாம் நூற்றாண்டில் நாட்டை ஆண்டு கொண்டிருந்தவர்கள் மேற்குலத்தவரே. அவர்களின் அடி பற்றியே மற்றவர் வாழ்ந்தனர். மேற் குலத்தாரே இச் சமயத்தை ஏற்றுக்கொள்ளும்பொழுது நாம் ஏன் ஏற்றுக் கொள்ளலாகாது என மக்கள் துணிவதற்கு இடமுண்டு. இன்னும் அடிகளின் முறைகள் வருவதற்கு முன்பு, கத்தோலிக்கச் சமயம் புகுவதற்கு முன்னர், எத்தனையோ அச்சங்கள் வந்துநின்றன. அவருடைய முறைகள் இவ்வச்சங்களை அகற்றின. எனவே கீழ்க்குலத்தார் கூட்டம் கூட்டமாக மனமாறுவராயினர்.

இத்தகைய மாற்றம் மதுரைக் குருக்களுக்கு சில இடையூறுகளை விளைக்கத்தான் செய்தன. முதன்முதலில் அவர்கள் ஞானஸ்நானம் கேட்பவர் எவரேனும் அவர்க்கு ஞானஸ்நானம் மறுக்க விரும்பவுமில்லை; மறுக்கமுடியவுமில்லை. ஞானஸ்நானம் கொடுப்பதானால் அதற்குமுன் நம் சமயத்தைக் கற்றுக்கொடுக்கவேண்டும். பின்னர் அவர்களுக்குப் பூசை செய்து நன்மை வழங்கவேண்டும். அவர்

களுடைய பாவசங்கீர்த்தனம் கேட்கவேண்டும். அவர்கள் சாகுந்தறுவாயில் கடைசி தேவதிரவிய அனுமானங்கள் கொடுக்கவேண்டும். இவைகளெல்லாம் செய்ய குருக்கள் தம் சாதி முறைகளுக்கெதிராகக் கீழ்ச்சாதியாருடன் புழங்கவேண்டும். இது நிச்சயமாகப் 'பரங்கி'க் குற்றச் சாட்டிற்கு வழியாகும்.

சில சமயங்களில் தத்துவபோதகரே இவ்வாறு செய்துள்ளார். ஆனால் இப்பொழுது பலமுறையும் இவ்வாறு செய்யநேர்ந்தது. மார்த்தீன்ஸ் அடிகள் மதுரையில் மட்டும் இவ்வாறு செய்யவில்லை; மாரமங்கலத்திலும் செய்தார். அங்கே அவ்வளவு கடினமாக இல்லை. நம் முக்தியுடையானின் உதவியால் கீழ்க்குலத்தாரின் கண்காணிப்பைத் தான் அவர்களுடன் தீட்டுப்படாமலே நிறைவேற்ற முடிந்தது.

கீழ்க்குலத்தாரை மாரமங்கலத்தில் மட்டும் கண்காணிக்கவில்லை முக்தியுடையான், அதன் சுற்றுப்புறங்களிலெல்லாம் சென்று வேண்டிய அளவு உதவி செய்தார். கரூரில் அவரே பலரைக் கிறீஸ்துவர்களாக மாற்றி, ஒன்று கூட்டி அவர்களில் ஒருவரை ஸ்தல ஞான உபதேசியராக அமர்த்தி, அங்கேயும் திருச்சபையின் அடிப்படைக்கல்லை நட்டார்.

இவ்வாறு இரண்டாண்டுகள் கழிந்தபிறகு மார்த்தீன்ஸ் அடிகள் திருச்சிக்கு மாற்றப்பட்டார். அங்கேயும் மற்ற இடங்களைப்போன்றே இருந்தது. கீழ்க்குலத்தார் பலரும் திருச்சபையைச் சேர விரும்பினர். அவர்களில் ஒருவரான முக்தியுடையான் திருச்சபையைச் சார்ந்ததே ஒரு பெரிய காரணம். இங்கேயும் மார்த்தீன்ஸ் சுவாமிகள் மதுரையில் போன்றே இரவில் கீழ்க்குலத்தாருக்கு உதவி செய்துவந்தார்.

வழக்கம்போல அந்தணருக்கு மக்கள் பலரும் புதிய மதத்தைச் சாருவது பிடிக்கவில்லை. வாய்ப்புக்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள். மார்த்தீன்ஸ் அடிகள் சாதி

ஒழுங்குகளை மீறுவதால் பரங்கி எனக்கூறி கிறீஸ்துவர் களின்மீது திருச்சியிலிருந்த அரசினரை ஏவிவிட்டனர். அவர்கள் மார்த்தீன்ஸ் அடிகளைச் சிறை செய்து, மதுரை யிலிருந்து மன்னவனது ஓலை வரும்வரைக்கும் கிறீஸ்துவர் களை யாவரும் துன்புறுத்தலாம் எனக் கட்டளையிட்டார். எனினும் மதுரை நாயக்கன் இந்தக் குருக்கள் மூலம் தம் நாட்டிற்கு இடையூறு வருமெனக் கருதவில்லை. "வெகு காலமாக, ஏன் நாம் அரச பீடத்தில் ஏறுவதற்கு முன்பி ருந்தே இக்குருக்கள் என் நாட்டில் இருந்து வருகிறுர்கள். அவர்களால் நாட்டிற்கு ஒரு தீங்கும் விளையாது. கைது செய்தவரை விடுதலை செய்யுங்கள்" எனக் கட்டளையிட் டான். மதுரை நாயக்கன் கத்தோலிக்கச் சந்நியாசிகளின் சார்பில் பேசியது இது ஒரு முறை மட்டுமன்று. இதற்கு முன்பு ஒருமுறை அந்தணர்கள் தத்துவபோதகருக்கு எதிராகப் பேசியிருக்கும்பொழுது "மதம், மதம்! நீங்கள் ஏன் அந்தச் சந்நியாசிக்கு எதிராகப் பேசுகிறீர்கள் என எனக்குத் தெரியும். அவர் கற்றுக்கொடுக்கும் சமயத்தைப் பின்பற்றினுல் உங்களால் ஒரு மனைவிக்குமேல் மற்றொரு மனைவி வைத்திருக்க முடியாது, அதனுல் தான் நீங்கள் அவருக்கு விரோதமாகப் பேசுகிறீர்கள்" எனக் கூறினுன் நாயக்கன்.

மன்னனின் ஓலையைப் பெற்றவுடன் திருச்சி அரசினர் மார்த்தீன்ஸ் அடிகளை விடுதலைசெய்தனர். திருச்சபைக் காகத் துன்புறுத்தப் பெறும் பேற்றிற்காக மகிழ்வுற்றுத் திரும்பினுர் மார்த்தீன்ஸ் அடிகள். எனினும் திருச்சபைக் காகச் சேசுவிற்காக இரத்தம் சிந்தும் பெரும் பேற்றை முதலில் பெற்றவர் மார்த்தீன்ஸ் அடிகளல்லர். அது முக்தி யுடையானுக்காகக் காத்துநின்றது.

அந்தணர்களைப்போன்றே பண்டாரங்களும் காத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் அந்தணர்களைப்போன்று தந்திரம் செய்யவில்லை. நேராகவே வேலை செய்தனர். முக்தியுடையான் ஒருநாள் தெருவில் நின்றுகொண்டிருப் பதைக் கண்டனர். அவரைப் பிடித்துத் தங்கள் சாமியின்

லிங்கத்தையும் குறிகளையும் அணிந்துகொள்ளுமாறு வற்புறுத்தினர். முக்தியுடையான் ஒரேயடியாக மறுத்துவிட்டார். அவர்கள் அவரை ஆடையுறுத்திக்கட்டி ஒரு மூங்கிற் கழியால் ஓங்கி ஓங்கி முதுகில் அடித்தனர். தோலுரிந்து குருதி வழிந்தது. முக்தியுடையான் அடித்துக்கொண்டிருந்த பண்டாரத்தை நோக்கி, "அடி, அடி, இன்னும் அடி, ஓங்கி அடி. மகிழ்ச்சி, மெத்த மகிழ்ச்சி; எனக்காகக் கசையுண்ட கடவுளுக்காக அடியுண்ண எவ்வளவோ மகிழ்ச்சி" என்றார். சுற்றிநின்றார் அவரது அஞ்சாத நெஞ்சத்தையும், அசையாத பொறுமையையும் கண்டு வியந்து நின்றனர். மூங்கில் கழியும் உடைய ஆரம்பித்தது. இதுவே முக்தியுடையானுக்கு விடுதலையும் அளித்தது.

மூங்கில் கழி உடைவது ஒரு கெட்ட சகுனம். இந்தக் கெட்ட சகுனத்தைக் கண்ட பண்டாரங்கள் திகைத்தனர். ஏற்கனவே முக்தியுடையானது பொறுமையையும் குன்றாத விசுவாசத்தையும் கண்டு என்ன செய்யலாம் என யோசித்துக்கொண்டிருந்தனர். இப்பொழுது கழி முறிகிறது. இதுவோ ஒரு கெட்ட சகுனம். ஒருவேளை இந்த முக்தியுடையானது கடவுள் நம்மைத் தண்டிக்க விருக்கிறதோ என்னமோ என்ற ஐயம் எழுந்தது. கைகளும் கால்களும் அச்சத்தால் நடுங்கச் சற்றும் தயங்காது அவரை விட்டுவிட்டு ஓட்டம் பிடித்தனர். உயிர் விடும்வரை சமயத்தைவிடேன் என்ற மன உறுதியுடன் இருந்த முக்தியுடையானுக்குக் குறுக்கே வந்த வேதசாட்சி முடி இப்பொழுது தவறியதைக் கண்டு சிறிது ஏமாற்றமே. எனினும் ஒவ்வொரு கிறீஸ்துவரின் வாழ்வு முழுவதுமே வேதத்திற்காக இரத்தஞ்சிந்தாவிட்டாலும் வாழும் முறையால் சாட்சிசொல்லவேண்டாமா? இந்தக் கருத்துடன் மார்த்தீன்ஸ் அடிகளைக் காணப்புறப்பட்டார்.

மேற்கூறிய இரு நிகழ்ச்சிகளும் மதுரை, திருச்சி அந்தணர், பண்டாரங்கள், அரசினர் முதலியோரின் மனப்பாங்கை விவரிக்கின்றன. நாயக்க மன்னன் மட்டும் தத்துவ போதகரையும் அவருடைய துணைவர்களையும் காப்பாற்றி

யில்லாவிட்டால், என்றே ஒரு பெரிய வேதகலாபனை எழுந்திருக்கும். அக்கலாபனை எழுந்து திருச்சபையை இந்தியாவிலிருந்தே விரட்டியிருக்காது. அவ்வாறு விரட்ட ஒருவராலும் முடியாது. விரட்டுபவர் மாண்டுபோவார். ஆனல் திருச்சபை மாளாது. இத்தகைய பெரிய கலாபனைகளையெல்லாம் திருமலை நாயக்கன் முளையிலேயே கிள்ளி எறிந்துகொண்டிருந்தான்.

எனினும் நாயக்கனல் எப்பொழுதும் மதுரையிலேயே இருக்க முடியவில்லை. போர்த்துக்கீசியருடன் வாணிபம் பற்றியும் விஜயநகர வேந்தனுடன் தான் இடப்போகும் போரைப்பற்றியும் கலந்தாலோசிக்கச் சென்றிருந்தான். எனவே அப்பொழுது ஒரு வேதகலாபனை நடந்தால் அதனைத் தடுக்க ஆளில்லை.

இஃது இவ்வாறிருக்க, 1640-ஆம் ஆண்டு ஓர் அபசகுன ஆண்டாக இருந்தது. அப்பொழுது நடந்து கொண்டிருந்த போர்களும், பஞ்சமும் மக்களின் எண்ணங்களை வெவ்வேறு வகையில் இழுத்துச்சென்றன. பலரும் இவைகளுக்கெல்லாம் காரணம் இந்தப் புதுவேதமே எனக் கருதினர். எனவே அரசினரின் மனத்திலும் மற்ற மதத்தினர் மனத்திலும் நஞ்சு குடிக்கொண்டிருந்தது.

அந்தணர்களும் பண்டாரங்களும் ஒரு வாய்ப்பை எதிர்நோக்கியிருந்தனர். அவர்களுடைய சீடர்களின் எண்ணிக்கைக் குறை ஒருபக்கம், தாங்கள் இந்தப் புது சந்நியாசிகளின் முன்னர் பன்முறை விவாதிக்க வழிவகையின்றித் தோற்றது ஒருபக்கம், நாயக்கமன்னன் அவர்களது வாயை அடைத்து அந்தச் சந்நியாசிகளைக் காத்தது ஒரு பக்கம் அவர்களது பொருமையைத் தூண்டிவிட்டன. பழிக்குப் பழி நிகழ்த்தத் தருணம் காத்து நின்றனர். ‘உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு!’

காத்திருந்த தருணமும் வந்தது. 1640-ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் கீழ்க்குலத்தைச் சேர்ந்த இந்து செல்வந்தன் தன் சாதியைச் சேர்ந்த ஒரு கிறிஸ்துவனிடம்

பெண் கேட்டான். இந்தச் செல்வந்தன் கழுத்தில் எப்பொழுதுமே லிங்கம் அணிந்திருப்பான். இவனுக்குத் தன் பெண்ணைக் கொடுக்க முடியாதென மறுத்துவிட்டான் அந்தக் கிறீஸ்துவன். இக்கிறீஸ்துவன் சும்மா மறுக்கவில்லை, மறுப்பிற்கு ஒரு காரணமும் கொடுத்தான். 'கழுத்திலே லிங்கம் கட்டிய எவனுக்கும் என் உயிர் போனலும் என் பெண்ணைத் தரப்போவதில்லை' என்ருன். இந்த விடை மிகவும் இறுமாப்புள்ளதாக அந்த லிங்கத்துக்காரனுக்குத் தென்பட்டது. எனவே 'அந்த இறுமாப்பை அறுக்காதவரைக்கும் என் மீசை மீசையாயிராது' என வஞ்சினங்கூறி எழுந்தான், நடந்தான்; பண்டாரங்களின் தலைவனைச் சந்தித்தான்.

இவர்களிடையே நடந்த உரையாடல் முடிந்தவுடன் பண்டாரம் அரசன் அரண்மனையை நோக்கி நடந்தான். அங்கே சென்று "ஸ்ரீ வெங்கடராய பிள்ளை அவர்களைக் காணவேண்டும்" எனக் கூறினன்.

ஸ்ரீ வெங்கடராய பிள்ளை என்பான் அரசனின் மனதிற்குகந்த ஆள். அவனின் குணநலங்கள் அரசனின் மனத்திற்குகந்தவை அல்ல, ஆனல் அவன் மகளது அழகு அரசனின் தீய வேட்கைக்கு உகந்ததானது. எனவே ஸ்ரீ வெங்கடராய பிள்ளை அரசனின் மனத்திற்கு உகந்தவனனன். இந்த வெங்கடராய பிள்ளையின் மனத்திற்குகந்தது ஒன்றே ஒன்று, பணம். பணமென்ருல் பேயும் வாயைத் திறக்கும் எனின் நம் வெங்கடராய பிள்ளை சும்மாவா இருப்பான்!

பண்டாரம் புதுச் சந்நியாசிகளின் பணக்குவியலைப் பற்றிப் பேசினன்; பொன் சுரங்கங்களைப் பற்றி விவரித்தான். செல்வம்! செல்வம்!! செல்வம்!!! செல்வத்தின் மீது வைத்த ஆசை வெங்கடராய பிள்ளையை இழுத்துச் சென்றது. எதற்கு? ஒரு வேதகலாபனையை எழுப்ப!

அடுத்த நிமிடமே ஓலைகள் மதுரைக்குப் பறந்தன. வெங்கடராய பிள்ளை திருச்சியில் பற்பல ஆணைகளிட்டார்.

"மார்த்தீன்ஸ் சுவாமிகள் ஜூலை மாதம் இருபத்து இரண்டாம் நாள் ஞாயிற்றுக்கிழமை பூசை செய்வதற்காக உடுப்புகள் அணிந்துகொண்டிருந்தார். உடனே சில போர்வீரர்கள் வந்து 'சேசுக்கிறீஸ்துவின் மார்க்கத்தைப் போதிப்பதால் உன்னை அரசன் ஆணைப்படி கைது செய்கிறோம்' எனக் கூறவே, அவர் 'சேசுக்கிறீஸ்துவின் மார்க்கத்தைப் போதிப்பது குற்றமானால் என்னை மட்டும் கைது செய்யுங்கள், என்னைச் சுற்றியுள்ளவர்களை விட்டுவிடுங்கள்' எனக் கூறினர். உடனே அவரைப் பிடித்து அடி உதைகளுடன் இழுத்துச் சென்றனர். அவருடைய தலைப்பாகையையும் சால்வையையும் எடுக்கக்கூட அனுமதிக்கவில்லை. அவருடன்கூட நின்ற அந்தணரும் அவரும் வெங்கடராய பிள்ளையிடம் இழுத்துச் செல்லப்பட்டனர். அவன் அவர்களைத்திட்டி, சிறைக்கு அனுப்பினன். மார்த்தீன்ஸ் சுவாமிகள் தன்னை இன்னும் அதிகக் கொடுமையாக நடத்துமாறு வீரர்களைக் கேட்டுக்கொண்டாராம். வெகு விரைவில் அவரது உடல் இரத்தத்தால் நனைந்தது.

"அவருக்கு வழியில் மரியாதை காட்டிய கிறீஸ்துவர்களெல்லாம் சிறைப்பட்டனர். மறுநாள் காலையில் மார்த்தீன்ஸ் சுவாமிகளையும் அந்த அந்தணரையும் காவேரிக்கு அப்பால் அழைத்துச்சென்று 'இனிமேல் திருச்சிக்குள் அடி எடுத்து வைக்கலாகாது'" என்ற கட்டளையும் கொடுத்தனர்.

"மாரமங்கலத்தில் அப்பொழுது இருந்த பல்த்தஸார் த கோஸ்தா சுவாமிகளுக்கும் மதுரையிலிருந்த தத்துவ போதகருக்கும் அவர் செய்தி அனுப்பினர். செய்தி கொண்டுவந்த ஆள் மதுரைக்கு வந்தபொழுது அங்கேயும் வேதகலாபனையின் கொடுங்கோல் காணப்பட்டது. தத்துவபோதகரும் அவருடைய துணைவர் செபஸ்தியாலே தெ மாயாவும் சிறையில் இருந்தனர்."

மேலே குறிக்கப்பட்ட கடிதம் செபஸ்தியாலோ தெ மாயா சுவாமிகள் எழுதுவது. இந்தச் செபஸ்தியாலோ தெ

மாயா சுவாமிகள் யார் என்று அறிவது நல்லது. முன்னரே 1638-ஆம் ஆண்டில் விக்கோ அடிகள் இறந்துபட்டார் என்று கூறியுள்ளோம். அவர் இறந்த பிறகு தத்துவ போதகர் கொச்சிக்குச் சென்று இவரை அழைத்து வந்தார். இவர் 1640-ஆம் ஆண்டில் தத்துவபோதகருடன் சேர்ந்து மதுரையைப் பாதுகாத்து வந்தார். தமிழும் கற்று வந்தார்.

மார்த்தீன்ஸ் சுவாமிகளைக்[1] கைது செய்த அதே நாளில் மதுரையில் நாயக்கனுக்குப்பதில் ஆண்டுவந்த சிவாண்டிப்பிள்ளைக்கு இரு சந்நியாசிகளையும் கைது செய்து அவர்களது செல்வம் முழுவதையும் பறிமுதல் செய்யுமாறு ஆணைவந்தது. இந்த ஆணையுடனே மற்றொரு திருச்சிக் கிறீஸ்துவனும் மதுரையை வந்தடைந்தான். (இந்தக் கிறீஸ்துவன் மார்த்தீன்ஸ் சுவாமிகளால் அனுப்பப்பட்டவனல்லன்.) சிவாண்டிப்பிள்ளை ஆணையை அறிந்து அவன் ஆளனுப்புவதற்கு முன்னரே இந்தக் கிறீஸ்துவன் தத்துவபோதகரிடம் வந்து நடந்ததை அறிவித்தான். அவர் மிகவும் அமைதியாய் செய்தி முழுவதையும் கேட்டார். தெ மாயா சுவாமிகள் உடனே எழுந்து தன் செபங்களை முடிக்கப்போனார். முடித்த பின்னர் பூசைப்பாத்திரம் ஆயத்தம் போன்றவைகளை மறைக்கலாயினர். அதற்குள்ளேயே போர்வீரர்கள் வந்து சேர்ந்தனர். தத்துவபோதகர் அமைதியுடன் தம்மையே அவர்களுக்குக் கையளித்தார். தெ மாயா சுவாமிகள் சிலுவையையும் செபப் புத்தகத்தையும் கையில் வைத்திருந்தார். அவர்கள் அவைகளைப் பறித்துக்கொண்டார்கள். அவர்களைச்சுற்றி ஒரு பெருங்கூட்டம் கூடியது. முந்நூறு வீரர்களும் கோயிலையும் அவர்களது வீட்டையும் சூறையாடினர்.

இதற்குப் பின்னரே சிவாண்டிப் பிள்ளை ஆடி அசைந்து வந்தான். அவன் முன்னர் பறிமுதல் செய்த பொருள்களை வைத்தனர். விலையுயர்ந்த பொருட்களைத்

---

[1] இங்கே கடிதத்தின் சுருக்கத்தையே தருகிறோம்.

தாமே வைத்துக்கொண்டு மலிவானவற்றை மட்டுமே அங்கே வைத்திருப்பதைக் கண்டார் மாயா சுவாமிகள். தத்துவபோதகருக்குக் கண்பார்வை மங்கியதால் அவரிடம் நடந்ததைக் கூறினர்.

தத்துவபோதகர் தமக்கே உரிய அந்த ஆளும் குரலில் அவர்களை நோக்கிப் பேசினர். புனித பொருள்களை மறைத்து வைத்ததைப் பற்றியும் அவைகளின் புனிதத்துவத்தைப் பற்றியும் பேசினர். மறைத்தவர்களைக் கடிந்து தேவகோபம் அவர்கள் மேல் விழுமெனவும் கூறினர்.

அவ்வளவுதான்! அங்கிருந்த அத்தனைபேரும் நடுங்கினர். பூசைக்குரிய பொருட்களையும், செபப் புத்தகங்களையும் திருப்பிக் கொடுத்துவிட்டனர். பின்னர் அவர்களைச் சிறையிலிட்டனர். அவர்களையும், மதுரைக் கிறீஸ்துவர்களில் சிலரையும் சிறையில் இட்டனர். அவர்களுக்கு அநேக துன்பங்கள் இருந்தன. இருப்பினும் அவர்களுக்கு விலங்குகள் பூட்டப்படவில்லை. வெளியே யாருடனும் எவ்வகைத் தொடர்பும் வைத்துக்கொள்ள முடியவில்லை.

இத்தகைய துன்பங்களிடையேயும் அவரைச் சிறையில் வந்து பார்த்தவர்களைத் தத்துவபோதகர் வீணே அனுப்பவில்லை. அவரை வந்து பார்த்தவரெல்லாம் அவரை ஏசுவதற்குப் பதில் அவரைப் புகழ்ந்தனர், அவரிடமிருந்து திருவாய் மொழி கேட்டனர்.

இவைகளெல்லாம் கூறிய பின்னர் மாயா சுவாமிகள் தங்கள் எண்ணங்களை விவரிக்கிறர்: "சிறையில் பலமிழந்து இருக்கும்பொழுது, ஆண்டவரின் கைகளில் இருக்கிறோம். எனவே, எங்களைவிட வன்மைமிக்கவர் யார்? நாங்கள் எங்கள் பலவீனத்தால் பலம் வாய்ந்தவர்களாய் இருக்கிறோம். எங்களுக்குப் பலமளிக்கும் கிறீஸ்துவின் உதவியால் எங்களால் என்னதான் செய்ய முடியாது?"

"1641, 1642-ஆம் ஆண்டுகளைப் பற்றிய கடிதங்கள் நமக்குக் கிடைக்க வில்லை. எனவே 1640-ஆம் ஆண்டு

இறுதியில் நாயக்க மன்னன் நாடு திரும்பியவுடன் அவர்களை விடுவித்தான் என்பதே நமது துணிபு. 1641-இல் மறுபடியும் நாயக்க மன்னன் நாட்டைவிட்டுப் புறப்படவும் சிவாண்டிப் பிள்ளை மறுமுறையும் சுவாமிமார்களைச் சிறையிலடைத்தான். மறுமுறையும் 1641-ஆம் ஆண்டு இறுதியில் நாயக்க மன்னன் திரும்பியவுடன் விடுதலை செய்யப்பட்டனர். எனினும் அவர்களது கோயிலையோ, வீட்டையோ திருப்பித்தரவில்லை.

எனவே அடிகள் மீண்டும் அந்தப் பழைய குச்சிக்கே சென்றார். வாசகருக்கு இராம செட்டியின் அண்ணன் நாகய்யா செட்டி இந்த வீட்டை அடிகளுக்கு வந்த புதிதில் கொடுத்தது ஞாபகமிருக்கலாம்.

செபஸ்தியாலோ தெ மாயா அடிகள் இந்தத் துன்பங்களினால் உடல்நோய்வாய்ப்பட்டார். கொச்சி திரும்பினார். அங்கிருந்து சீனாவிற்கு வேதபோதகராகப் போய் 1664-ஆம் ஆண்டில் மக்காவோ நகரத்தில் உயிர் நீத்தார்.

வயது அறுபத்தைந்து ஆகிய தத்துவபோதகரால் முன்போன்று பயணஞ்செய்ய முடியவில்லை. தமது எளிய குச்சில் அமர்ந்தவண்ணம் புத்தகங்கள் எழுதலாயினார். அவர் முன்னர் வடமொழியில் எழுதிய பல நூல்களும் சிவாண்டிப்பிள்ளைக் கலவரத்தில் அழிந்துபோய்விட்டன. எனவே தேவையான, தம் கிறீஸ்துவர்கள் பயன்படுத்துவதற்காகப் புத்தகங்களை எழுதலாயினார்.

தமது வாழ்வின் பெரும் பாகத்தை மிஷனுக்காகவே அர்ப்பணித்தார். விசுவாசமென்னும் வித்தை மதுரையில், மாரமங்கலத்தில், திருச்சிராப்பள்ளியில் இட்டார். விக்கோ அடிகளும் மார்த்தீன்ஸ் அடிகளும் தம் அயரா உழைப்பால் நீர் வார்த்தனர். வித்து நிலத்தில் விழுந்து மடிந்தால்தான் நூறு மடங்கு பலன் தரும். முக்தியுடையானும் மார்த்தீன்ஸ் சுவாமிகளும் இரத்தம் சிந்தினர். தத்துவபோதகர் பட்டபாடுகள் போதாதா? அண்மையில்கூட ஈராண்டுகள்

சிறையில் இருந்தனர். இவையாவற்றினலும் பலன் ஏதேனும் உண்டா? அதை அடிகள் காண அவர் உயிர் வாழ்வாரா? அல்லது....

# 18

## திறந்த கதவு

தத்துவபோதகர் தன் புது முறைகளை ஆரம்பிப்பதற்கு முன் கீழ்ச்சாதியினருள் ஒருவரும் மதுரையைச் சார்ந்த இடங்களில் ஞானஸ்நானம் பெறவுமில்லை, பெற விரும்பவுமில்லை. அவர்கள் ஏன் விரும்பவேண்டும்? தன் மானம் வாய்ந்த எந்த இந்தியனும் விரும்பாத அந்த மதத்தை அவர்கள் ஏன் விரும்பவேண்டும்? பரங்கியர் மதம் எனப் பழிச் சாட்டப்படும் அந்தச் சமயத்தை அவர்கள் ஏன் விரும்பவேண்டும்?

ஆனல் அடிகளின் முறைகளுக்குப்பின்னர் அவர்கள் இம்மதத்தைச் சேரத்தயங்கவில்லை. "அந்தணரும் நாயக்கரும், வேளாளரும் அம்மதத்தைச் சேரும்பொழுது நாங்கள் ஏன் சேரக்கூடாது?" அந்த மதத்தில் 'தாழ்ந்தவர்கள் உயர்த்தப்படுவார்கள், உயர்ந்தவர்கள் தாழ்த்தப்படுவார்கள்' என்று கூறப்பட்டுள்ளதாமே. இன்னும் அந்தக் கிறீஸ்துநாதர் ஏழை எளியவர்களுடன் விரும்பி உணவுண்டவராமே! தீண்டப்படாத சக்கேயுவின் வீட்டில் நுழைந்து தங்கியவராமே! எனவே நிச்சயம் எங்களை உயர்த்தத் தேடும் அந்த மதத்தில் நிச்சயம் சேருவோம்" என எழுந்தனர். இன்னும் இந்துக்கள் கோயில்களில் இவர்களுக்கு இடமில்லை. உள் நுழையவும் கூடாது. ஆனல் இந்தக் கிறீஸ்தவர்கள் கோயிலுள் நுழையலாம்; சாமி கும்பிடலாம். இந்த எண்ணங்கள் அநேகரைப் பற்றி இழுத்தன திருச்சபையின்பால்.

உண்மை. இத்தகைய எண்ணங்கள் இலௌகீக எண்ணங்கள், எனினும் இவை தவறல்ல. கிறீஸ்துவைப்

பின்பற்றிய அப்போஸ்தலர் முதன்முதலில் முழுதும் ஞானக்காரணங்களாலேயா அனைத்தையும் துறந்து சேசுவைப் பின்பற்றினர்? எனினும் போகப்போக அவரை அறிந்து அவரையே நேசித்து, அவர்மேல் வைத்த நேசத்திற்காகவே அவரைப் பின்பற்றுவர்.

முக்தியுடையானின் மனமாற்றம் இவர்களுக்கு ஒரு வழிகாட்டியது. அவர்மூலம் பலரும் ஞானஸ்நானம் பெறலாயினர். நாம் சென்ற அதிகாரத்தில் விளக்கியவண்ணம் இவர்களது எண்ணிக்கை ஏற ஏற, தத்துவபோதகரின் கவலையும் அதிகரித்தது. இவர்களைக் கண்காணிப்பதற்கு என்ன செய்வது?

தீர ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தார். கீழ்க்குலத்தாரிலிருந்து இந்துக் குருக்கள் (பண்டாரங்கள்) இருப்பதுபோன்றே நம் சமயத்திலும் இருவிதக் குருக்கள் இருப்பர். கீழ்ச்சாதியருக்கு ஞான உதவியளிக்கும் பண்டார சுவாமிகள், அந்தணருக்கு ஞான உதவியளிக்கும் அந்தண சந்நியாசிகள். இத்தகைய பிரிவு குலத்தைமட்டும் பொறுத்ததே.

இந்த மாறுதலால் விளையக்கூடிய நன்மைகள் பல. பண்டார சுவாமிகள் அந்தணருக்கும் மற்றூருக்கும் ஞான உதவி அளிக்கமுடியும். இது சாதி வேற்றுமை பாராது பணிபுரிய வழிவகுத்தது. இரண்டாவதாக, இந்தப் பண்டார சுவாமிகள் அந்தண சுவாமிகளைப் போன்று வடமொழிப் புலமை பெற்றிருக்கத் தேவையில்லை. எனவே கொச்சியிலிருந்து பலரையும் வரவழைத்து மிஷனில் அன்று நிலவியிருந்த குருக்கள் குறைவைப் போக்கலாம்.

பண்டார சுவாமிகளே அந்தணருக்கும் ஞான உதவி அளிக்கமுடியும். அந்தணச் சுவாமிகள் தேவையேயில்லையே என்பர் சிலர். இது தவறு. அந்தணச் சுவாமிகள் தம் அறிவாலும் திறமையாலும் மக்கள் முன்னர் நம் சமயத்தின் பெருமையையும் செல்வாக்கையும் காத்துவைத்தால் தான் மற்ற சுவாமிகளின் முயற்சிகள் பயன் தரும்.

எனவே இப்படி அந்தணச் சுவாமிகள் அவசியம் இருக்க வேண்டும் என்று தாம் இறக்கும் வரையும் வற்புறுத்தினர்.

பண்டார சுவாமிகளுக்கும் அந்தண சுவாமிகளுக்கும் உடையில் சற்றே வேறுபாடு. அந்தணச் சுவாமிகள் வெளுத்த மஞ்சள் ஆடை அணிந்தனர். பண்டார சுவாமிகள் மஞ்சள் படிந்த சிவப்பு ஆடை உடுத்தினர். இவர்களும் கூடியவரை புலாலை மறுக்கவேண்டியிருந்தது. தத்துவபோதகரது பண்டார சுவாமிகள் அனைவரும் வேளாளர்களே.

மதுரை மிஷனில் முதற் பண்டார சுவாமி பல்த்தஸார் த கோஸ்தா என்பவரே. இவர் ஒரு போர்த்துக்கீசியர். இவர் வேம்பாறு என்னும் ஊரில் பணியாற்றிக் கொண்டிருக்கும்பொழுது, மலபார் பெரிய சுவாமியார் மதுரைக்காக ஆள்பார்க்கிறார் என்பதைக் கேட்டு உடனே அவரை நோக்கி விரைந்தார். அங்கே கொச்சிக் கல்லூரியில் வேத சாத்திரம் கற்றுத்தரும் பதவி இவருக்காகக் காத்திருந்தது. அடிகள் மனஞ்சோரவில்லை. பெரிய சுவாமியாரிடம் தம் விண்ணப்பத்தைக் கூறினர். அவரும் இவரை மதுரைக்கு அனுப்பினர்.

மதுரையில் மார்த்தீன்ஸ் அடிகளும் தத்துவபோதகரும் காத்திருந்தனர். த கோஸ்தா அடிகளும் அங்கேயே சிலநாள் தங்கினர். அப்பொழுதுதான் மலபார் பெரிய சுவாமியாரே அங்கே வந்தார். நால்வரும் "பண்டார சுவாமிகள்" பற்றிப் பேசினர். பல்த்தஸார் சுவாமிகளே தானே முதல் பண்டார சுவாமிகளாகப் போவதாகக் கூறினர். அவரது விருப்பத்தின்படியே முதற் பண்டார சுவாமியானர்.

1640-ஆம் ஆண்டு ஜூலை மாதம் நான்காம் நாள் மதுரையிலிருந்து கரூருக்குப் புறப்பட்டார். இப்பொழுது அவருடைய காதுகளைத் துளைத்திருந்தனர். பண்டார சுவாமிகளின் உடையணிந்து சென்றார். அவரே எழுதுகிறார்: "கரூரில் சென்று அவ்வூர் மணியக்காரனிடம் ஊருக்குள் கோயில்

கட்ட உத்தரவு கேட்டேன். அவனும் உத்தரவளித்தான். எனினும் அந்த ஊர் அந்தணரும் பண்டாரங்களும் சேர்ந்து மணியக்காரனிடம் சென்று அவனது மனதைக் கெடுத்து என்னைக் கோயில் கட்டாதபடி தடுத்தனர். நான் விடுவதாக இல்லை. கிறீஸ்துவர்களையெல்லாம் கூட்டி என் கருத்துக்காக வேண்டிக்கொள்ளச் சொன்னேன். தேவமாதாவினிடம் அந்தக் கோயிலை அவருக்காக ஒப்புக்கொடுப்பேன் என வாக்குத்தத்தம் பண்ணி மணியக்காரனிடம் மறு முறையும் சென்றேன். இம்முறை அவன் மறுக்காது ஊருக்கு வெளியே ஒரு நல்ல இடத்தில் கோயில் கட்டிக் கொள்ள அனுமதி அளித்தான்.

"என் வருகையை அறிந்த எல்லோரும் என்னிடம் வருகின்றனர். முக்கியமாகக் கீழ்க்குலத்தோர் பலர் வருகின்றனர். நான் வந்த சில நாட்களுக்குள்ளேயே எழுபது ஞானஸ்நானங்கள் கொடுத்துள்ளேன். அவற்றை கொடுத்து முடிந்தவுடனே எனக்குத் திருச்சியில் ஒரு வேதகலாபனை எழுந்துள்ளதாகச் செய்தி வந்துள்ளது.

"மதுரையிலும் வேதகலாபனை இருப்பினும், அந்த ஆயிரக் கிறீஸ்துவர்களுள் ஒருவரேனும் எனக்கு நடந்ததை அறிவிக்கவில்லை. இறுதியில் தத்துவபோதகரிடமிருந்து ஒரு ஓலை வந்தது.[1] அந்த ஓலையின்படி, நான் மதுரைக்குச் சென்று அங்கே கறுப்பு அங்கி அணிந்து இருபது நாட்களாக வேதகலாபனை தணியுமெனக் காத்துக்கொண்டிருக்கிறேன்".

பல்த்தஸார் த கோஸ்தா சுவாமிகளுக்கு மதுரையில் பழைய கோயிலில் கறுப்பு அங்கி அணிந்து வேலைபார்க்க விருப்பமில்லை. கரூரில் அவர் இருபத்திரண்டு நாட்கள் பார்த்தவேலை அவருக்கு மிகவும் ஆசை. இவர் இங்கே இவ்வண்ணம் அதிக நாள் கழித்தால் அவருக்குப் பரங்கிப் பட்டம் சூட்டிவிடுவார்கள். பின்னர் அவரது கனவு நிறை

---

[1] எவ்வாறு சிறையிலிருந்து அனுப்பினர் என்று நாம் அறியோம்.

வேருது. அவரது கனவுதான் என்ன? தமிழ்நாடு முழுவதும் சுற்றி அதனைக் கிறீஸ்துவின் அடியில் சேர்ப்பதே. எனவே கூடியவிரைவில் மலபார் பெரிய சுவாமியாருக்கு எழுதித் திரும்பவும் காவி உடையணிந்து கரூர் போக அனுமதி கேட்டார். பெரிய சுவாமியாரும் அனுமதி அளிக்கவே உடனே கரூர் திரும்பினர்.

கரூர் திரும்பும் த கோஸ்தா சுவாமிகளைத் தத்துவ போதகர் தனியே போகவிடவில்லை. அவருடைய விருப்பங்களை அறிந்து, அவருக்கு உதவி அளிக்கக்கூடிய சில ஞான உபதேசியார்களை அனுப்பினர். தேவசகாயம் ஐயர் சவரிராயன் என்பவரே இந்த ஞான உபதேசியார்கள். கரூர் சென்று அங்கேயிருந்த கிறீஸ்துவர்களை எல்லாம் கூட்டித் திருச்சபையில் ஒறுப்பமைதியை உண்டுபண்ணினர். அண்மையிலிருந்த ஊர்களுக்கும் கரூருக்கும் தொடர்புகள் அமைத்தார்.

இவைகளெல்லாம் முடிந்தபின்னர், பல்த்தஸார் சுவாமிகள் அப்பொழுது மதுரை மிஷனுக்குப் பெரிய சுவாமியாரான மார்த்தீன்ஸ் அடிகளைக் காணச்சென்ருர். மார்த்தீன்ஸ் சுவாமிகள் செஞ்சியில் இரண்டு ஆண்டுகள் நாடு கடத்தப்பட்டிருந்த பின்னர் இப்பொழுதுதான் திருச்சிக்கு வந்திருந்தார். மார்த்தீன்ஸ் சுவாமிகள் நாடு கடத்தப்பட்டிருக்கும்பொழுது முக்தியுடையான் சும்மா இருக்கவில்லை. கோயம்புத்தூருக்குச் சென்று அங்கே, பண்டார சுவாமி பல்த்தஸாரின் வருகைக்காக முன்னேற்பாடுகள் செய்துகொண்டிருந்தார். இவைகளெல்லாம் நடந்துகொண்டிருக்கும்பொழுது தான் பல்த்தஸார் சுவாமிகள் தன்னுடைய திட்டங்களைப் பெரிய சுவாமியாரின்முன் சமர்ப்பிப்பதற்காகத் திருச்சிக்கு வந்தார்.

பண்டாரசுவாமி பல்த்தஸார் த கோஸ்தா இதற்குள்ளேயே ஒரு புகழ் வாய்ந்த அப்போஸ்தலராக மாறி விட்டார். நாடெங்கும் பண்டார சுவாமிகளின் பெயர்: அத்தகையர் திருச்சிராப்பள்ளிக்கு வருகிருர் எனச்

செய்தி வந்ததுதான் தாமதம்: அந்த ஊர்க் கிறிஸ்தவர்களெல்லாம் ஒரே அமோக வரவேற்பு அளிக்கத் துணிந்தனர். அவரும் வந்தார். வரவேற்பும் நிகழ்ந்தது. மார்த்தீன்ஸ் அடிகளைக் கண்டு பேசிவிட்டுத் திரும்பினர்.

அடுத்தநாள் மார்த்தீன்ஸ் சுவாமி மீண்டும் ஒரு கைதியானர்: ஏன்? அவர் என்ன குற்றம் செய்தார்? அவர் பரங்கி: என்ன? பரங்கியா? ஆம், அவர் அந்தணக் கிறிஸ்துவர்களை கீழ்ச்சாதியினருடன் உறவு கொள்ளச் செய்கிருர்:....நடந்தது இதுதான். பண்டார சுவாமிகளை வரவேற்கும்பொழுது அந்தணக் கிறிஸ்துவர்களும் கீழ்ச்சாதிக் கிறிஸ்துவர்களும் ஒன்ருகக்கூடி நின்றனர். இதைக்கண்ட அவர்களுடைய இந்து உறவினர்களுக்குப் பொறுக்கவில்லை. அரசினரிடம் சென்று இல்லாததும் பொல்லாததும் கூறினர். இதுதான் காரணம்.

பல்த்தஸார் த கோஸ்தா சுவாமிகள் முதன்முதலில் அவர் சாதிபேதத்தின் முக்கியத்துவத்தை நன்கு அறியவில்லை. அவர் சில முறைகளில் இவைகளுக்கெதிராகப் பேசியதுண்டு. சில சமயங்களில் அந்தணரை மற்றவருடன் கலக்கவும் கூறியுள்ளார். இதுவே மார்த்தீன்ஸ் சுவாமிகள் கைதியானதற்குக் காரணம்.

எனினும் பண்டார சுவாமிகளைப் பிழைகூறிப் பயனில்லை. இவர் வந்ததற்கும் மற்றவர் வந்ததற்கும் மிகவும் வேறுபாடு உண்டு. அவர்களெல்லாம் அஞ்சி நடுங்கி அடிமேல் அடியெடுத்து எச்சரிக்கையுடன் நடந்தனர். இவர் வரும்பொழுது இந்தியத் திருச்சபை பழம்விட்டுச் சுமை தாங்காது பூமியைத் தொட்டுக்கொண்டிருந்தது. எனவே அவர் பறித்துப் போடுவதிலேயே நின்ருரேயொழிய அவர்களுடைய பழைய முயற்சிகளைச் சற்றும் கருதவில்லை. ஆனல் சில ஆண்டுகள் கழிந்தபின்னர் அவற்றை நன்கு அறிந்து கொண்டார்.

அவருடைய திட்டங்களைப் பற்றி பேசினேம்; அவை என்னவென்று கூறவில்லை; திருச்சபையின் பழங்கள்

பற்றிக் கூறினோம்; அவற்றை மிகவும் விளக்கவில்லை. தத்துவபோதகரின் வரவாற்றுக்கும் இவரது வாழ்விற்கும் தொடர்பு என்னவென்றும் கூறவில்லை. இவை மூன்றையும் விளக்கிவிட்டு இந்த அதிகாரத்தை மூடுவோம்.

தத்துவபோதகர் மதுரை மிஷனைத் தொடங்கி அதில் திருச்சபை என்னும் வித்திட்டார். இந்த வித்து சென்ற முப்பத்தாறு ஆண்டுகளில் பெரிய மரமாகி பழுத்து நிற்கிறது. இந்தப் பழங்கள் எத்தனை என்பதை வாசகர் போகப்போக அறிந்துகொள்வார். 'இந்தப் பழங்களை கொய்யவே த கோஸ்தா சுவாமிகள் திட்டங்களிட்டார். பல ஊர்களுக்கும் தனது ஞான உபதேசியார்களை முதலில் அனுப்பி அவ்வூரைத் தன் வருகைக்காகத் தயாரிக்கச் செய்வது, பின்னர்தான் அவர் அந்த அந்த ஊர்களுக்குச் சென்று தேவையானவற்றை நிறைவேற்றி வேண்டிய ஞானஸ்நானங்கள் கொடுப்பது. இது முழுதும் அவருடைய வேலையன்று. அந்த ஞான உபதேசியார்களைத் தயாரித்தது தத்துவபோதகர். அந்த மக்களை உண்மையான தேவோக்கியதமான வேதத்தின்பால் ஈர்த்தது தத்துவபோதகர். அவரது வேலையின் பலன்களை அறுப்பவர் பண்டார சுவாமிகள்.

முதல் ஊரை இவரிடம் கொணர்ந்தது முக்தியுடையான். ஈரோட்டிற்கும் சத்தியமங்கலத்திற்கும் இடையே ஓர் ஊரில் பல வேளாளர் இருந்தனர். அவர்களிற் பலரது மனத்தையும் தன் உறுதியான விசுவாசத்தினுலும், அவ்விசுவாசத்தினல் விளைந்த புண்ணிய நடத்தையாலும், தன் கல்வி கேள்விகளாற் விளைந்த சொல்வன்மையாலும் ஆண்டவர்பால் ஈர்த்தார். அவர்களனைவரும் அவருடன் பல்த்தஸார் சுவாமிகளைப் பார்க்க வந்தனர். வந்தவர்களை வரவேற்று, அறிவுரைதந்து, அவர்களுடன் சவரிராயரையும் அனுப்பிவைத்தார்.

சவரிராயர் அந்த ஊரில் வேலை முடிந்தவுடனே திரும்பி வந்துவிடவில்லை. பக்கத்து ஊர்களையும் போய்ப்

பார்த்தார், சென்றவிடமெல்லாம் அவர்க்கு வரவேற்பே. சில நாட்களில் ஞானஸ்நானம் விரும்பியவரின் தொகை ஓங்கி நிற்பதைக்கண்ட சவரிராயர் அவர்களைக் கருருக் குக் கூட்டிச்சென்றார். கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது என்பது போன்று, அடிகளே அவர்களைச் சந்திக்க பாதி வழி வந்தார். எல்லோரும் சேர்ந்து சத்தியமங்கலத் திற்கு அருகேயிருந்த ஓர் ஊரில் தங்கினர். அங்கே பண் டார சுவாமிகள் இரண்டு வாரங்கள் காலையிலும் மாலையி லும் ஞான உபதேசங் கற்றுக்கொடுத்தார். 150 பேர் ஞானஸ்நானம் பெற்றனர்.

இவ்வாறு தன் ஞான உபதேசியாரின் உதவியுடன், அவர் மதுரைக்கு வந்த மூன்றாண்டுகளில், பல்த்தஸார் த கோஸ்தா சுவாமிகள் மதுரை, தஞ்சாவூர், சத்தியமங் கலம் ஆகிய இடங்களில் இரண்டாயிரத்து ஐந்நூறு பேருக்கு ஞானஸ்நானம் கொடுத்தார். இவ்வாறு ஏறிக் கொண்டே சென்றது கிறீஸ்துவர்களது எண்ணிக்கை. 1647-ம் ஆண்டில் திருச்சியில் மட்டும் மூவாயிரம் கிறீஸ் துவர்கள் இருந்தனர். தஞ்சாவூரில் நூற்று எண்பது பேர். சத்தியமங்கலத்தில் முன்நூற்று இருபது பேர். இன்னும் ஐந்தாண்டுகள் கழித்து, 1652-ஆம் ஆண்டில் மட்டும் மூவாயிரம்பேர் மதுரை மிஷனில் கிறீஸ்துவர்களானார்கள். அடுத்த ஐந்தாண்டுகளில் ஒன்பதாயிரத்து இருநூற்று முப்பத்தி ஒருவர் கிறீஸ்துவர்களானார்கள். 1666-ஆம் ஆண்டில் மதுரை மிஷனில் முப்பத்து இரண்டு கோயில் களும், முப்பத்து இரண்டு சிறு கோயில்களும், பத்துக் குருவானவர்களும் நாற்பதாயிரம் கிறீஸ்துவர்களும் இருந் தனர். பத்து ஆண்டுகள் கழித்து 1676-ஆம் ஆண்டில் அறுபதாயிரம் கிறீஸ்துவர்கள். மிஷன் தொடங்கி ஏறக் குறைய நூறாண்டுகள் கழித்து 1701-ஆம் ஆண்டில் மதுரை மிஷனில் நூற்றைம்பதினாயிரம் கிறீஸ்துவர்கள் இருந்தனர்.[1]

---

1 cfr. P. Dahmen, S. J. "Robert de Nobili Ein Beitrag zur Ceschichte Der Missionmethode Under Indologie" 6; P. 77.

மேற்கூறிய எண்ணங்கள் இங்கே நமக்கு ஓர் உண்மையைக் கூறுகின்றன. 1606-ஆம் ஆண்டுக்கு முன்னர் மதுரையில் ஓர் உள்நாட்டுக் கிறீஸ்துவர்கூட இல்லை. மதுரை முறைகளைப் புகுத்திய பின்னர் 1609-ஆம் ஆண்டில் மட்டும் அறுபத்து மூன்று பேர் கிறீஸ்துவராக மாறினர். 1619-ஆம் ஆண்டில் இருநூறு கிறீஸ்துவர்கள். 1629-இல் சுமார் ஓராயிரத்திற்கு மேற்பட்டனர். இதற்கு மேல் வாசகருக்கு நினைவிருக்கும். மதுரை முறைகளின் வெற்றிக்குச் சாட்சியம் சொல்வது, அவரல்லர், அவருடைய துணைவர்களுமல்லர், அவருடைய பெரிய சுவாமியாரல்லர்; அவரால் மனமாறிய கிறீஸ்துவர்கள், அவர்களது மனதை மாற்றிய தெய்வம்: கிறீஸ்து.

முழு வெற்றியும் காணத் தத்துவபோதகருக்குக் கொடுத்துவைக்கவில்லை. எனினும் 1656-இல் குறைந்தது இருபதினாயிரம் கிறீஸ்துவர்களாவது இருந்தனர். அது அவருக்குத் தெரியும். அவரது சிறந்த அறிவின்மூலம் இன்னும் எத்தனை எத்தனை ஆயிரமோ கிறீஸ்துவர்களாவர் என்று அறிவார். மோட்சத்திலிருந்து 1756-ஆம் ஆண்டில் நிகழ்ந்த, ஒரே ஆண்டில் நிகழ்ந்த, பன்னிரண்டாயிரத்து முன்னூற்று முப்பத்து நான்கு ஞானஸ்நானங்களையும் கண்டு ஆண்டவருக்கு நன்றி கூறியிருப்பார். இதற்கு மேல் தத்துவபோதகரின் வெற்றிக்குச் சான்றும் வேண்டுமோ?

இந்த வெற்றியிலேயும் பேய் கையை வைக்கத்தான் முயன்றது. அதனைக்கூட அனுபவிக்க முடியவில்லை தத்துவபோதகரால். அவரின் முறைகளை முதலிலிருந்து இறுதிவரை எதிர்த்தவர்களிற் சிலர் அப்பொழுதும் இருந்தனர். அவர்கள் அடிகளின் முறையை அறியவும் இல்லை; அறிந்துகொள்ள விரும்பவும் இல்லை. அந்தணர்களின் மதிப்பைப்பெற்று, அதன்மூலம் மற்றூரையும் ஈர்க்கும் மனப்பாங்கை அவர்கள் அறியாமற் போனார்கள். கிறீஸ்துவின் சிலுவையைப்பற்றித் தவறான எண்ணங்கொண்ட அவர்கள் இறுதிவரையும் தத்துவபோதகருக்குச் சிலுவைகளை

அளிக்கத் தவறவில்லை. பல்த்தஸார் சுவாமிகளின் கடிதங்களைக் கண்டு இத்தகையர் மகிழ்ச்சியால் பொங்கினர். இம்மகிழ்ச்சி கிறீஸ்து வென்றார் என்பதனாலன்று, ஆனால் தத்துவபோதகர் தோற்றார் என்ற தவறான கருத்தினால் விளைந்த தவறான மகிழ்ச்சி.

தத்துவபோதகர் ஆரம்பித்து, அறுவடை செய்யவிருக்கையில் ஞானஸ்நானம் கொடுக்கக்கூடாது எனக் கட்டளை இட்டது யார்? பதினைந்து ஆண்டுகளாக அவரது கைகளைக் கட்டிப்போட்டபின்னர் நாற்பது பேரையே மனந்திருப்பினார் என்பது பொய்யாகக் கணக்குக்கூறிப் பழிகாணுவது ஏன்? ஒரே ஆண்டில் அறுபத்துமூன்று அந்தணரை மனந்திருப்பினாரே, எந்தப் பண்டார சுவாமிகள் அந்தணரை மனந்திருப்பினார்?

மாரமங்கலம், சத்தியமங்கலம், சேலம், திருச்சி, மதுரை, இங்கே முதன்முதலில் கிறீஸ்துவைக்காட்டி அங்கே திருச்சபையை நிலவியது யார்? பல்த்தஸார் சுவாமிகளுக்கு உதவி செய்த ஞான உபதேசிமார்களை மதமாற்றிப் பயிற்றுவித்தது யார்? தான் நிற்கும் இந்தப் பாறை, இந்தப் பூமி, இந்த அடித்தளம் இல்லாவிட்டால், இந்தக் கட்டடம் எங்கே போகும்?

மார்த்தீன்ஸ் சுவாமிகளின் கடிதங்கள் உரோமைக்கும் கொச்சிக்கும் பறந்தன, என்றும் போலவே உரோமைப் பெரிய சுவாமியார் எளிதில் உண்மையை அறிந்துகொண்டார். கொச்சியிலிருந்த எதிரிகளிற் சிலருக்கு மட்டும் இன்னும் புரியவில்லை. மனமுண்டேல் இடமுண்டு. வேண்டாதவருக்கு என் சொல்லினும் செவிடன் காதில் சங்கு ஊதினது போன்றே.

பல்த்தஸார் சுவாமிகளும் தத்துவபோதகரைத் தாங்கி எழுதினர். இந்தப் பண்டார சுவாமிகள் முதலில் வந்த சில ஆண்டுகள் ஒன்றும் அறியாமல் தவறான வகையில் கடிதங்கள் எழுதினார். ஆனால் வர வர அந்தணச் சந்நியாசிகளின் அவசியத்தைப் புரிந்துகொண்டார். இவர்

அவ்வாறு புரிந்துகொண்டதன் விளைவாகத் தத்துவ போதகரின் பெருமையையும் புரிந்துகொண்டார். 1646-ஆம் ஆண்டில் அவர் பின்வருமாறு எழுதுகிறார்: யாரேனும் அந்தணச் சந்நியாசிகளை நிறுத்தும்படி கூறினால் தயவு செய்து கேட்கவேண்டாம். ஏன் நிறுத்த வேண்டும்? மிகவும் கடினமான வாழ்வா? கடினவாழ்விற்கு எந்தச் சேசு சபைத் துறவி அஞ்சினார்? ஜப்பானியரின் நெருப்புக்களுக்கு அஞ்சாத அவர்கள் ஏன் மதுரையின் புலால் மறுப்பிற்கும் கடின வாழ்விற்கும் அஞ்சவேண்டும்? மாறாக எங்கெங்குக் கடினவாழ்வு, துன்பம் போன்றவையோ அங்கெல்லாம் சேசு சபையினர் உண்டன்றோ!

"சில அந்தணர் நம் மதம் சேர மறுக்கின்றனர் என்பது தத்துவ போதகரின் முறைகளை நிறுத்துவதற்கு ஏற்ற காரணம் அன்று. மாறாக. அம்முறைகள் இத்தகைய இடத்திற்கு மிகவும் அவசியம்....கிறீஸ்துவ அந்தணர்கள் உள்ளனர் என்பதே அந்த அந்தணச் சந்நியாசிகளை வைத்திருக்க ஏற்ற காரணம். இந்த அந்தணச் சந்நியாசிகள் மதமாற்றிய அந்த அந்தணரது அடிபின்பற்றியே மற்றச் சாதியினர் மதம் மாறுகின்றனர்." பின்னர் தத்துவபோதகரைப்பற்றி எழுதுகிறார்:

"அவர்தான் இந்த மிஷனின் அடித்தளம். இதுவரைக்கும் நிகழ்ந்துள்ள புதிய ஞானஸ்நானம் எல்லாம் அவரின் முயற்சிகளாலேயே விளைந்தன. அவருடைய நூல்கள் புதுக்கிறீஸ்துவர்களுக்கு மட்டுமல்ல மற்றக் குருவானவர்களுக்கும் பயன்படவல்லன. நடையிலும் மொழியிலும், அமைப்பிலும் கருத்திலும் சிறந்து விளங்குகின்றன அந்நூல்கள். வேதசாத்திரம் எழுதுவதில் அவரது சாத்திரப் புலமையும், அமைப்புப் புலமையும் விளங்குகின்றன.[1]

---

[1] "இவை வீண் வார்த்தைகள் அல்ல. பல்த்தஸார் சுவாமிகள் போர்த்துக்கீசிய மொழியில் மொழிபெயர்த்த தத்துவபோதகரது ஞான உபதேசம் இன்றும் செண்பகனூர் கல்லூரியின் ஆயப்புரையில் (Archives) காணப்படும்.

பல்த்தஸார் சுவாமிகள் முதலில் பிழை செய்தமைக்குக் காரணம் அவர் மற்றவர்களைப் போலத் தத்துவபோதகரிடம் ஒரு மாதங்கூடத் தங்கி எதுவும் பயிலவில்லை. அவருடைய நூல்களை ஆராய்ந்து பயின்ற பின்னர், தத்துவபோதகரின் ஆழ்ந்த அகன்ற அறிவையும் சிறந்த அனுபவத்தையும் அறிந்து வியந்து போற்றத் தொடங்கினர். போற்றுவதுடன் நிற்காது அவருடைய கொள்கையின் படியே எஞ்சிய சில ஆண்டுகள் வாழ்ந்து வரலாயினர். தத்துவபோதகர் மிஷனைவிட்டு யாழ்ப்பாணத்திற்குச் சென்ற பின்னர் மார்த்தீன்ஸ் அடிகள் இறந்துவிட்டார். அப்போது த கோஸ்தா அடிகளே மிஷனின் பெரிய சுவாமியாரானர்.

எனவே மேற்கூறிய இருவரின் சான்றும் நமக்கு உண்மையை எடுத்துக்காட்டுகின்றன. அவர்களின் சான்றுமட்டுமன்று, வரலாறே இதற்குச் சான்று பகர்கிறது. சேசு சபையை 1773-ஆம் ஆண்டில் அதன் எதிரிகள் தங்கள் தங்கள் நாட்டைவிட்டு ஓட்டினர். அவர்கள் பாப்பரசரையும் வற்புறுத்தினர். அவரும் சேசு சபை என்ற சபையே இல்லாமற் செய்தார். பல ஆண்டுகள் சேசு சபை ஐரோப்பாவில் காணப்படவில்லை. ருஷ்யாவில் மட்டும் சிலர் அப்பொழுது அங்கே அரசாண்ட அரசியின் விருப்பப்படி சேசு சபை என்ற பெயருடன் வாழ்ந்திருந்தனர். போர்த்துக்கல் நாட்டிலும் சேசு சபை ஒடுக்கப்பட்டது. எனவே இந்தியாவிலும் சேசு சபையினர் காணப்படவில்லை.

பின்னர் அறுபது ஆண்டுகள் கழித்து மீண்டும் சேசு சபை உயிர்பெற்றெழுந்தது. தன் தெய்வீகத் தலைவரைப் போன்றே மரித்து உயிர்த்தெழுந்தது. அதன் பின்னர் முதன் முதலில் பெர்ட்ரண்டு சுவாமிகளும் அவருடைய துணைவர்களும் இங்கு வந்தனர். அவர்கள் கூடியவரை அடிகளின் முறைகளைப் பின்பற்றினர். ஆனல் பரங்கி சுவாமிகள் உருவில் வந்தனர். அவர்களால் ஓர் அந்தணரையும் அடிகளைப்போல மனமாற்றக்கூட வில்லை. ஏதோ

இங்குமங்கும் சில அந்தணர், நம் மதம் சேர்ந்தனர். பின்னர் ஐரோப்பியப் பண்பாடு பரவவே தத்துவபோதகரின் முறைகள் கைவிடப்பட்டன.

எனினும் இந்த நூற்றுண்டில் முன்போல மதமாற்றங்கள் உண்டா? தென் இந்தியக் கத்தோலிக்கத் திருச்சபையில் ஈடுபாடுடையவர் அஃதவ்வாறு இல்லை என ஒத்துக்கொள்வர். அவருடைய முறைகளின் வெற்றிக்கு நேற்றும் (1607—1756) இன்றும் (1840—1960) சான்று பகர்கின்றன. அன்று 1756-ஆம் ஆண்டு மட்டும் மதம் மாறியவரில் வயது வந்தவர் 2485 பேர். இன்று ஆண்டு தோறும் வயது வந்த மதமாறுபவர் எத்தனை பேர்?

இன்று மதமாற்றம் குறைவாக இருப்பதற்குக் காரணம் தத்துவபோதகரின் முறையைப் பின்பற்றுதே என்பது எமது கருத்தன்று. காலச்சக்கரம் சுழன்று வருகிறது. சாதி பேதம் தகர்ந்து வருகின்றது. எனவே அடிகளின் முறைகள் (1607-ஆம் ஆண்டில் இருந்தவாறு) ஒரு வேளை பயன் தராமற் போகலாம்.

1840-லிருந்து 1900-ஆம் ஆண்டுவரை இருந்த நிலையும், 1600-ஆம் ஆண்டிற்குப்பின் இருந்த நிலையும் தத்துவ போதகருக்குப்பின் உடனே வந்த ஆண்டுகளோடு ஒப்பிடப்படின் அவரது வெற்றிக்குச் சான்று பகர்கின்றன.

இவ்வெற்றி மதுரைக்கு மட்டுமே என நினைக்கவேண்டாம். அடிகள் அதனைக் கனவிலும் நினைக்கவில்லை. அவரது உள்ளத்தில் நின்றவர் இந்தியர் அனைவருமே. அவர்கள் அனைவருக்காகவுமே இந்த முறைகளைக் கொண்டுவந்தார். இந்த முறைகளைத் தக்க மாற்றங்களுடன் பயன்படுத்தியிருந்தால் எத்தனையோ மக்கள் கிறீஸ்துவின் திருப்புகழ் பாடிக்கொண்டிருப்பர்.

இன்றும் தக்க மாற்றங்களுடன் அவைகளைப் பயன்படுத்தினுல் அம்முறைகள் மிகவும் பயன் தரும். மாற்றங்கள் தேவை; இன்றியமையாதவை. அந்தணரது மதிப்பு

குறைந்துவருகிறது; கீழ்ச்சாதியர் மேல்சாதியர் என்ற வேறுபாடு குறைந்து வருகிறது. பூணூலிற்காகச் சண்டையிடத் தேவையில்லை. காவியுடை அணியவேண்டிய தேவையுமில்லை. வடமொழி பயிலுங் கடமையுமில்லை. தென்னிந்தியாவில் தமிழறிந்தாரது தரம் அதிகரிக்கிறது. மக்கள் தாய்மொழியைத் தம் பண்பாட்டைப் பெரிதும் போற்றுகின்றனர்.

இவர் போற்றும் பண்பாடு உபநிடதங்களிலே கூறப்பட்ட பண்பாடு அன்று. அக்கிரகாரத்தை மையமாக வைத்துச் சுழன்ற பண்பாடு அன்று. இது வள்ளுவரது காலம்; புறநானூற்றின் காலம். சிலப்பதிகாரம், கம்பன் காவியம் போன்றவற்றின் அறிவு அவசியம். இன்றையப் பண்பாடு தமிழ்நாட்டிலும் சரி, இந்தியா முழுவதும் சரி, கற்றறிந்தாரை மையமாகக் கொண்டுள்ளது. "உடையார் முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றூர் கடையரே கல்லாதவர்" என்ற வண்ணம் கல்வி முதலிடம் அடைந்துள்ளது.

என்வே அடிகளின் முறைகள் அப்படியே இன்றைக்கு உதவா. அவைகளில் மாற்றம் வேண்டும். அடிகளின் அடிப்படையான கொள்கைகள் இரண்டு: 1. கூடிய வரையில் மதமாற்றத்தை எளிதாக்கவேண்டும் 2. மக்களின் உயர்ந்தோரை, மக்களுக்கு வழிகாட்டும் அந்தச் சிலரை நம்பால் ஈர்க்கவேண்டும்.

இந்த இரண்டு கொள்கைகளும் யாவருக்கும், எக்காலத்திற்கும், எந்த இடத்திற்கும் பயன்படும். இந்த இரண்டையும் நிறைவேற்றவே நாமனைவரும் முயல வேண்டும்.

எதன்பொருட்டு இந்தியாவில் மதமாற்றம் குறைவு? ஏன் மற்றவர்கள் கிறீஸ்துவர்களாக அஞ்சுகின்றனர்? கிறீஸ்து, கிறீஸ்தவன் என்ற சொல் நம் இந்து நண்பர்கட்கு என்ன பொருள்படும்? இந்தக் கேள்விகட்குச் சரியான விடை காணுதல் இன்றியமையாதது. விடை கண்டு அவர்களை நம் சமயத்தில் சேராது தடுப்பவற்றை ஆராய்ந்து அகற்ற முயல்வதே தத்துவபோதகரின் முறை.

அன்று தத்துவபோதகர் காலத்தில் உயர்ந்தோராக, மக்களுக்கு வழி காட்டுபவராக விளங்கியவர்கள் கோயிலை ஆண்ட அந்தணரும் நாட்டை ஆண்ட நாயக்கரும். இன்று மக்களுள் உயர்ந்தோராக எல்லோராலும் மதிக்கப்படுவர் யார்? அறிவியல் அறிஞர்களா? ஆளும் நிபுணர்களா? பேசும் மேடைப்பேச்சாளிகளா? மக்களுக்காக சிந்திக்கும் சிந்தனையாளர்களா? இதனைக் கண்டுபிடித்தல் முதற் கடமை. அவரில் ஒருவராக நாம் மாறுதல் மற்றொரு கடமை. இதுவே தத்துவ போதகரின் முறை. அர்ச். சின்னப்பரின் முறை. அந்தணருக்கு ஓர் அந்தணரானர். நாம் அத்தகையோராக மாருவிடில் அவர்களை மனந்திருப்ப முடியாது; அவர்கள் மனந்திரும்பாவிடில் இந்தியா மனந் திரும்பாது.

முதல் உண்மை எவருக்கும் எளிதில் விளங்கும். கிறீஸ்துவைத் துறக்காமல், அவர்களுக்கு உள்ள தடைகளை கூடியவரையில் அகற்றினர். பரங்கி என்னும் பெயரைக் கிறீஸ்துவன் என்பதிலிருந்து பிரித்து எறிந்தார். பண் பாடுபற்றியவை அனைத்தையும் அனுமதித்தார். இவ்வாறு தடைகளை நீக்குவதே தத்துவபோதகரது முறை. இம் முறையின் வெற்றியே அவரது வாழ்வின் வெற்றி. அவரது வாழ்வின் வெற்றி மதுரை மிஷனின் வெற்றி. மிஷன் சேசுவிற்காக ஆனதால், அவரது வெற்றி சேசுவின் வெற்றி.

## 19

## அணைந்த தீபம்

*1645*-ஆம் ஆண்டு ஒரு மரக்கலம் யாழ்ப்பானத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. கடலில் அமைதி நிலவியது. காற்று மெதுவாகக் கலத்தைத் தள்ளிச் சென்றது. துடுப்புக்கள் அசைய அசைய கலமும் இந்தியாவின் கரையைவிட்டுத் தூரமாகவே சென்று கொண்டிருந்தது.

கலத்தில் அமர்ந்து இந்தியாவையேக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருக்கிறார் ஒரு வயோதிகர். அவரின் கண்களில் நீர் சுரந்து நிற்கிறது. சுமார் அறுபத்தெட்டு வயது இருக்கும். இவ்வயோதிகர் யார்? இவருக்கு விளைந்த துன்பம் என்ன? இவர் நாடோடியாக அனுப்பப்பட ஒரு குற்றவாளியா? அல்லது பொருள் தேடும் பொருட்டு உற்றார் நாட்டாரைத் துறந்து, தம் தாய்நாடு நீத்துப் பிறநாடு செல்லும் வாணிபரா? அன்றி, கிறீஸ்துவின் செஞ்சொற்களை எந்நாடும் பெற்று இரட்சணியம் பெறுமாறு தந்நாடு நீத்துச் செல்லும் வேத போதகரா?

மூன்றும் அல்ல, அவர்தான் நம் தத்துவபோதகர். தள்ளாத வயதில் உடல் நோயுற்று அதன் பொருட்டுப் பெரிய சுவாமியாரால் யாழ்ப்பாணத்திற்கு அனுப்பப்பட்டார். அவர் வாழ்நாள் முழுவதும் துன்பத்தால் நிறைந்திருந்தது. அலர் கிளம்புவதற்குச் சற்று முன்னர்தான் மறுமுறையும் பண்டாரங்கள் எதிர்ப்புக் கலகம் மூட்டினர். நாயக்க மன்னவனையே பேட்டி கண்டு அமைதி நிலவச்செய்தார். உரோமைப் பெரிய சுவாமியாருக்கே எழுதி மதுரை மிஷனிலேயே தன் உயிரைவிட அனுமதிக்கும்படி வேண்டியிருந்தார். "தயவு செய்து என்னை மிஷனிலிருந்து பிரிக்காதேயுங்கள்" என்று கெஞ்சி எழுதினார். தன் ஒரே மகனை விட்டுப் பிரிய மறுக்கும் தாயின் அழுகைக் குரல் போன்றிருந்தது அவர் குரல். விட்டெலெஸ்கி சுவாமிகளும் அவரது உள்ள ஆவலை அறிந்து அனுமதித்தார்.

யாழ்ப்பாணத்தில் சில ஆண்டுகள் இருந்தார். அவர் அங்கேயும் புத்தகங்கள் வரைந்த வண்ணமாகவே இருந்தார். பின்னர். 1648-இல் மைலாப்பூர் வந்தார். அங்கும் அவரது அலுவல் தொடர்ந்தது. பலரும் அவரைக் கண்டு கடவுளைப்பற்றிப் பேச வந்தனர். அங்கும் புத்தகங்கள் வரைந்த வண்ணமாகவே இருந்தார். இறுதியில் 1656-ஆம் ஆண்டில் தம் புத்தகங்களை எல்லாம் முடித்தார். பின்னர்...

"நான் தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் வரைந்துள்ள அனைத்தும் நம் தாயாகிய திருச்சபையின் கருத்துக்களுடன் ஒத்திருக்க வேண்டுமென்பதே என் விருப்பம். தவறி, அதனது கருத்துக்கு முரண்பாடாக அல்லது தவறான, அல்லது அதன் கருத்துக்களைத் தாக்கிப் பேசும் ஏதேனும் இருப்பினும், திருச்சபையை அக்கருத்தைத் திருத்துமாறு வேண்டுகின்றேன். என்னுடைய நூல்களைத் திருப்பி எழுதும், அல்லது மொழிபெயர்க்கும் அனைவரையும் இந்த என்னுடைய இறுதிக்கூற்றை ஒவ்வொரு ஓலைக்கட்டின் இறுதியிலும் வைக்குமாறு வேண்டுகிறேன்" என்று பொருள்படும் வசனத்தை எழுதித் தந்தார்.

அதன்பின்னர் நோய்வாய்ப்பட்டார். படுத்த படுக்கையாகயிருந்தார். அவரது வாழ்வின் ஒளி மங்கிக்கொண்டிருந்தது. அவரது நெற்றியில் சாவின் படலங்கள் தோன்றிக்கொண்டிருந்தன.

ஆம் அங்குக் குறுகிக்கிடக்கும் தத்துவபோதகர் ஒரு பேரறிஞர். உரோமைப் பேரறிஞர். இந்தியக் கலைகளில் வல்லுநர். தமிழ், தெலுங்கு, வடமொழி போன்றவற்றில் சிறந்துவிளங்கிய முதல் ஐரோப்பியர். ஐரோப்பியருக்கு மறைந்துகிடந்த வேதங்களையும், உபநிடதங்களையும், இந்து நூல்களையும் கரைத்துக்குடித்த வல்லுநர். அவரது மொழித் திறனுக்கும் அவரது சமய அறிவிற்கும் அவருடைய நூல்களே சான்று.

பின்வருபவனவற்றை சங். பிரேன்ஸா அவர்களின் கடிதத்திலிருந்து எழுதுகிறோம்:

"தத்துவபோதகர் இந்நாட்டின் மூன்று மொழிகளிலும் பெற்றுள்ள புலமை இந்திய அறிஞர்களை வியப்புறச் செய்கின்றது. இம்மொழிகளின் ஆழ்ந்த அகன்ற அறிவில் மற்றவர்கள் இவரை மேம்பட நேரினும் இவர் தம் சொல்லழகிலும், வலிமையிலும் சொற்பெருவிலும் ஒருவராலும் இவரை வெல்லமுடியாது.

"சமஸ்கிருதத்தில் அவர் திருமணத்திற்காகவும் இன்னும் மற்றச் சடங்குகளுக்காகவும் பல செபங்கள் அமைத்தார். அவை இன்றும் பயன்பட்டு வருகின்றன. இம்மொழியில் அவர் புனைந்த பல நூல்களும் 1640-ஆம் ஆண்டில் மதுரையில் அவர் சிறைப்பட்டபொழுது இழந்துபட்டன. அவற்றில் 'தேவமாதாவின் ஜீவனம்' என்பது ஒரு நூல். இது பாக்களால் அமைக்கப்பட்டிருந்தது.

"தமிழில், நாங்கள் பயன்படுத்தும் எல்லாப் புத்தகங்களையும் அவரே இயற்றினர். இவற்றில் மிகவும் முக்கியமானது இவரது ஞான உபதேசம். அதை வாசிப்பவர் யாவரும் அதுவே இதுவரையில் திருச்சபையில் எழுதிய ஞான உபதேசங்களில் எல்லாம் சிறந்தது என்பதை ஏற்பர். பொருளமைப்பிலும் சரி, பொருள் தேர்விலும் சரி, அவர் அளிக்கும் காரணங்களின் வன்மையிலும் சரி, அவைகளின் தெளிவிலும் சரி, அவருக்கு ஆண்டவர் குறிப்பாக அளித்த உதவி உள்ளங்கை நெல்லிக்கனியெனத் தெற்றென விளங்கும்.

"தூஷணத்திக்காரம் என்ற நூலில் நம் சமயத்திற்கு எதிரான தாக்குதல்களைத் தாக்கிப் பேசுவதுமன்றி, அத்தாக்குதல்களையே பயன்படுத்தி அந்தச் சமயங்களைத் தாக்குகிறர். அந்நூலின் இறுதியில் வேதபோதகக் குருக்களுக்குச் சில புத்திமதிகள் கூறுகிறர்.

"நித்திய ஜீவனம் என்ற நூல் அவருடைய மற்ற நூல்களைவிட நடையிலும் மொழியிலும் சிறந்து விளங்குகிறது.

"எத்தனையோ சல்லாபங்கள் இயற்றி உள்ளார். அவை அனைத்தையும் நான் வாசிக்கவில்லை.

"அவருடைய புத்தகங்களில் இல்லாத தேவ இரகசியம் இல்லை; அவர் நீக்காத ஐயம் இல்லை. உண்மையிலேயே அவருடைய நூல்களைத் தவிர வேருெரு நூல் ஒரு குருவானவருக்கு இந்நாட்டில் தேவையில்லை. இத்தகைய

நூல்கள் அனைத்தையும் கண் பார்வை இழந்த பின்னரே எழுதினர் என்பது நமக்கு வியப்பளிக்கின்றது.

"தத்துவ போதகரின் நூல்கள் அனைத்தும் ஓலைகளில் எழுதப்பட்டுள்ளன. இருபது ஓலைக்கட்டுகள் உள்ளன. இன்னும் காகிதத்தில் எழுதப்படவில்லை. இன்னும் அச் சேறவில்லை. அழியாமல் அவைகளைப் பாதுகாத்தல் அவசியம். அந்நூல்கள் எல்லா மொழிகளிலும் மொழி பெயர்க்கப்படத் தகுதியானவை. இவருடைய புத்தகங்களை வாசிப்பதற்கென்றே தமிழ் மொழியை ஒருவர் கற்பினும் அது வீணன்று."

இன்னும் ஆத்தும நிருணயம், அஞ்ஞான நிவாரணம், திவ்விய மாதிரிகை, புனர் ஜென்ம ஆட்சேபம், ஞான சஞ்சீவி, ஞான தீக்ஷணம், ஞான விளக்கம், சங்கோப முறை அனுசாரம்[1] போன்றவைகளை எழுதியுள்ளார்.

தத்துவபோதகர் அறிஞர் மட்டுமல்லர்; அவர் ஒரு வேதபோதகரும்கூட. வேதத்தைப் போதிப்பதற்காகவே அவர் ஓர் அறிஞர் ஆனர். வேதத்தைப் போதிப்பதற்காகவே அவர் இத்தாலியை நீத்தார்; இந்தியா புகுந்தார்; மதுரையை அடைந்தார்; காவியுடை ஏற்றார்; போர் புரிந்தார்; இறுதியில் அதற்காகவே வாழ்ந்து இதோ மரணப் படுக்கையில் உள்ளார்.

தத்துவபோதகர் ஓர் அறிஞர் மட்டுமல்லர்; ஒரு வேத போதகரும் மதுரை மிஷனின் ஸ்தாபகர் மட்டுமல்லர்; அவர் எல்லாவற்றிற்கும் மேலாக ஒரு புனிதர்.

அவர் ஒரு புனிதர்; மனிதரின் கண்களிலன்று, இறைவனின் கண்களில். சேசுவின்மேல் அவர் வைத்த நேசமே அவரை இத்துன்பக் கடலில் பாதுகாத்தது; ஏன், இத்துன்பக் கடலை இன்பத்துடன் ஏற்கச் செய்தது? சேசுவிற்காக இந்தியாவின் மூடிய கதவைத் திறக்கத்

---

[1] பின்னர் கூறிய மூன்றும் நிச்சயமாக அவர் எழுதியவை தானு என்று புலனுகவில்லை.

துணிந்தார். சேசுவிற்காக இம்முயற்சிகளில் விளைந்த துன்பங்களை ஏற்றார். சேசுவின் அன்பில் இவர் ஈடுபட்டு இருந்ததே அவரது வாழ்வைச், சேசுவின் வாழ்வை ஒத்திருக்கச் செய்தது. அனலிற்பட்ட இரும்பு அனல்மயமாவதுபோல இறையில்பட்ட இவர் அவர் மயமானார்.

இது நம் ஆண்டவரால் அவருக்கு அளிக்கப்பட்ட வரம். அவ்வரத்தை ஒத்து அவரும் மறு கிறீஸ்துவாக வாழ்ந்தார் என்பதில் ஐயமில்லை. சேசுக்கிறீஸ்து என்ற சொல் இரண்டு பொருளைத் தன்னுள் அடக்கும்; கிறீஸ்து என்றால் பிதாவால் அபிஷேகம் செய்யப்பட்டவர்; சேசு என்றால் உலகை இரட்சிக்க வந்தவர். சேசுக்கிறீஸ்து நாதர் பிதாவால் சிநேகிக்கப்படுபவர், பிதாவைச் சிநேகிப்பவர்; பாவிகளை நேசித்து அவரை மீட்பவர். சுருங்கச் சொல்லின் 1. எல்லாவற்றிற்கு மேலாக சர்வேசுரனைச் சிநேகிப்பாயாக 2. தன்னைத்தானே சிநேகிக்குமாப்போல மற்றெல்லோரையும் சிநேகிப்பாயாக என்ற இந்த இரண்டு கட்டளைகளுக்குக் கீழ்ப்படிதலேயே உருவாகக் கொண்டு எழுந்தவர். இந்த இரண்டு கட்டளைகளையும் முறையாகக் கீழ்ப்படியும் ஒவ்வொருவரையும் மறு கிறீஸ்து எனக்கூறலாம். இறைவன்மேல் வைத்த அன்பும், இந்து நண்பர்கள்மேல் கொண்ட அன்பும், தத்துவபோதகரை மறு கிறீஸ்துவாக மாற்றியது என்பதில் ஐயமுண்டோ!

புனிதர்கள் என்பார் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட புண்ணியத்தையோ ஒரு குறிப்பிட்ட அலுவலையோ செய்து முடிப்பவர். தேவ சித்தமே இப்புண்ணியத்திலேயோ, இவ்வலுவலிலேயோ காணப்படுவது. அர்ச். இஞ்ஞாசியாரது அலுவல் சேசு சபையை நிறுவிப் பதிதருடன் போராடி வெற்றிக் கொள்வது. அவ்வாறே அர்ச். ஸ்தனிஸ்லாஸ் தன் இளவயதிலேயே மிகவும் புண்ணியவாளனானார். அர்ச். பெர்க்மான்ஸ் அருளப்பர் தன் சபையின் ஒழுங்குகளைப் போற்றி அனுசரித்ததின் மூலம் பீடங்களில் அமரும் பேறுபெற்றார். புனித மரிய வியான்னி குருக்

களின் அலுவல்களைச் சரிவர செய்ததின் மூலம் புனிதரா னார். புனித பெர்நதெத்தம்மாள் லூர்துமாதாவின் செய் தியையும், புனித மார்கரீத்தம்மாள் சேசுவின் திரு இருத தயத்தின் செய்தியையும் இவ்வுலகிற்கு அறிவித்துப் புனி தராயினர். புனித கத்தரீனம்மாள் அவிஞ்ஞோனிலிருந்து பாப்பரசரை இத்தாலிக்குக் கொணர்ந்து திருச்சபையின் ஒற்றுமைக்கு வழிகோலினார். இத்தகைய வேலைகளை வெற்றியுடன் நிறைவேற்றும் வழியிலேயே புனிதத்தன்மை பெறுகின்றனர். சுருங்கக்கூறின் தேவ சித்தத்தை நிறை வேற்றுவதே புனிதத்தன்மை.

புனிதத் தன்மையின் மற்றொரு சின்னம் துன்பம். துன்பம் நிறைந்த வாழ்வு, ஆண்டவருக்காகத் துன்பம் நிறைந்த வாழ்வு, பொறுமையும் துன்பமும் நிறைந்த வாழ்வு; ஒரு புனித வாழ்வின் தவறாத குறி. நம் ஆண்டவரின் வாழ்வு, ஆதித் திருச்சபையின் வாழ்வு, திருச்சபையின் வரலாறு, பெரும் புனிதர்களின் வரலாறு கள் இதனையே உணர்த்தும். புனித சிலுவை அருளப்பர், புனித மார்கரீத்தம்மாள், புனித இஞ்ஞாசியார் போன்ற வரின் வாழ்க்கைகள் இதனையே உணர்த்தும். தத்துவ போதகரின் வாழ்வு துன்பம் நிறைந்த வாழ்வு. பொறுமை யும் துன்பமும் நிறைந்த வாழ்வு. மற்றவருக்காக ஆண்ட வர் பொருட்டு ஏற்றுக்கொண்ட துன்பம் நிறைந்த வாழ்வு. சிலுவையின் நிழல் அவரது வாழ்வில் பெரும் பகுதியின் மேல் விழுந்தது. சிலுவை புனிதத்துவத்தின் சின்னம். சேசுவைப் பின்பற்றுபவர் தம் சிலுவையைத் தூக்கிக் கொண்டு பின்பற்றவேண்டும். சேசுவைப் பின்பற்றுவதே புனிதத்தன்மை. சிலுவை அதன் பொய்யாக்குறி.

தத்துவபோதகர் ஓர் அறிஞர், ஒரு வேதபோதகர், ஒரு புனிதர். இம்மூன்றையும் இணைத்துக் குறிப்பது ஒளி. "நானே ஒளி" என்றார் கிறீஸ்து. "நீங்கள் உலகின் ஒளியா யிருக்கிறீர்கள்" என்றும் கூறினார். ஒளி இருளை அகற்றும். அவ்விருள் அறியாமை இருளாயிருக்கலாம், அஞ்ஞான இரு ளாயிருக்கலாம், அல்லது பாவத்தின் இருளாயிருக்கலாம்.

"நானே உண்மை" என்று கூறிய கிறீஸ்துவை அறிந்து, அவரின் மற்ற உண்மைகளை அறிபவர், அறிந்து போதிப்பவர், அறிஞர்; அறியாமை இருளை அகற்றுபவர். கிறீஸ்துவே உண்மைக்கடவுள் என்பதை உலகெங்கணும் போதிப்பவர், வேதபோதகர்; அஞ்ஞான இருளை அகற்றுபவர். பாவத்தின் இருளைத் தன் வாழ்விலிருந்து அகற்றி மற்றவர் வாழ்விலிருந்தும் அகற்ற உதவுபவர், புனிதர்; பாவ இருளை அகற்றுபவர். எனவே தத்துவபோதகர் உலகின் ஒளியாயிருந்தார். அவ்வொளி இறக்கும் வரையில் சுடர் விட்டுப் பிரகாசித்தது. அது இருளில் பிரகாசித்தது. மற்றத் தீபங்கட்கும் ஒளி தந்தது. சேந்தமங்கலம், திருச்சி, மதுரை ஆகிய இடங்களில் அது பல தீபங்களை நிறுவியது.

1656-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 16-ஆம் நாள் தத்துவபோதகர் இறைவன் திருப்பதம் சேர்ந்தார். உலகிற்கு ஒளி அளித்த அத்தீபம் அணைந்தது. மறைந்த மறையாளரை மயிலாப்பூரில் அடக்கஞ் செய்தனர். ஒரு பெண்ணிற்கு நினைவு மண்டபமாக தாஜ்மகாலை எழுப்பிய இந்தியரோ, போர்வீரருக்கு நினைவு மண்டபம் எழுப்பிய ஐரோப்பியரோ, அந்த மகாலுக்கு மண்டபம் எழுப்பவில்லை. ஏன் அவருக்கு ஒரு மண்டபம் தேவையில்லை. மறந்துவிடாமல் இருப்பதற்குத்தானே ஒரு நினைவு மண்டபம். அவர் இந்தியக் கிறீஸ்துவர்களின் உள்ளத்தில் உறைகின்றார். அவரை மறத்தல் அரிது. ஒவ்வொரு கிறீஸ்தவ இந்தியனும் தத்துவபோதகரின் நினைவுச்சின்னம்.



